# ஆராய்ச்சி

**Aaraaichi**



காலாண்டுப் பத்திரிகை

ஆசிரியர்

**நா. வானமாமலை**

மலர் 3 இதழ் 1

# உள்ளே

**இலக்கியம்**



**வரலாறு-சமூகவியல்**



**மானிடவியல்**



**சிறப்புப்பகுதி**




**ஆராய்ச்சி**

ஆசிரியர், நா. வானமாமலை, எம். ஏ., எல். டி.

**சந்தா விபரம்:—** இந்தியா: ஆண்டுச் சந்தா ரூ. 10—00
இலங்கை: ,, ரூ. 15—00
மலாய்சியா, சிங்கப்பூர் ,, ரூ. 15—00

**தனிப்பிரதி விலை ரூ. 3-00**

258, திருச்செந்தூர் ரோடு, பாளையங்கோட்டை, திருநெல்வேலி-2.

# கட்டுரையாளர்கள்

**நா. வானமாமலை,** ஆசிரியர் 'ஆராய்ச்சி'

**கா. சுப்பிரமணியன்** எம். ஏ. குமர குருபரன் கலைக் கல்லூரி, ஸ்ரீவைகுண்டம். சிறுகதைகள், இலக்கிய விமரிசனக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

**எஸ். தோத்தாதிரி** எம். ஏ., பரமகல்யாணி கல்லூரி ஆழ்வார்குறிச்சி. ஆராய்ச்சியில் இவருடைய கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

**தி. சு. நடராசன்** எம். ஏ., இந்துக்கல்லூரி, திருநெல்வேலி. இலக்கிய விமரிசனக் கட்டுரைகள் எழுதியுள்ளார்.

**பி. எஸ். கே. பக்தவத்சலன்** பி. எஸ்சி., பி. டி., இவருடைய 'ஊற்றில் மலர்ந்தது' என்ற குறுநாவல் தாமரையில் வெளிவந்துள்ளது.

**வெ. கிருஷ்ணமூர்த்தி** ஆராய்ச்சியில் இவருடைய கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

டாக்டர் **தெ. பொ. மீனுட்சிசுந்தரனுர்** முன்னுள் துணைவேந்தர், மதுரைப்பல்கலைக்கழகம்.

டாக்டர் **சுநீதிகுமார் சட்டர்ஜி** தேசியப் பேராசிரியர், கல்கத்தா. சாகித்ய அக்காடெமித் தலைவர். 'இந்திய இலக்கிய வரலாறு' என்னும் நூலை எழுதியுள்ளார்.

டாக்டர் **ரொமீலா தப்பார்** வரலாற்றுத் துறை, ஜவஹர்லால் பல்கலைக் கழகம், டெல்லி. வரலாற்று ஆய்வுக்கட்டுரைகள் பல எழுதியுள்ளார்.

புலவர் **நா. தியாகராசன்,** புகார் நகர அகழ்வாராய்ச்சிச் சான்றுகளை இலக்கியச் சான்றுகளோடு ஒப்பிட்டு எழுதியுள்ளார்.

**கே. கே. என். குருப்.** வரலாற்றுத்துறை. கள்ளிக்கோட்டைப் பல்கலைக் கழகம், வரலாறு, சமூகவியல் ஆய்வுக்கட்டுரைகள் எழுதியுள்ளார்.

டாக்டர் **கே. வி. ராமன்,** டெபுடி சூப்பரிண்டெண்டிங் ஆர்க்கியாலஜிஸ்ட், இந்திய அகழ்வாராய்ச்சித்துறை, சென்னை. இவருடைய கட்டுரைகள் ஆராய்ச்சியில் வெளிவந்துள்ளன.

# ஆராய்ச்சி

மலர் 3 ] [ இதழ் 1

8 வது இதழோடு ஆராய்ச்சிக்கு இரண்டு ஆண்டுகள் நிறைவு ஆகிறது. முதல் இதழ் வெளிவந்து இரண்டு ஆண்டுகளும் எட்டுமாதங்களும் ஆகிவிட்டது. நான்கு இதழ்களை ஓராண்டாகக் கணக்கிட்டால் மூன்று ஆண்டுகள்தான் ஆகிறது. பிற ஆய்விதழ்களை நோக்கும் பொழுது இதுவோர் பெரிய முன்னேற்றமே. ஆய்விதழ்களில் சில இரண்டு இதழ்களோடு வெளிவர இயலாமல் நின்று விட்டன. சில ஆய்விதழ்கள் காலாண்டுக்கு ஒரு முறை வெளிவரத் திட்டமிட்டு இரண்டாண்டுகளில் இரண்டு மூன்று இதழ்களை வெளியிட்டுவிட்டு நின்று போயின. மிகவும் பணபலமுள்ள ஓர்சர்வதேசியத் தமிழியல் ஆய்வுப்பத்திரிகை படாடோபமாக 2 இதழ்கள் வெளியிட்டு நின்றுவிட்டது.

இவ்விதழ் 9வது இதழ். ஆண்டென்றால் மூன்றாம் ஆண்டுத்துவக்கம். சென்ற இரண்டு ஆண்டுகளில் இவ்விதழ் சில அறிவுத் துறைகளில் ஆய்வுக் கட்டுரைகளை வெளியிட்டுள்ளது. பல துறைகளிலும் தமிழ் மொழியை நுழைய விட்டிருக்கிறது. இலக்கியம், சமயம் ஆகிய துறையில் தேங்கிக் கிடந்த தமிழை, தற்கால அறிவுத் துறைகளில் பாயவிட்டிருக்கிறது. நாம் தமிழ்ப் பணிமட்டும் செய்யவில்லை. அறிவுப் பணியும் செய்கிறோம். நவீன அறிவியல் உலக மக்களின் பழமையான சிந்தனைகளையெல்லாம் புரட்சிகரமாக மாற்றிவருகிறது. இது இயற்கை விஞ்ஞானத் துறைகளில் மட்டுமல்லாமல், சமுதாய அறிவியலிலும் டார்வின் காலமுதல், எங்கல்ஸ்,கார்டன்சைல்டு,மாலினுவ்ஸ்கி முதலிய மானிடவியல், சமுதாயவியல் விஞ்ஞானிகளுடைய சிந்தனைகள் தற்பொழுது எல்லா அறிவியல்களையும் பாதித்துள்ளன. இலக்கியம், வரலாறு, பண்பாடு ஆகிய சிந்தனைத் துறைகள் அதற்கு விலக்கல்ல. எனவே தமிழ்ப் பண்பாட்டையும், இந்தியப் பண்பாடுகளையும் இன்றைய சமுதாய — மானிடவியல் ஆய்வு முடிவுகளின் வெளிச்சத்தில் அவற்றை மறுமதிப்பீடுகள் செய்ய ஆராய்ச்சி முயன்று வருகிறது. பழமையில் தேங்கி புதுமையான இன்றைய அறிவியல் உலகிற்கு வரத் தயங்கும் தமிழ் ஆய்வையும், வரலாற்று ஆய்வையும், பண்பாட்டையும் ஆராய்ச்சி, அறிவியல் வளர்ச்சியின் அகன்ற களத்திற்கு அழைத்துவரச் செயல் புரியும். நமது பழமையை இன்றைய வளர்ச்சி பெற்ற விஞ்ஞான முறையியல்களால் துருவி ஆராய்ந்து, சமய, இன, பழமைப்பற்று வக்கிரங்களில் இருந்து விடுவித்து, இயற்கை விஞ்ஞானங்களைப்போல, சான்று தேடுதல், பகுத்தாய்தல், ஒப்பிட்டு ஆய்தல், தருக்கரீதியாக அனுமானித்தல் போன்ற ஆய்வு முறைகளைப் பயன்படுத்தி ஆராய்ந்து உண்மையை நிறுவ முயலும்.

பசித்தவன் பழங்கணக்குப்பார்த்த கதையை நாம் அறிவோம். தற்காலத்தின் பொருளாதார, அரசியல், பண்பாட்டுப் பிரச்சினைகளைத் தீர்க்க முடியாதவர்கள் தான், பிரச்சினைகளை மறந்து தாத்தா தாசில் பண்ணிய கதையில் மனம் ஆழ்ந்து போவார்கள். பழம்பெருமை தற்கால வளர்ச்சிக்குத் துணைசெய்யும் வரைதான் அதனை மதித்தல் வேண்டும். பழமைக்குத் திரும்ப ஆசைப் படுகிறவர்கள், தற்காலப் பிரச்சனைகளுக்கு ஈடு கொடுக்க முடியாமல் அழிந்து போவார்கள். அவர்கள் பண்பாடும் மறக்கப்படும். புதிய பண்பாட்டு வெள்ளத்தில் பழமையின் சுவடுதெரியாமல் போய்விடும். வாழ்க்கையில் முன்னோர்படைத்த பண்பாடு பயன்படாமல் பூமியினடியில் அகழ்வாராய்ச்சியாளரது மண்வெட்டிகளுக்கு மட்டும் அகப்படும் பண்டை நாகரிகங்கள் பல. அவ்வாறு அவை அழிந்ததற்குக் காரணம், தற்கால அறிவியல், பண்பாட்டு வாழ்க்கை வளர்ச்சிக்கேற்ப பண்டைப் பெருமையுடைய நாகரிகங்கள் வளர்ச்சி பெருமையும், தற்கால அறிவியல் சமுதாய வளர்ச்சிக்குப் பண்டைய சமுதாயங்களின்

பண்பாடும், அறிவியல் வளர்ச்சியும், சமுதாய வளர்ச்சியும் ஈடு கொடுக்க முடியாமற் போனதுமேயாகும்.

இவ்வரலாற்றுண்மைகளிலிருந்து கற்றுக் கொண்டு நமது நாடு உலக அறிவியல் நிலைக்கும், பண்பாட்டு நிலைக்கும் தன்னை உயர்த்திக்கொள்ளுதல் வேண்டும். தனது பண்பாட்டில் புதுமை புகுவதையும், பழையன கழிவதும் அவசியம். பழமையில் தற்காலத்திலிருந்து வருங்காலத்திற்கு முன்னேறுவதற்குரிய கூறுகளை வயப்படுத்திக்கொண்டு, புதுமையின் முன்னேற்றப் பாதையில் விமான வேகத்தில் செல்ல நாம் முயலுதல் வேண்டும்.

ஆராய்ச்சி இந்நோக்கத்தை நோக்கி முன்னேறும்.புதுத்துறை ஆய்வுகளைவெளியிடும். பழமையை இன்றைய அறிவு வளர்ச்சி நிலையிலிருந்து நோக்கி, மதிப்பிட்டு, இன்றைய வளர்ச்சிக்குப் பயன்படுத்த முயலும்.

இவ்விதழிலேயே,இம்முயற்சியின் ஆரம்பக் கூறுகளைக் காணலாம். தற்காலத் தமிழ் நாவல்களை முழுமையாக, படைப்பின் சமுதாய அடித்தளத்தோடும், பண்பாட்டுச் சூழலோடும் சேர்த்து, அதன் இலக்கியப் போக்கையும்,குறிக்கோளையும் மதிப்பிட முயலுகிற நான்குகட்டுரைகளை வெளியிடுகிறோம். இம்முறையியல் தமிழுக்குப்புதிது. தமிழ் இலக்கிய விமர்சனத்தில் 'இலக்கியத்தரம்' என்ற பெயரில் விமர்சக மன்னர்கள் குண்டாந்தடியைப் பிரயோகித்து வருகிறார்கள். அவர்களுடைய வக்கிரங்களுக்கேற்ப இந்த குண்டாந்தடி சுழலும்.இவ்விதழின் கட்டுரைகளில் படைப்புகளை சமூக அடித்தளத்தோடும்,பண்பாட்டுச் சூழலோடும் கொண்டுள்ள தொடர்புகளை, வெளிப்படுத்தி, படைப்பாளியின் இலக்கியப் படைப்பு முறையியலையும், நோக்கையும் ஆய்வாளர்கள் ஆராய்ந்துள்ளார்கள்.

நம்முடைய குறிக்கோளுக்கு ஏற்ப, இந்திய வரலாற்றிலுள்ள வக்கிரப் பார்வைகளைப் பற்றியும், அவற்றை அறிந்து ஒதுக்கிவிட்டு, நேரான விஞ்ஞான முறை வரலாற்று ஆய்வு முறைபற்றியும் ஓர் கட்டுரை வெளியிடப்படுகிறது.ரொமீலா தப்பார் அவ்வக்கிரங்களை எடுத்துக்காட்டுகளோடு இனம்காட்டி, அறிவியல் முறையான வரலாற்று ஆய்வு இன்னதென்று சுட்டிக்காட்டி அதன்படியே இந்தியாவின் வரைபடிமமாகச் சித்தரித்துக்காட்டியுள்ளார். மூன்று கட்டுரைகளில் முதல் கட்டுரை இவ்விதழில் வெளியாகியுள்ளது. இன்னும் இரண்டு கட்டுரைகள் தொடர்ந்து வெளியாகும்.

தமிழக வரலாற்று ஆதாரங்களைத் திரட்டி வெளியிடுவதும், அவற்றிலிருந்து நமது வரலாற்றை முறையாக புனர்நிர்மாணிப்பதும் நமது நோக்கம். இவ்விதழிலேயே இம்முயற்சி துவங்குகிறது. புகார் பற்றிய கட்டுரையைப் பாருங்கள். இலக்கியச் சான்றுகளை, அகழ்வியல் சான்றுகளோடு ஒப்பிட்டு ஆராய்ந்துள்ளார்கள். இதுபோன்ற முயற்சிகள் தொடரும்.அடுத்துவரும் இதழ்களில் கொற்கை, வடாற்காடு வீரக்கற்கள், பண்டைக் கேரள வீரக்கற்கள் போன்ற ஆதாரங்கள் ஆராயப்படும்.

இலக்கிய ஆராய்ச்சியும் பெரிதும் வலுப்படுத்தப்படும். சைன பௌத்த இலக்கியங்கள், தற்கால இலக்கியம், இலக்கிய விமரிசன ஆய்வுகள் ஒவ்வொரு இதழிலும் இடம்பெறும்.

செய்திகள், சிந்தனைகள் என்ற பகுதியில் நமது இதழ் ஈடுபட்டுள்ள ஆய்வுத்துறைகளில் புதிதாகக் கண்டுபிடிக்கப்படும் உண்மைகளை வெளியிட்டு அவற்றின் மீது ஆசிரியர் கருத்துக்களும் கூறப்படும்.

அட்டைப்படம், ராஜராஜன், கருவூர்தேவர் இருவரது உருவப்படங்கள். இதுகுறித்து ராஜராஜனைப்பற்றிய தொல்பொருள்கள் என்ற கட்டுரையில் படியுங்கள்.

இனி இதழின் உள்ளேயும் ஆய்வுக்கட்டுரைக்குத் தொடர்பான படங்கள் வெளியிட முயலுவோம் இவ்விதழில் புகாரில் அகப்பட்ட பண்டைய காசுகள்,சம்பாபதிகோயில், தெய்வம் முதலியன வெளியிடப்படுகின்றன.

நோக்கம் பெரிது.முயற்சியும் பெரிதாயிருக்க வேண்டும். உங்கள் ஆதரவு அதைவிடப் பெரிதாயிருக்கும் என நம்புகிறன்.

**நா. வானமாமலை**

*செய்திகள் கருத்துக்கள்*

# ராஜராஜ தேவனைப் பற்றிய தொல்பொருள்கள்

**நா. வானமாமலை**

பல்லவர் பேரரசுக்குப் பின்னர் தமிழ்நாடு உள்ளடக்கிய ஒரு பேரரசை நிறுவியவன் ராஜராஜதேவன். தமிழ் நாட்டுச் சிற்றரசர்களையும், முடிமன்னர்களையும், வென்று ஓர் தமிழ்ப் பேரரசை நிறுவி, அதனைக் கேரளத்திலும், மைசூரின் ஓர் பகுதியிலும், ஆந்திரத்திலும் விரிவடையச் செய்தவன் ராஜராஜன். அவனது மகன் ராஜேந்திரன் கங்கை வரையிலும் படையெடுத்துச் சென்றான். சாவகம் ஆகிய தீவுகளையும் வென்றான். ஆனால் அவனது புகழ் இவற்றால் எல்லாம் நிலைத்திருக்கவில்லை. அவனைப் போன்றேஇந்தியாவில்படைவலிமையால்பேரரசு நிறுவியபல மன்னர்கள் இருந்தனர். சந்திரகுப்த மௌரியனும், சமுத்திரகுப்தனும், ஹர்ஷதேவனும், சதகர்ணியும், புலிகேசியும், விக்கிரமாதித்தனும், மகேந்திரவர்மனும் அவனது மகன் நரசிம்மவர்மனும், அவன் மரபில் உதித்த நந்திவர்மர்களும், கேரளமன்னன் குலசேகரனும், பாண்டிய மன்னர்கள் குலசேகர பாண்டியனும், சுந்தரபாண்டியனும், விஜயநகர ராயர்களும், முகலாயச் சக்கரவர்த்திகளும், பாபர் முதல் ஔரங்கசீப் வரை படைவலிமை கொண்டு வலிமை குன்றிய அரசுகளை வென்று பேரரசு நிறுவி, சில நூற்றாண்டுகள் அவர்களும், அவர்கள் வழிவந்தோரும் ஆண்டிருக்கிறார்கள்.

அவர்களுள் சிலர் கலைகளும், சிற்பமும் நிலைத்து நிற்பது கண்டு தங்களது புகழை நிலையாக்கிக் கொள்ளக கலைகளுக்கும், சிற்பங்களுக்கும் ஆதரவு தந்தார்கள். மாமல்லபுரத்துச் சிற்பங்கள் மகேந்திரவர்மன் புகழையும், தஞ்சைப் பெருங்கோயில் ராஜராஜன் புகழையும் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன.

ராஜராஜன் தனது புகழையும், தனது சமய நம்பிக்கைகளையும், தான் அமைத்த தான தருமங்களையும், அவற்றிற்கென விடுத்த நிலங்களையும் நெடுநாள் நிலைத்திருக்கச் செய்ய விரும்பினான். சமய ஆர்வத்தாலும், புகழார்வத்தாலும் ஆயிரக்கணக்கான சிற்பிகளுடைய வேலைத்திறனாலும், கைவன்மையாலும் கோயில் கட்டுவித்தான். கலைகளின் வளர்ச்சிக்கு அவனது புகழார்வமும், சமய நம்பிக்கையும் காரணங்களாயிருந்தன. கோயிலில் சமயக் குரவர் சிலைகளையும், தெய்வச் சிலைகளையும் செய்து வைத்ததோடு, தனது சிலையையும், தனது பட்டத்தரசியின் சிலையையும் செய்து வைக்கச் செய்தான்.

அதுமட்டுமின்றி பெரிய கோயில் சுற்றுச் சுவரில் ஓவியங்கள் தீட்டுவித்தான். சுந்தரமூர்த்தி நாயனாரும்,சேரமான் பெருமாள் நாயனாரும்,வெள்ளை யானைமீதும்,குதிரைமீதும்அமர்ந்து கைலாயம் செல்லும் காட்சியை வரையச் செய்தான். அவன் போற்றிய நாயன்மாரது கதைகளின் நிகழ்ச்சிகளையும் வரையச் செய்தான். அதனோடு அவனுடைய குருநாதரான கருவூர்த் தேவருக்குப் பின்னால் நிற்பது போலத் தன் உருவத்தையும் வரையச் செய்தான். இவை நிகரற்ற வரலாற்றுச் சான்றுகள். சிலையை இன்று காணோம். ஆனால் சித்திரம் இருக்கிறது. சா. கணேசன் அவர்கள், அச்சித்திரங்கள் கருவூர்த்தேவருடையதும், ராஜராஜனுடையதும் அல்ல என்று கூறுகிறார். ஆனால் உட்சுற்று சுவரில் காணப்படுவதாலும், அவன் காலத்தில் பக்திபாராட்டி, சிலையெடுத்த நாயன்மார் கதைகள் இருப்பதாலும், தன் சிலையை தன் காலத்திலேயே கோவிலினுள் வைக்கச் செய்தவனாதலாலும், அச்சித்திரத்தை அவனே ஆணையிட்டு வரையச் செய்திருக்கக் கூடும் என்றே தோன்றுகிறது.

பெரியகோவில் தவிர வேறு கோயில்களிலும் அவனுடைய சிலைகள் உள்ளன. அவை

சமகாலத்தனவாக இல்லாவிடினும், சமகாலத்து பெரியகோவில் சிலையை மாதிரியாகக் கொண்டு செய்யப்பட்டிருக்க வேண்டும். கும்பகோணத் தருகிலுள்ள திருவிசலூரில் உள்ள கோவிலில் ஒரு சிவலிங்கத்தை ஒரு ஆணும் பெண்ணும் வணங்குவது போன்ற ஒரு சிலையுள்ளது. இது ராஜராஜனும் அவன் மனைவி உலோக மாதேவியாகவும் இருக்கலாம் என்று நீலகண்டசாஸ்திரியார் கருதுகிறார். சிலர் அது பிற்காலச்சிலை என்கிறார்கள். திருநறையூரிலுள்ள சௌடேஸ்வரர் கோவிலில் ராஜராஜன் சிலையென்று நம்பப்படும் ஓர் சிலையுள்ளது. அதில் அவன் ராஜகம்பீரத்தோற்றமுள்ள இளைஞனாகச் செதுக்கப்பட்டுள்ளான். கோவிந்தப்புதூரில் உள்ள கலிங்கஜயேச்சுரர் கோவிலில் ராஜராஜன் சிலையொன்றுள்ளது. கைகூப்பியவாறு தாடியுடையவனாய் ராஜராஜன் சித்தரிக்கப்பட்டுள்ளான். பெரிய கோயிலில் இன்று காணப்படும் ராஜராஜன் சிலை அவன் காலத்தில் மூவேந்த வேளான் என்ற அதிகாரி செய்து வைத்ததாகச் சாசனம் குறிப்பிடும் சிலையன்று என்று நீலகண்ட சாஸ்திரி கருதுகிறார்.

இவ்வாறு அவன் காலத்திய சிலைகளும், அவனுக்குப் பிற்காலத்துப் பழைய சிலைகளும் தஞ்சை மாவட்டக் கோவில்களில் உள்ளன.

அவனைத் தமிழர்கள் மறக்க மாட்டார்கள். தமிழ்ச் சிற்பக் கலைக்கும், எழுத்துருவத்திற்கும், நிருவாக முறைக்கும், தேவார இலக்கியத்திற்கும் சித்தாந்த சாத்திரத்திற்கும் அவன் பணிபுரிந்துள்ளான். அவன் கலைப்பணிக்காக அமர்த்திய நடன மாதர் முறை இன்றில்லை. அவனுடைய நிருவாக அமைப்பு அதாவது பிராமணர், பிராமணரல்லாதாராகிய நிலப்பிரபுக்களின் ஆதிக்க அமைப்பு இன்றில்லை. ஆனால் அவன் கட்டிய கோயிலினால் அவன் வளர்த்த சிற்பக்கலையும், தேவாரத்தால் ஏற்பட்ட மொழிவளர்ச்சியும், வரிவடிவச் சீர்திருத்தத்தால் மொழிக்கு ஏற்பட்ட வளர்ச்சியும் மறக்கவொண்ணாததே.

அவனுடைய சிற்பங்கள், சித்திரங்கள் தேடினால் அகப்படும். அவை நமது வரலாற்று இயலுக்கு இன்றைய புதிய சிலையை விடப் பெரிதும் முக்கியமானவை.

தஞ்சைப் பெரிய கோவில் சித்திரம் முகப்புப் படமாக வெளியிடப்படுகிறது.

---

புதுக் கவிதையில் புதிய போக்கு.



# கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்

நா. வானமாமலை

கனவுகள் உள் ஆழத்தில் உறக்கத்தில் எழுந்து நனவில் முகிழ்ப்பவை. கற்பனைகள் நனவிலேயே தோன்றிப் பறப்பவை. ஆயினும் இவையிரண்டிற்கும் கட்புலனாகாத வேர்கள் சமுதாய உறவுகளே. அவற்றின் தடைகளினால் உள்ளத்தில் வளரும் கனவும், கற்பனையும் சிறைப்படுத்தப்பட்டு வாழ்க்கையின் இன்பமாக மாறிவிடாமல் வறண்டு போகின்றன. வறட்சியைத்தான் மீரா காகிதமாக்கிவிட்டார்போலும்.

தற்காலப் பணஉறவுச்சமுதாயத்தில்வாழ்க்கையின் மதிப்புகளுக்கு அடிப்படையே பணம் தான். அமெரிக்காவில் 5,000 டாலர் யோசனை, 1000 டாலர் அழகு, 10,000 டாலர் பரிசுக்குரிய புத்தகம். 2,000 டாலர் மதிப்புடைய வெண்கலச் சிலை, 20,000 டாலர் வருமானம் தரக்கூடிய அறிவியல் திட்டம்(Project) என்று கலைமுயற்சிகளுக்கும், அறிவியல் முயற்சிகளுக்கும் கலைப் பொருள்களுக்கும் டாலரில்தான் மதிப்பு வைக்கிறார்கள். ஸ்டாலினது மகள் ஸ்வெட்லானாவின் புரளிக் கதைகளை, 7 லட்சம் டாலர் விலை கொடுத்து வாங்கி, அவளது சுயசரிதையாக வெளியிட்டன, அமெரிக்கப் பொய் விலைப் பத்திரிகைகள். பொய்க்குக்கூட விலையுண்டு முதலாளித்துவ உலகின் தலைநகரில்.

மனித உணர்வுகளில் மிகவும் நுண்மையும் அழகும் வாய்ந்தவை, இளமைக்காலக் கனவுகளும் கற்பனைகளும். இவை அழகிய மொட்டுக்கள். மலர்வதற்குரிய தோட்டமின்றி அவை வாடிவிடுகின்றன. தோட்டத்தின் சொந்தக்காரன் பண மதிப்பையேயன்றி அழகைக் காண முடியாத குருடன். இவ்வுணர்வுகளைக் கவிஞர்களும், கலைஞர்களும் போற்றினாலும்,வாடிவிடும் இதனைப் பார்த்து சோகஉணர்வும் கொண்டனர். பண மதிப்புச் சமுதாயத்தில், திருமண உணர்வும் ஓர் பண-உறவே. இதனை நான் விளக்க வேண்டியதில்லை.

எனினும் பண மதிப்பே, வாழ்க்கையின் அடிப்படை மதிப்பாக இருக்கும் ஒரு சமுதாயத்தின் திருமணக் கருத்தையும், மனித உணர்வு மதிப்பை (human value)யே வாழ்க்கையின் அடிப்படை மதிப்பாகக் கருதும் மனித மதிப்புச் சமுதாயத்தின் திருமணக் கருத்தையும் ஒரே ஒரு அனுபவத்தின் மூலம் குறிப்பிட்டுக் காட்டலாம் என எண்ணுகிறேன்.

என்னோடு ஒரு முதிய இந்திய எழுத்தாளர் மாஸ்கோவிற்கு வந்தார். அவர் இளமை முழுவதையும் ஆயுதப் புரட்சி இயக்கத்தில் பங்கு கொண்டதற்காகச் சிறையில் கழித்தவர். 44 வயதில் திருமணம் செய்துகொண்டார். தமது இந்தி இலக்கிய அறிவைப் பயன்படுத்தி நன்றாகச் சம்பாதித்தார். டெல்லியில் வீடு கட்டினார். பையனை இங்கிலாந்தில் வாணிபக் கணக்கியல் கற்க அனுப்பினார். சொந்தக்கார் வாங்கினார். அவருக்கு ஐந்து பெண்கள் உள்ளனர். திருமணமாகவேண்டும். அவருடைய வாழ்க்கைப் பிரச்சினை அது. அவர்களுள் இருவருக்கு கல்லூரிக்

காதல் ஏற்பட்டு அக்காதலர்களையே மணந்து கொள்ள விரும்புகிறார்கள். கல்லூரிக் காதலாயினும்சரி, கட்டி வைக்கப்படும் கணவனாயினும் சரி, அவருடைய சாதியில் வரதட்சணையின்றிக் கலியாணம்செய்துகொள்ள மாட்டார்களாம். இவருடைய வசதிகளைப்பார்த்து அதிக வரதட்சணை கேட்கிறார்களாம். ஒவ்வொரு பெண்ணுக்கும் 20,000 ரூபாய் கலியாணத்திற்காக வேண்டுமாம். அப்படி செலவழித்துவிட்டால் அவருக்கும் அவருடைய மனைவிக்கும், ஒரே மகனுக்கும் வீடுமட்டும்தான் மிஞ்சுமாம். அது 2 லட்சம்தான் பெறுமாம். என்ன செய்வது என்று இவர் கவலைப்படுகிறார். இந்தக் கவலையோடு தான் மாஸ்கோவில் இளம்பெண்களைப் பார்த்து அவர்களுடைய பெற்றோர்களுக்காகக் கவலைப்பட்டார்.

ஒருநாள் எங்களுடைய ரஷ்ய மொழி பெயர்ப்பாளர் ஸெர்கேயிடம் அவர் கேட்டார் "உங்களுக்குச் சகோதரிகள் உண்டா?"

"உண்டு. ஐந்து தங்கைகள்"

"ஐயோ பாவம்" என்று தனது அனுதாபத்தை அவருக்குத் தெரிவித்துக் கொண்டார்.

மொழிபெயர்ப்பாளருக்கு ஒன்றும் விளங்கவில்லை. அவர் தனக்கு அனுதாபம் தெரிவித்ததற்கு காரணம் கேட்டார்.

"இந்த ஐந்து பெண்களையும் மணம் செய்விக்க உங்கள் பெற்றோர்களுக்கு எவ்வளவு செலவாகும் என்றும் நினைத்துத்தான் நான் அனுதாபம் தெரிவித்தேன்" என்றார்.

"கலியாணம் என்றால் பணம் எதற்கு?" என்றார், மொழி பெயர்ப்பாளர், அப்பாவித்தனமாக.

"பின்னே, மணமகனுக்கு வரதட்சிணை, கலியாணச் செலவு, நகைகள், விருந்து"

ஸெர்கேக்கு எதுவுமே விளங்கவில்லை.

"மணமகனுக்கு ஏன் பணம் கொடுக்க வேண்டும்? கலியாணத்துக்கு என்ன செலவு? விருந்துக்கு என்ன? ஒருமாதச் சம்பளத்தில் பத்தில் ஒருபங்கு செலவாகுமா?" என்றார்.

இந்தி எழுத்தாளர் திடுக்கிட்டார். இங்கு ஒரு கலியாணத்துக்கு என்ன செலவாகும்?" என்றார்.

அவர் பதில் சொல்லாமல் உடனே எங்களையுக்ரேனு ஓட்டல் விருந்து மண்டபத்திற்கு அழைத்துச் சென்றார். 25 விருந்தினர்களுக்கு ரிஸெர்வ் செய்யப்பட்ட மேஜைகளைப் பார்த்தோம். மேஜை மீது மதுக்கிண்ணங்கள் இருந்தன. ரஷியனில் "திருமணம்" — "வாழ்க....... ...... (மணமகன், மணமகளின் பெயர்களாக இருக்கலாம்.)

22 பேர் வந்தார்கள். மேசை நாற்காலிகளில் அமர்ந்தார்கள். மணமகன் மணமகள் யார் யாரென்று தெரியவில்லை. அவர்கள் உட்கார்ந்ததும் இரண்டு மலர்ச்செண்டுகளை மணமக்களிடம் நண்பர்கள், கொடுத்தார்கள். அவர்கள் எல்லோருமே சமவயதினர். மணமக்களின் தாய் தந்தையர்கள் வரவில்லை.

மணமக்களைச் சுற்றியிருந்த நண்பர்கள் ஒரு பாடகியை ஏற்பாடு செய்திருந்தனர். அவள் பாடினாள். பிறகு விருந்து. ஒவ்வொருவரும் வெவ்வேறு உண்டிகளுக்கு ஆர்டர் செய்து பணம் கொடுத்தார்கள். மணமகனும் மணமகளும் வாட்கா வாங்கி எல்லோருடைய கிண்ணங்களிலும் ஊற்றினார்கள். எல்லோரும் எழுந்து நின்றார்கள். ஒருமடக்கு குடித்தார்கள். ஒருவன் "கசக்கிறது" என்றான். உடனே எல்லோருடைய கண்களும் மணமக்கள் மீது திரும்பின. மணமக்கள் இறுகத்தழுவி உதடுகளில் முத்தமிட்டனர். மறுபடி ஒருமடக்கு — மறுபடி "கசக்கிறது" என்ற குரல். மறுபடி முத்தம். சில தடவைகளுக்குப்பிறகு மணமகள், "இனிக்கிறது" என்று சொல்லுகிறாள். எல்லோரும் சிரிக்கிறார்கள். பெண்கள் "இவ்வளவு சீக்கிரம் இனிக்கலாமா"? என்று கேட்கிறார்கள். பிறகு நீண்ட நேர ரஷிய விருந்து. பிறகு நடனம்.

ஸெர்கே சொன்னார். கசக்கிறது என்பதைச் சொல்லி, இனிக்கிறது என்று மணமகள் சொல்லும் வரை திருமண நிகழ்ச்சியாம். இனி இவர்கள் பதிவு — அலுவலகத்தில் பதிந்து கொள்ளுவார்களாம்.

“என்ன செலவாகலாம்?”

வாட்காச் செலவு 20 ரூபிள். விருந்தறை வாடகை 5 ரூபிள், விருந்துச் செலவு அவரவருடையது 5 ரூபிள். மணமகளுக்குச் செலவு கிடையாது. பாடகிக்கு ஊதியம் 10 ரூபிள்.

உடை, வழக்கமாகத்தைக்கிற புது உடைகள், ஆபரணங்கள் இல்லை. வரதட்சிணை இல்லை.

பரிசுகள்—உண்டு ஏராளமாக. மணமகன் டெலிவிஷன் தொழிலாளி; மணமகள் ஆசிரியை டெலிவிஷன் தொழிலாளிகள் பரிசளிப்பார்கள். இவளுடைய சக ஆசிரியர்கள் பரிசளிப்பார்கள், தாய்தந்தையர்கள் பரிசளிப்பார்கள், இவர்கள் தனி ஆஸ்டல்களில் வசிக்கிறார்கள், இனி இரண்டு அறை கொண்ட வீட்டிற்குப் போய் விடுவார்கள்.

“இவர்கள் ஏன் கலியாணம் செய்து கொண்டார்கள்?” இந்தி எழுத்தாளர்.

செர்கே, “நாம் ஏன் சாப்பிடுகிறோம்?” என்று கேட்டார்.

“அதுவல்ல; இவர்கள் ஒருவரையொருவர் ஏன் வாழ்க்கைப் பங்கினர்களாகத் தேர்ந்தெடுத்துக்கொண்டார்கள் என்று தெரிந்துகொள்ளவே இக்கேள்வியைக் கேட்டேன்” என்றார்.

“அதுவா? இவன் அவளை நூலகத்தில் சந்தித்தான், அடிக்கடி அவர்கள் சந்தித்தார்கள். அவள் எலெக்ட்ரானிக் விஞ்ஞானம் பற்றி அறிந்துகொள்ளப்படித்தாள். அவனும் படித்தான். சேர்ந்து ஓர் மாலைப்பள்ளியில் எலெக்ட்ரானிக்ஸ் படித்தார்கள். ஒருவரது இயல்பு அடுத்தவருக்குப் புரிந்தது. புரிந்தபின் பிடித்தது. முக்கியமாக அவனுக்குத் தனது தொழிலில் தேர்ந்தவன் என்றும், பிற தொழிலாளருக்கு உதவுபவன் என்றும் புகழ் இருந்தது. அவள் நல்ல ஆசிரியை-சமூக மதிப்புப்பெற்றிருந்தாள். அவளுடைய மாணவ-மாணவியர் அவளைக்கண்டதும் துள்ளிக் குதித்தனர், இத்தகைய தனி—ஆர்வங்கள் - சமூகப் பொறுப்புணர்வுகள் இவற்றைக்கண்டும், தங்கள் உள்ளுணர்வான காதல் சரியான திசையில்தான் செல்லுகிறதென்றும் கண்டு ஒருவரையொருவர் மணந்துகொள்ளத் தீர்மானித்தனர். தீர்மானத்தைப் பெற்றோர்களிடமும், நண்பர்களிடமும் கூறினர். பெற்றோர்கள் மணமகள், மணமகனது தனிப்பண்புகளையும் சமூகப் பண்புகளையும் (individual traits, social traits) பற்றி விசாரித்தார்கள். நண்பர்கள்இங்கு மணவிழாக் கொண்டாடத் தீர்மானித்தார்கள். இந்த விழா மகிழ்ச்சியாக இருக்கவில்லையா?”

“உங்களுக்கு மணமான இருவரில் யாரை யாவது தெரியுமா?” என்று செர்கேயை நான் கேட்டேன்.

“மணமகள் என்னோடு ஆசிரியர் கல்லூரியில் படித்தவள். நன்றாகத் தெரியும்”-செர்கே.

அதற்குள் மணமகள், மணமகனை அழைத்துக்கொண்டு எங்கள் மேசைக்கு வந்தாள். நாங்கள் இந்திய விருந்தினர் என்று காட்ட நம் நாட்டுக் கொடியும், சோவியத் கொடியும் இணைத்து மேசை மீதிருந்தன.

அவள் கேட்டாள், “இந்திய விருந்தினர்களா?”

“ஆம் இவர் பேராசிரியர் வானமாமலை. 25 வருட ஆசிரிய அனுபவம். பண்பாட்டு ஆய்வாளர், கம்யூனிஸ்டு. இவள், லியூபோமோவா மணமகள். இவர் நிகிதாவ்லாடிமாவ், மணமகன்” இருவரும் தங்கள் கையிலிருந்த செண்டுகளை என்னிடம் கொடுத்தார்கள். கைகுலுக்கினார்கள்.

மணமகன் ரஷியனில் ஏதோ சொன்னான். எதிர்பாராதவிதமாக மணமகள் என்னை முகத்தில் முத்தமிட்டாள். செர்கே, ‘நீங்களும்......’ என்றார். நான் அவள் முகத்தில் முத்தமிட்டேன். மணமகன் என்னைத் தழுவி முத்தமிட்டான். நான் அவர்களுக்கு வாழ்த்துக் கூறினேன்,

‘உங்கள் இன்பம் வளர்க. இருவரும் உங்கள் அறிவுத் திறனால் சோவியத் நாட்டிற்குச்சிறந்த பணிபுரிக. கம்யூனிஸத்தைக் நிர்மாணிக்க உங்கள் அறிவுத்திறன் வளரட்டும். கம்யூனிஸ உலகில் வாழ இளஞ் செடிகளை நீங்கள் நட்டுக் கொடுங்கள்’ ரஷியனில் மொழிபெயர்த்தவுடன். எல்லோரும் கைதட்டினார்கள்.

சோஷலிஸ அமைப்பில்மணமுற்காலகனவுக் கற்பனைகளுக்கும் அதாவது காதல் செடியில் அரும்பும் மொட்டுக்கும், மலர்க் கொத்துகளுக்கும், மணவாழ்க்கையாகிற செடிவளரும் நிலத்திற்கும் முரண்பாடுகள் இல்லை. நிலம் வளமான நிலம். கனவு கற்பனை மொட்டுகள் வளருகிற மனிதநேச நிலமே, இச்சமுதாயத்தின் இயல்பான தரை. மனிதமதிப்புகளே, சமுதாயத்தின் மதிப்புகள், அதாவது, காதல், கற்பனை, கனவுகள் எல்லாம். இவை வாடுவதில்லை. மொட்டு மலர்ந்து காய்த்துக் கனிந்து ... ...

இனி நமது கனவு+கற்பனை≈காகிதங்களுக்கு வருவோம்.

நமது சமூக வாழ்க்கையிலிருந்து மீரா தொடங்குகிறார். பாரதி கூறியதுபோல கவிதையில், காப்பியத்தில், புராணத்தில் காதலை ரசிக்கும் தமிழன், கிணற்றோரத்தில், ஆற்றோரத்தில் காதலென்றால் சீறுகிறான். அதனைக் கொன்று பாடைகட்டி அனுப்புகிறான்.

ஆம்; நமது சமுதாய வாழ்க்கையில் திருமணப் பொருத்தம் என்பது ராசிப்பொருத்தம், நட்சத்திரப் பொருத்தம், ஜாதகப் பொருத்தம், சமுதாய உறவுப்பொருத்தம், அதாவது பொருள் நிலைப்பொருத்தம், பிறகு சாதிப்பொருத்தம், அதாவது பொருளாதார நிலை சமமானதாகவும் அல்லது தம்மைவிட ஓர் மட்டம் உயர்வாகவும் சாதி ஏணியில் ஒருபடியாகவும் இருத்தல் வேண்டும்.

மணமகன், மணமகளது தனி இயல்புகள், அதாவது உருவம், ஆர்வங்கள், கனவுகள் கற்பனைகள், அறிவுத்திறன் இவையாவும் முக்கியமான பொருத்தங்கள் அல்ல. அதாவது மனிதப் பண்புப் பொருத்தம் திருமணத்திற்கு முக்கியமான பொருத்தம். எனவே இயல்பான மனிதப் பொருத்தங்களான கனவுகள், கற்பனைகள். மனிதநேசம், காதல் எல்லாம் இளமையின் ஒளிமிக்க உள்ளக்கிளர்ச்சிகளாக இருந்து, அவற்றிற்கு இடமில்லாத சமுதாயத்தில் வேறு பொருத்தங்களுக்கு இடங்கொடுத்து வாடிப் போகின்றன.

இந் நிலையிலிருந்து முன்னுரையை முடிவுரையாக எழுதுகிறார் மீரா.

"என்வேட்கையே,
நீ இவ்வளவு தாமதமாக வந்து
இவ்வளவு விரைவாகப் புறப்பட்டு விட்டாயே!
நீ வந்தபோது இனிமேல்தான் என்வாழ்க்கை
தொடங்கப் போகிறது என்று எண்ணினேன்.

... ... நீயோ முடிவுரை
எழுத வந்திருக்கிறாய்.

என் வேதனை உன் விழிகளை நனைக்கிறது.
என் அந்தரங்கமே,

இதோ உன் சொல்லோவியம் ... ...
நம் உள்ளப்புணர்ச்சிக்குப் பிறந்த உயிரோ
வியம்... ... உன் காலடியில் வைக்கிறேன்"

உள்ளப்புணர்ச்சி மனிதமதிப்புகளால் நிகழ்வது. உடல்புணர்ச்சியாம் திருமணப் பிணைப்பு மனித மதிப்பற்ற தற்காலச் சமூகமதிப்புகளால் நிகழ்வது. மனித மதிப்பு, சமூகமதிப்பால் மிதிபட்டுச் சாகிறது. நல்ல சோக கீதத்தோடு தான் சாகிறது.

இந்த சோக கீதம் எவ்வளவு கம்பீரமாக ஒலிக்கிறது. ஹெலனுடைய வாழ்க்கையைப் போல, அன்னாகரீனாவின் உள்ளத்துடிப்புபோல, ஜூலியத்தின் கீதத்தைப்போல, சகுந்தலையின் ஏமாற்றத்தைப்போல, இந்த மாபெரும் மனித சோக சுமையை தாங்கிக்கொண்டு முகவுரையான முடிவுரை பிறந்துவிட்டது.

பிறகு வாழ்க்கையின் மனிதத்தன்மை வெளியாகும் ஒரு குறுகிய காலத்தின் இன்பம் கிளர்ச்சி, ஒளி முதலியவற்றால் உடலும் உள்ளமும் தூண்டப்பட்டு, கனவு, கற்பனை ஏறிய கவிதைகளாக வெளிப்படுகின்றன.

இது ஐந்திணை அல்லது ஏழுதிணை அகவொழுக்கமன்று.

கனவும், கற்பனையும் உண்மையாகிவிடும் என்று நம்புகிற இளமை எழுச்சி, சமுதாய மதிப்புக்கள் என்ற தூக்குமரத்தைக் காண்பதில்லை.

இன்றுவளர்ந்துள்ள அறிவுநிலையின் பரப்பு, இன்று முன்னேறியுள்ள மனித ஆற்றல் வரம்பு, சோஷலிஸ அமைப்பு, மனித இயல்புகளைத் தாங்கும் விளைநிலமாகவும், மனித ஆற்றலின் விரைவூக்கியாகவும் இருப்பதை அறிந்த அறிவு, இவையாவையும் கலந்து நனவுலக மொழிக் கோவைகளால் கவிதை ஊற்ருகப் பிறக்கிறது. உலகப் புதுக்கவிதை மரபு தரும், படிம உத்தி களால் கனவுகளையும் கற்பனைகளையும் சித்திரங் களாகவும், அகப்படிமங்களாகவும் ரசவாதம் செய்து மீரா அளிக்கும் புதுக்கவிதைகளின் தாக்கம் நமது ரசிகர்கள் உள்ளத்தில் இனிய மலர்களாக மலராமற்போகாது.

இளமைக்காதல் வேறென்றையும் வேண் டாத ஒருமையுணர்ச்சியாக, சில கணங்களாவது உண்மையாக நீடிக்கிற தல்லவா? வெறும் கானல் நீராக இல்லாமல், உள்ளத்தில் நிலை யான பதிவையும் தாக்கத்தையும் ஏற்படுத்தும் மாபெரும் கிளர்ச்சியல்லவா!

"காதல், காதல், காதல்
காதல் போயிற் காதல் போயிற்
சாதல், சாதல், சாதல்"
என்று பாரதி பாடினுர்.

இளமையில் அதுவே மனிதனை இயக்கு சக்தியாக அதனை அனுபவிப்பவருக்குத் தெரி கிறது. இந்த உணர்வு மின்னலையே மீரா இப்படிக் கூறுகிருர்.

மின்னல் இருளின் கனத்தைக் கிழிக்கும் பொழுதுதான் இருளின் அடர்த்தி நமக்குப்புரி கிறது. சுதந்திர வேட்கை கனன்று எரியத் தொடங்கும் பொழுதுதான் அடிமைத்தனத்தின் அசிங்கம் நமக்கு விளங்கத்தொடங்குகிறது. இதனைப்போலவேதான் காதல் என்னும் இனிய நீரோடைபாய்ந்த பின்னர்தான் இளைஞனுக்கு தனது முந்திய வறண்ட, வாழ்க்கையை அறிய முடிகிறது என்று கவிஞர் மீரா கூறுகிருர்.

நீ எனக்குத் தாகவெறி தந்தாய்;
பிறகு தான் —
என் இதயம் வறண்ட நிலமாய்க் கிடந்தது
எனக்குப் புரிந்தது.

துறவு பற்றிப் பேசிப் பெருமைப்படும் நாட்டில், உலக அறிவும் இன்பங்களும் கீழ்த்தர உண்மை யென்றும், வெறுமையையும், உள்ளத்தையும், துழாவுதலை உயர்தர உண்மையென்றும் கருது கிற தத்துவத்தை, சுகத்துக்கு குறைவில்லாதவர் சொல்லிக் கொண்டிருக்கும் இந்நாட்டில், இளங் கோவையும், கம்பனையும், பாரதியையும், ஷெல் லியையும், விட்மனையும் பின்பற்றி. மீரா கூறு கிருர்.

நான் துறவியாகப் போகிறேன்
பற்றுகள் அனைத்தும் முற்றும் நீக்கிப்
பரம்பொருளிடம் மட்டும்
பற்றுவைக்கும் துறவிகளைப்பற்றி
நீ கேள்விப் பட்டிருப்பாய்.
நான்
சகல பற்றுக்களையும் வீசியெறிந்துவிட்டு
உன்மீது மட்டும் பற்று வைக்கும்
துறவியாகப் போகிறேன்.

**வீசியெறிந்து விட்டு**

நான் சகல பற்றுக்களையும்
உன்மீது மட்டும் பற்று வைக்கும்
துறவியாகப் போகிறேன்,

'வீசி யெறிந்ததுவிட்டு' என்ற எளிய சொற் களில் கவிஞர் இளமையின் காதலுணர்ச்சியின் வலிமை முழுவதையும், படிமம், உவமை எதுவு மின்றிக் காட்டி விடுவதில் முழுமையான வெற்றி யடைந்து விடுகிருர்.

மகிழ்ச்சி ஏக்கம், அழகுக்கிளர்ச்சி ஆகிய மனித உணர்வுகளை யெல்லாம், சமுதாயஉணர்வு - உவமைகளால் அகவெளியிட்டுச் சித்திரங் களாக கவிஞர் படைக்கிருர். இதுவோர் சிறந்த உத்தி. அதிலும் ஒருபகுதிமக்களின் தற்கால வேட்கையை, காதல் இன்ப வேட்கைக்கு உவமை கூறும் போக்கு புதுமையாக உள்ளது.

சங்க காலத் தலைவனுடைய காதலில் புகழ்ச்சியிருக்கும். ஆனுல் இப்படித்தான் பேசப் படவேண்டும் என்ற விதியின்படிதான் அவன் பேசுவான். பொங்கும் உணர்ச்சிக்கு புதிய சொற்கால்வாய் அமைத்துக்கொள்ளமாட்டான்.

உலக இன்பத்தைச் சிற்றின்பம் என ஒதுக்கிக் கற்பனையான தெய்வ நாட்டத்தைப் பேரின்பம் என்ற நாட்டில், இந்தப் போலிக் கற்பனையை ஒழிக்கப் பாரதி "எத்தனைகோடி இன்பம் வைத்தாய்" என்று பாடினான். இன்பத்தின் உருவத்தை வரைந்து காட்டும் பொழுது பாரதி,

"காணிநிலம் வேண்டும், முத்துச்சுடர் போல நிலவொளி வேண்டும், பத்தினிப் பெண் வேண்டும் என்று கேட்டான். தமிழகத்தின் அழகுணர்வுச்சிகரங்களில் மிகச்சிறந்தது அது.

தனது மூதாதையை மிஞ்சிவிடுகிறார் மீரா.
"என் மூதாதை ஒருவன்,
பராசக்தியிடம் வரம் கேட்டான்.
காணி நிலம்
மாடமாளிகை
தென்னந்தோப்பு
அது இது என்று வேண்டி
இறுதியில் ஒரு பத்தினிப்பெண்ணைக்கேட்டான்
நான் கேட்டால்
உன்னை மட்டும்தான் கேட்பேன்
உன்னைப் பெற்றால்
உலகத்தில் உள்ள
எல்லாம் பெற்ற மாதிரித்தானே

காதலைப்பற்றிய நவீன சிந்தனைகளைத் தொல்காப்பியத்தில் காண்போர் உள்ளனர். வருங்காலமனைத்திற்கும் ஒரு காதலன் என்ன பேசவேண்டும் என்பதை அவர் சொல்லிவிட்ட தாக வரலாற்றையும், வளர்ச்சியையும் அறியா தவர்கள் தொல்காப்பியர் காலத்திலேயே வாழ்ந்துவிட்டுப்போகட்டும்.

நாம் தொல்காப்பியர் காலத்திலோ, நம்பியகப்பொருள் ஆசிரியர் காலத்திலோ, பாட்டியல் காலத்திலோ வாழவில்லை. ஒன்றிற் குப்பின் ஒன்றாக அகப்பொருள் இலக்கணங்கள் தோன்றியதே, பிற்கால வாழ்க்கையில் புதிய உணர்ச்சிப்போக்குகளும் அவற்றின் வெளியீடு களும் தோன்றியதற்கேற்ப புதிய இலக்கண விதிகள் தோற்றுவிக்குப்படவேண்டிய அவசியம் நேர்ந்தது என்பதுதானே!

தலைவன்தான்ஏற்றமுடையவன். அவனோடு ஊடினாலும், கற்பு அவளை அவனுக்குப் பணியச் செய்கிறது. ஆனால் பிரெஞ்சுப் புரட்சிக்கும், சோவியத் புரட்சிக்கும் பின்தோன்றிய சமத்து வம் என்னும் உயரிய கொள்கைக்காக மக்கள் புரட்சிகளை உருவாக்குகிற காலத்தில் காதலில் சமத்துவம் புகுந்துகொள்கிறது.

"நான் மகரயாழ்;
உன் மணிக்கரம் தீண்டினால் போதும்
என்னால் உனக்குப் பெருமை வரும்
உன்னால் எனக்கு வாழ்வுவரும்
உணர்ச்சிகளின் சமத்துவம் இங்கே விளக்கம் பெறுகிறது.

காதலுக்காக ஏங்கி, அதன் வருங்கால அழிவை எண்ணிக் கவலையுறும் கவிஞர் அக் கொடுமையை வருணிக்க கொடுமைகளில் எல்லாம் கொடுமையான ஏகாதிபத்தியக் கொடு மையை உவமையாகத் தேர்ந்தெடுக்கிறார்

ஏகாதிபத்தின் கொடுமைக்கு இரையாகும்
ஓர்சிற்றரசைப்போல்

வாடி வருந்தும் என் மேனியைப் பார்"
மிகமிகச் சாதாரணமான உவமைகள் வருமிடம் பொறுத்து ஒளிபெற்றுச் சிறப்படைகின்றன.

மடிநிறைய ரோஜா மலர்களைப்
பறித்து வைத்திருக்கும்
தோட்டக்காரன் மகள் போல்
என்மனம் நிறைய உன் நினைவுகளைச்
சேர்த்து வைத்திருக்கும் மகிழ்ச்சியில்
மயங்கி வருகிறேன்

தோட்டக்காரன் மகள் ரோஜாவைச் சேகரிக்கி றாள். அது அவளுக்கு சொந்தம் என்ற மயக்கம். சமுதாய விதியின்படி அது தோட்டச்சொந்தக் காரனுக்கல்லவா சொந்தம். அழகுணர்வில் 'மயங்கி' அவள் தன்னுடையதென்று எண்ணு கிறாள். காதலனும் தனது காதலுணர்வில் மயங்கி, சமுதாய விதியான பணமதிப்பை மறந்து இவள் தனக்குச் சொந்தமென்றுஎண்ணி காதல் மலரைக் கொண்டுவருகிறான்.

'காலங்கழித்து வராதே' என்று கூறும் காதலன்,

"தேரோட்டம் முடிந்தபிறகு
திருவிழாக் காணவரும்
ஒரு பக்தனைப்போல
வண்டி போனபிறகு
நிலையம் வந்து சேரும்
ஒரு பயணியைப்போல
நோயாளி மடிந்த பிறகு
மருந்து வாங்கிவரும்
ஒரு சொந்தக்காரனைப்போல"
வாசலில் நின்றவாறு
உன் வீட்டையே நோக்குகிறேன்
எல்லையில் நின்ற வாறு
நாடுகடத்தப்பட்ட ஒரு தேசாபிமானி
தன்நாட்டை ஏக்கத்தோடு பார்ப்பதைப்
போல!

'சில்லான் கைதி' என்ற பைரனின் கவிதையும், 'லஜபதிராய் பிரலாபம்' என்ற பாரதியின் கவிதையும் தேசாபிமானியின் ஏக்கத்தை வருணிக்கின்றன. ஆனல் 'எல்லையில் நின்றவாறு' "தன் நாட்டை ஏக்கத்தோடு பார்ப்பதுபோல" இவை ஏக்கச்சித்திரத்தின் வளர்ச்சியைக் காட்டும் அழகுக்கோடுகள்

புரட்சியில் மலர்ந்த சோவியத் பூமியின்
கூட்டுப் பண்ணைகளைப்
படங்களில் பார்த்து மலைக்கும்
ஓர் இந்திய உழவனைப்போல்
வியப்படைகிறேன்.
அந்த வியப்பில் ஆழ்ந்தபடியே
உன்னை எழுப்பாமல் நிற்கிறேன்.

உழவனது பண்ணை ஏக்கம் (land hunger) பல முற்போக்கு நாவல்களின் கலைப்பொருளாகியுள்ளது. இங்கு 'நில ஏக்கம்' பிடித்த 'இந்திய உழவன் கூட்டுப்பண்ணைகளைப் படங்களில் பார்த்து' மலைக்கிருனும்.

இது அவனது நில ஏக்கத்தை, சமுதாய உணர்வாக உயர்த்தி, துண்டு நிலத்துக்குப் பதிலாக அவன் அடையவேண்டிய சமுதாய உயர்வின் குறிக்கோளாக சோவியத் பண்ணையைக்காட்டி, அந்த உன்னதமான சமுதாய ஏக்கத்தை, வேட்கையை, காதலியின் அழகைப் பார்க்கும்போது காதலன் உள்ளத்தில் எழும் மலைப்புக்கு உவமையாகக் குறிக்கிருர்.

'கிழித்தெறிந்து விடாதே' என்று தன் காதலியை வேண்டிக்கொள்ளும் காதலன் அடுக்கிக்கூறும் உவமைகளைப்பாருங்கள்.

"பாறைமேல் முளைக்கும் புற்களைப் போல்"
"வயல்களில் முளைக்கும் களைகளைப் போல்"
ஒன்றுக்கும் உதவாத துண்டுக் காகிதங்
களைப் போல்"

முதலிரண்டும் பைபிள் உவமைக் கதைகளில் வரும் பழங்கல உவமைகளே. ஆனல் புல்லையும் களையையும் புதுமை ஒளிபாய்ச்சி பொன் முலாம் பூசிவிடுகிறது காகித உவமை.

புற்கள் உலரும், களைகள் கிள்ளி எறியப் படும் ஒன்றுக்கும் உதவாத துண்டுக்காகிதங்கள் கிழிக்கப்படும். மனிதமதிப்பு போற்றப்படாத சமுதாயத்தில், பணமதிப்பையே போற்றும் சமுதாயத்தில் காதல் துண்டுக்காகிதம் தானே! இந்த கசப்பான சோக உணர்வெழுப்பும் உண்மையை மிகச் சாதாரணமான பழைய, புதிய உவமைகளால் வெளிப்படுத்திநூலின் இதயத்தை இங்கே ஒலிக்க வைத்துள்ளார்.

இக்காதலின் முடிவு சோகமாகத்தானே இருக்கவேண்டும். இது சமூக 'விதி'யை மீறிய மனித உணர்வல்லவா? பணமதிப்பை மீறுகிற மனித உணர்வின் எழுச்சியல்லவா? எனவே இதற்கு ஓர் அகால மரண முடிவு உண்டு. இராவணன் மரணம் போல, முத்துப்பட்டன் மரணம் போல, சரக்ரடீசின் மரணம் போல, ஜூலியஸ் ப்ஃயூசிக்கின் மரணம் போல, ஸாக்கோவான்செட்டியின் மரணம் போல, பகத்சிங்கின் மரணம்போல, பாலுவின் மரணம் போல காம்பீர்ய நாதத்தோடு முடிக்கிருர் கவிஞர். இம்மரண காம்பீர்யம் மனித உணர்வுகளை வாழவைப்பதற்காக, மனித விரோத மதிப்புக்களைத் தகர்க்கும் சமுதாய விடுதலைப்போராட்டமாக, மனித மதிப்புக்களை மட்டும் அடிப்படையாக, "Every thing for Man" என்ற மனித சாசனப்பிரகடன முழக்கமாக. நமது உள்ளத்தைத் துடிக்கச்செய்கிறது.

நான் புறப்படப்போகிறேன்
என்று தெரிந்ததும்
என் நேயர்கள் எல்லோரும்
என் அருகில் வருத்தமாக நிற்கிறார்கள்;
"ஜனசக்தியின் ஒளியில் அரும்பி
ஒரு மகாகவியாக
மலர்ந்து கொண்டிருந்த நீ
இடையில் இப்படி
ஒரு பலவீனத்தின் கரம்பட்டுக்
கருகி விட்டாயே!"
"அந்தப்பாதையிலே வளர்த்த
வசீகரமான கனவுகளையும்
கற்பனைகளையும்
விட்டுச் செல்லுகிறேன்"

பண மதிப்பும் ஆதிக்க மதிப்பும் சமூக நியதிகளாகவுள்ள சமுதாயங்களில் இச்சோக ஓலம் காலம் காலமாகக் கேட்டுக்கொண்டிருக்கிறது. ஆனால் இம்மனித உணர்வுகளே கவிதைகளாகின்றன. மனித இதயங்களை ஊக்குவிக்கின்றன.

மனித உணர்வின் இனிமையான, நளினமான காதல் வேட்கை, காதல் கனவு இவற்றால் ஏற்படும் கற்பனைகளே நுண்கலைகளின் பொருள்.

இது மரணத்தில்கூட, காம்பீர்யமான மனித கீதத்தோடு கண்மூடுகிறது. உலக மக்கள் பண மதிப்புடைய சுரண்டல்சமுதாயத்தை நொறுக்கி அதனிடமிருந்து "மனிதனுக்கே எல்லாம்" என்ற முழக்கத்தைப் பொறித்த கொடியேற்றி சோஷலிச சமுதாயத்தைப் படைக்கிறபோது, மிகச் சிறந்த மனித மதிப்பின் வெளிப்பாடான காதல், இயேசு புத்துயிர்பெற்றது போலவும், அதற்குமுன் பருவத் தேவதையான ஆஸிரிஸ் ஆண்டுதோறும் இறந்து மறுபடி பிழைத்தது போலவும் நைல் பெறுகும்தோறும் பலியிடப் பட்ட ஹோரஸ் மீண்டும் மீண்டும் உயிர்த் தெழுந்தது போலவும் மகத்தான வலிமையோடு உயிர்த்தெழும்.

இப்போதைக்கு கனவு + கற்பனை = காகிதங்கள்தான்.

ஆனால் கனவு + கற்பனை = முழு மனித மதிப்பு;என்னும் காலம்,மனிதன் மனித உணர்வுகளோடு முழு மனிதனாக வாழ்கிற காலம் உலக முழுவதற்கும் வரத்தான் போகிறது. அதனை மனிதனே உருவாக்குவான்,

## பூமியின் வயது என்ன?

இத்தலைப்புடைய ஓர் விஞ்ஞானநூலை பாட்ரிக் எம், ஹர்லி என்ற அமெரிக்க விஞ்ஞானி எழுதியுள்ளார். அவர் தரை அமைப்பு இயல், கதிர்வீச்சு உலோகங்களின் தன்மை, தாதுப்பொருள்கள் கிடைக்குமிடங்கள், கடல் தரை ஆய்வு, தற்கால விண்வெளியியல் ஆய்வுகள், வானநூல் ஆய்வுகள் ஆகிய பலதுறை அறிவையும் பயன்படுத்திச் சில முடிவுகளுக்கு வந்துள்ளார். இது புராணக் கருத்துக்களையும், சமயநூல் கருத்துக்களையும் மறுக்கிறது.

நமது உலகிலுள்ள மூலகங்கள், உருண்டை வடிவமாகத் திரண்டது 650 கோடி முதல் 7 கோடி ஆண்டுகளுக்குள்தான் இருத்தல் வேண்டும். சூரியன் 600 கோடி வருஷங்களுக்கும் பக்கத்தில் சுருங்கிக் கோள உருவம் பெற்றது. நமது உலகில் 700 கோடி முதல் 650 கோடி ஆண்டுகள் வரையுள்ளகாலத்தில் இருந்த ஆதி மூலகங்கள் 450 கோடி ஆண்டுகளுக்கு முன் பல்வேறு ரசாயன வழிகளில் இணைந்து பல்வேறு தற்கால மூலகங்களின் ஆவிகளாயின. உலகின் தரை 280 கோடி ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றியது.

தரை தோன்றிய காலத்தில் உயிரிகளோ, அவற்றின் அடிப்படை மூலங்களான கனமூலக் கூறுகளோ தோன்றியதில்லை. —நா. வா.

# மாதவியும் வசந்தசேனையும்

**கா. சுப்பிரமணியன்** எம். ஏ.,

*[மாதவி சிலப்பதிகாரத்தில். வருகிற ஆடல் மகள். வசந்தசேனை மிருச்சகடிகத்தில் வரும் கணிகை. இவ்விரு இலக்கியப் படைப்புகளிலும் மிகுந்த ஒற்றுமையான இயல்புகள் உள்ளன. மாதவியும் வசந்தசேனையும் திருமணத்திற்குத் தகுதியில்லாத சமூகப் பிரிவைச் சேர்ந்தவர்கள். இருவரும் அரசரால் கௌரவிக்கப் பெற்றவர்கள். செல்வச் செழிப்பில் திளைத்தவர்கள். ஒருவனோடு வாழ விரும்பியவர்கள். சாதி ஒழுக்கத்திற்கு முரணான ஆசை கொண்டவர்கள். மனித உணர்வான காதலுக்கும், சாதி ஒழுக்க விதிகளுக்கும் ஏற்படும் முரண்பாட்டில் அவர்கள் சிக்கிக்கொள்ளுகிறார்கள். இம்முரண்பாடுகளை இருவேறு விதங்களில் கவிஞர்கள். தீர்த்துவைக்கிறார்கள். கணிகையர் வாழ்க்கைப் பிரச்சினை பண்டைக் கால இந்தியக் கவிஞர்களைக் கவர்ந்துள்ளது என்பதை இப்பாத்திரப் படைப்புகள் மூலம் காண்கிறோம். கா. சுப்பிரமணியன், இருபாத்திரங்களின் ஒற்றுமை, வேற்றுமைகளையும், அவர்களது வாழக்கைப் பிரச்சினையையும், கவிஞர்களது தீர்வு முறையையும் ஆராய்கிறார்.*

*ஆசிரியர்.]*

1.0 மாதவியும் வசந்தசேனையும் கணிகையரான இலக்கிய பாத்திரங்கள். மாதவி, சிலப்பதிகாரத்தின் காதல் தலைவி. வசந்தசேனை, மிருச்சகடிகத்தின் காதல் தலைவி. இருவரையும் இரு கவிகள்,கற்பனையில் படைத்த சமுதாய வளர்ச்சி நிலைக்கட்டம், ஒருவிதமானதாகவே தோன்றுகிறது. இக்கதாபாத்திரங்களை, அவற்றின் சமுதாய அடிப்படைப்பின்னணியோடு ஒப்பிட்டு ஆராய இக்கட்டுரையில் முற்படுகிறேன்.

1.1 மாதவியும் வசந்தசேனையும் கணிகையர் குலத்தில் பிறந்தவர்கள். கணிகையர் குலம், ஒரு சமுதாய நிறுவனமாக வளர்ச்சி பெற்றுவிட்ட காலகட்டத்தை இவ்வாசிரியர்கள் சித்தரிக்கின்றனர். அவ்வமைப்பின் தோற்றத்தை, சமூக அமைப்பு வரலாற்றின் அடிப்படையில் ஆராய்தல் வேண்டும்.

1.2 சமூக அமைப்பின் பரிணாம வளர்ச்சியைத் தற்கால இனக்குழு சமுதாயங்களை ஆராய்ந்து மார்கன் வரையறுத்துக் கூறினார். எங்கல்ஸ் அதனைப் பயன்படுத்தி, பழங்கால, கிரேக்க, ரோம சமுதாயங்களை ஆராய்ந்து சமுதாய பரிணாம வளர்ச்சி முறையியலை, எல்லாச் சமுதாயங்களுக்கும் பொதுவானதென நிறுவினார். அவருடைய ' origin of Private Property, Family and State" இத்துறை ஆய்வுக்குச் சிறந்ததோர் அடிப்படையை அமைத்துள்ளது. இம்முறையில் கார்டன் சைல்டு, அகழ்வியலுக்கும், மானிடவியலுக்கும் பொருந்துமெனக் கருதி, தனது ஆய்வுகளில் எங்கல்ஸின் முறையியலைப்பெரிதும் பின்பற்றுகிறார். எனவே வளர்ச்சி முறையில் இனக் குழுக் கூட்டுகள், வர்த்தக சமுதாயங்களாக மாறும்பொழுதுதான் தனிச் சொத்துரிமை தோன்றியது என்றும், அதனோடுதான் ஏகதார மணமுறை தோன்றியது என்றும் எங்கல்ஸ் கூறுவதை ஏற்றுக்கொள்ளலாம்.

1.3 சங்க முற்கால வாழ்க்கையிலும்,வடநாட்டு வேதமுற்கால வாழ்க்கையிலும், சொத்துரிமையும், ஏகதார மணமும் தோன்றுமுன், குழு மண முறையும், பல கணவர் மணமுறையும் நிலைகொண்டிருந்தன. இதற்குச் சான்றாக, தனிச் சொத்துரிமை தோன்றாத தற்காலச் சமுதாய அமைப்புகளில் காணப்படும் கோட்டுல் அமைப்பையும், பல கணவர் மண முறையையும் காட்டலாம்.

1.4 சங்க காலத்தில் நிலவுடைமை வாழ்க்கை ஆதிக்கம் செலுத்தியதால், ஏகதார முறையின் செல்வாக்கு ஓங்கியது. குறிஞ்சி நிலத்தில் தனிச் சொத்துரிமை தோன்றியபின் ஏகதார மண முறையும் தோன்றியது. ஆயினும் அதற்குமுன்னிருந்த பால்-வாழ்க்கை முறைகள் எச்சங்களாக நின்றன.

1.5 சங்க காலம், இனக்குழு மக்கள் அழிந்து நிலவுடைமையும், நாகரிக வாழ்க்கையும் தோன்றிய காலம். மனித சமுதாயத்தின் ஆரம்பகால முறையான கூட்டாக ஆடிப்பாடும் வழக்கம், மாறிப் பின்னர் காலப்போக்கில் கலைக் குழுக்கள் தொழில் முறைக் கலைக் குழுக்களாக மாறுகின்றன. அக்கலைஞர்கள் தாம் பாணர், பொருநர், பாடினி, விறலியர் போன்றவர்கள். அவர்களைப்பற்றிச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

1.6 அவர்கள் நாடோடி வாழ்க்கை வாழ்ந்த தாக அறிகிறோம். அவர்களில் ஆடல், பாடல், அழகுடன் கலையும் பால் இன்பமும் தந்தவர்கள் 'விறலி' எனப்படுவர். அவ்விறலியரைப் போகம் புரக்கும் பொதுவர்' 1 என்பர்.

1.7 எவ்வாறு மருத நில வாழ்வு, மனித சமுதாயத்தின் நாடோடி வாழ்க்கைக்கு முற்றுப் புள்ளி இட்டதோ, அவ்வாறு விறலியரும் மருத நிலத்தில் நாடோடி வாழ்க்கையைக் கைவிட்டு நிலையான வாழ்க்கையைத் தொடங்குகின்றனர்.

1.8 குழு வாழ்க்கையில் நடனமும் இசையும் உளமகிழ்ச்சிக்காகத் தோன்றியவையல்ல. குழு வாழ்க்கையின் ஒற்றுமையை நிறுவி இயற்கை யோடு போராடும் ஊக்கத்தை வளர்ப்பதற் காகவே அவை நிகழ்த்தப் பெற்றன. வள்ளை, துணங்கை, ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை முதலிய ஆட்டங்கள் குறிப்பிட்ட பயன்வேண்டி குழுமக்கள் ஆடியவையே. இவை குழுவாழ்க்கை அழிந்த பின்னும் பழமையின் எச்சங்களாக மிஞ்சின.

குழு வாழ்க்கை அழிந்ததற்குப் பின், வர்த்தக சமுதாயத்தில், தொழில் பிரிவினை பெரிதும் வளர்ந்தது அப்பிரிவினையில் கலையும் ஓர் தொழிலாயிற்று. கலையானது விலைபெறும் உழைப்பாகிவிட்டது.

இந்நிலையில்தான், சங்க காலப் பாணர், புலவர், விறலியர், பாடினியர் முதலிய கலைஞர்கள் இருந்தனர். ஆற்றுப்படைச் செய்யுளின் வளர்ச்சியை ஆராய்ந்தால், இவர்கள் புரவலர்களை நாடிச் செல்வதையும் இனக்குழுத்தலைவர்கள், இவர்களைப் புரப்பதையும் காணலாம். அரசு வலுவடைந்து அரசன் மக்களிடமிருந்து பிரிந்து அவர்கள் மீது ஆதிக்கம் செலுத்தத்தொடங்கிய முடியுடை மன்னர் தோற்றத்திற்குப்பின் சில நூற்றாண்டுகளில் இவர்கள் தெருக்கூத்தாடிகளாகவும், பரத்தையராகவும், ஊடிய தலைவியரையும் தலைவர்களோடு கூட்டுவிப்பவர்களாகவும் மாறுகின்றனர்.

1.9 குழு வாழ்க்கையழிந்து, தனிச் சொத்துரிமை வளர்ச்சியடைந்தபொழுது, கூட்டு வாழ்க்கையழிந்த ஆரம்பகாலத்தில், நாடோடிக் கலைஞர்களாக இருந்த பாடினியும் விறலியும், சொத்துரிமையுடையவர்களின் 'பொதுவர்' ஆயினர். தனிச் சொத்துரிமையோடு, ஏகதார மணமும், பரத்தைமையும் தோன்றுகின்றன என்ற எங்கல்ஸ் கூற்றை, சங்ககாலப் பெண் கலைஞர்கள் வரலாற்றை ஆராய்ந்து மெய்ப்பிக்கலாம். இவர்கள் மற்றையத் தொழில் செய்வோரைப்போலவே, கலையையும், பரத்தைமையும் தொழிலாகக் கொண்டு வாழ்ந்தனர்.

1·10 மாதவியும் வசந்தசேனையும் பாத்திரங்களாக உருவாக்கப்பட்டு, அவர்கள் வாழ்ந்த தாகக் கூறப்படுங்காலம் நிலப்பிரபுத்துவ முடியாட்சி முறையில், வணிக வர்க்கம் பெரு வாழ்வு பெற்றுவிட்டதாகக் குறிப்பிடப்படுகிறது. மன்னரும் வணிகரும் சமுதாயத்தில் ஆளும் வர்க்கத்தினர். அவர்கள் ஏகதார மணமுறை வழக்கத்தை வாரிசுரிமைக்கு அடிப்படையாக ஏற்படுத்திக்கொண்டனர். பரத்தையரைக்கலை நுகர்ச்சிக்கும் இன்ப நுகர்ச்சிக்கும் கருவிகளாக்கிக்கொண்டனர். இதனை எங்கல்ஸ் கூறுகிறார்:-

2.0 "இந்தப் பொதுமகளிர் முறையை நேரடியாகக் குழுமணத்திலிருந்து வந்ததாக, கற்புரிமையை வாங்குவதற்குச் செலுத்தும் காணிக்கைக்காகப் பெண்கள் புணர்ச்சிக்கு இணங்குவதிலிருந்து வந்ததாக அடையாளம் கண்டு கொள்ளமுடியும்" 2 ப. 150

"அடிமை உழைப்புக்குப் பக்கத்திலேயே இங்குமங்குமாகக் கூலியுழைப்பும் தோன்றுகிறது; அதே சமயத்தில், அதன் அவசியகரமான தொடர் பொருளாக, சுதந்திரமான பெண்கள் விபசாரத்தைத் தொழிலாகக் கொள்வதும் பெண்ணடிமையின் நிர்ப்பந்த ஆத்ம சமர்ப்பணத்துக்குப் பக்கத்திலேயே தோன்றுகிறது," 3 ப. 151

"மற்ற எந்தச் சமுதாய ஸ்தாபனமும் போலத்தான் பொதுமகளிர் முறையும் ஒரு சமுதாய ஸ்தாபனம்" [4] ஆகும். (ப. 152)

இவர்களோடு பகை மன்னர் நிலங்களிலி ருந்து கவரப்பட்ட மகளிராகிய 'கொண்டி மகளி ரும்' பரத்தையர் வாழ்வை மேற்கொள்ள நேர்ந் ததையும் நாம் சேர்த்துக்கொள்ளலாம்.

பண்டைக்காலப் பரத்தையர் வாழ்வை, தாயுரிமை-குழுமணம்-நாட்டுக் குழு-பரத்தைமை என்ற வரிசைமுறை மாற்றமாகக்காணமுடியும்.

பரத்தைமை பற்றிப் பேராசிரியர் கா. சிவத்தம்பி அவர்கள் பின்வருமாறு விளக்கி யுள்ளார்.

"மருதத்தின் ஒழுக்க'முறையான ஊடலின் சமூக, பொருளாதார முக்கியத்துவம் எளிதில் புரியக்கூடியதே. மருத நிலத்தில் வேளாண் மையின் வளர்ச்சியானது விரிவான தனி நில வுடமை வளர்ச்சிக்கு அடிகோலியது. இப்பகுதி யில்தான் நாம் முதல் முறையாக உடமையற்ற வேலையாளைக் காண்கிறோம். [5]

அவர்களுடைய உழைப்பின் பயனில் வாழ்ந்து,தாங்கள் உழைக்கும் அவசியமில்லாத ஓர் சமூகப் பகுதி தோன்றுகிறது. அவர்கள் உடைமையாளர்களாகின்றனர்.

"இத்தகைய செழுமையான நிலப்பிரபுத் துவ அமைப்பில், வீரயுகத்தின் விறலியர்கள் பரத்தையாக மாறியது வியப்பை அளிக்கும் செயலன்று. அரசியல் ஆதிக்கத்தின், பொரு ளாதார அடிப்படையில் ஏற்பட்ட மாற்றத்தால் (கொள்ளையடிப்பதிலிருந்து உற்பத்தி செய்வது வரை) வீரயுகத்தின் பெண் குலக் கலைஞர்கள் நிலப்பிரபுத்துவ யுகத்தில் பரத்தையர்களாக மாறினார்கள்." [6]

சொத்துரிமைதான் இச்சமுதாயத்தின் அடிப்படை உரிமை.

"பரத்தைமை சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட மண உறவுக்கு வெளியே இன்பங்காணும் வாயிலாக விளங்கிற்று. ஏனெ னில், சொத்துரிமைக்கும், குடும்பம், பரம்பரை உரிமைக்கும் இடையூறு செய்யாத ஒரு தனி யுரிமையாக இது திகழ்ந்தது." [7] (1971 ஜூலை மலர் 3. இதழ் 2. ப 348 ஆராய்ச்சி)

2.1 இவ்விளக்கம் சிலப்பதிகாரம், மிருச்சகடிகா ஆகிய இரு நூல்களையும் ஆராய மிகவும் துணை புரிவதாகும். பரத்தையரால் குலமகளிர் வாழ்க்கை பாதிப்புக்குள்ளாவதனை இவ்விளக்கம் தெளிவுபடுத்துகிறது.

2.1.1 **பரத்தையர் இயல்பை** இந்நூல்கள் நன்கு விளக்குகின்றன.

**பரத்தையர்** பொருளாசை பற்றி அவை தெரிவிக்கும் கருத்துக்களைக் காணலாம்.

காசினைப் பறிக்கும் காமன் கைக்கசை; விலைமகள்; [8] (ப. 83; பா. 21).பொருளாசையால் பலமரம் நாடும் புள் போன்றவர் [9] (ப. 180: பா. 116) பொன்காரணமாகத் தம்மை நம்பும் ஆடவரை இன்புறவும், துன்புறவும் செய்துதாம் துன்பமடையாதவர் [10] (ப. 181: பா. 120) அத்த மனச் சூரியன் மறையுங்காறும், செந்நிறம் பெற்றுப் பின்னர் ஒழிவதுபோல, பொருள் உள்ளவரை அன்பு வைத்துப் பின்னர் நீங்குவர். 'காகத்து இடுபொருள் பறிக்கும் மாதர்' 'பொரு ளற்றவனைச் சாற்றைப் பிழிந்து சக்கையைப் போல ஒழிப்பர். [11] (ப. 181, 182 பா. 121) வறுமைமிக்க காமுகர்களை வெறுத்தொதுக்கு வர் [12] (ப. 112) கள்ளுண்ணும் விலைமாதரால் பொருளின்மையால் விடப்பட்டவர்கள், மனைவி மக்கள், செல்வங்களை இழந்தவராயினர். [13] (ப. 198)

2.1.2 மணிமேகலை நூலும், தேனையுண்ட வண்டு பூவைத் துறப்பதுபோல கைவிட்டுவிடக் கூடிய பொருள் கொள்ளுதலையுடையவர் (கொண்டி மகளிர்) (18:19-20) [14] பலருடைய கைப்பொருளைக் கவர்ந்து வாழ்பவர்; பிறர் செல்வத்தைப் பெற்று லட்சுமி போன்றாகி, செல்வமிழந்தவர்களைத் துறக்கும் இயல்பினர் (1. 8. 21-22) செல்வம் இல்லை என்றால் கைய சைத்துப் போய்விடு என்று குறிப்பால் சொல்லு பவர் [16] (16:10) என்கிறது.

2.1.3 ஆடல் கணிகையரின் **அழகினை** 'மன் மேதன் பேழை'[17] என மிருச்சகடிகா (ப: 83, பா. 21) கூறும். தவத்தோராயினும், வண்டு போன்ற காமுகராயினும், காமத்திற்குப் புதிய பேதையராயினும் அவர்கள் கண்வலைப்பட்டு விட்டால் தங்கியே செல்லச் செய்யும் தெய்வ மகள் போன்றவர் [18](ப.14:160-165)எனச்சிலம்பு கூறும். 3.0 கணிகை ஒருத்தி **ஒருவர்க்கு மட்டு மே உரியவள் அல்லள்** என்பதனை இந்நூல்கள் நன்கு வெளிப்படுத்தியுள்ளன. கணிகை 'போகம் புரக்கும் பொதுவர்' என வருணிக்கப்படுகிறாள்.

3.1 பிறர் வயப்படாதவள் (ப. 83; பா, 21) [19] காமுகர் தம் விரலால் தடவும் யாழ் போன்ற வர் [20] (பா. 22) வரைவில் மகளிர் வாழ்க்கைக்கு அருந்துணை இளைஞர் [21] (ப: 88; பா.29) பிறப்பி னாலேயே பிறர்க்குரியவள் [22] (ப. 89) கணிகை வழியிடை தோன்றிக் காணும் பூங்கொடி; அந்தணனும் அறிவிலனும் தோய் வாவி; மயிலும் காகமும் கூடும்கொடி;யாவரும்செலப் பயன்படும் தோணி [23] (ப. 89; பா. 30) நெடுங் கடல் திரையை ஒப்ப நிலையிலா மனத்தர் [24] (ப. 181; பா. 121) இன்ப விளையாட்டிற்கு இல்லம் [25] (ப. 231; பா. 172). ஒருத்தனை மனத் தில் நினைப்பர்; வேறு ஒருத்தனைக் கண்களால் ஈர்ப்பர்; இன்னொருத்தனை வீரியம் ஒழுக்குவிப்பர் பின்னும் ஒருத்தனை உடலினால் தழுவி ஊக்கு வர் [26] (ப. 182; பா. 122) தாழ்ந்த குலத்தருணி போல, மின்னல் ஓரிடத்திலும் நிலைப்பதில்லை [27] (ப. 221; பா. 150)

3.2 நாட்டு மக்கள் காண அரங்கேறி ஆடல், பாடல், அழகு காட்டவேண்டும். வண்டாகிய நாணுடைய கரும்பு வில்லில் அரும்பாகிய கணை களை மன்மதன் தூவ, பிறழும் நீண்ட கண் களால் வலைவீசிக் காண்பவரை அகப்படுத்த வேண்டும்; அவரை வீட்டிற்கு அழைத்துவந்து இசைபொருந்திய மயக்கு மொழியால் நலன் களைத் தேடிக்கொள்ளவேண்டும். [28] (மேகலை 18: 103-111) யாழ் கைமாறுதல் போல மாறும் இயல்புடையவர். கணிகையர் பலர் கைப் பொருளைக் கவர்ந்து வாழ்பவர் [29] (18:11:22) நகர நம்பியர் திரிதரு மறுகை நாடி நிற்பவர் கள் [30] (சிலம்பு 3:168) வரணக்காப்பு என்னும் வரையறை இல்லாதவள் [31] (5:81 மே)

3.3 கணிகையருக்குக் கன்னியாயிருக்கையில் காவல் கிடையாது; திருமணத்தில் உள்ளகாவல் இல்லை; தன் கணவன் இறந்தபின் உள்ள காவல் இல்லை; நெஞ்சைக் கற்பு நெறியில் செலுத்தும் காவல் இல்லை; பிறரைக் காணுமல் கொண்ட வனையே தெய்வமாகக் கருதிப் பிறதெய்வம் பேணுத பெண்டிரல்லர்; [32] (18;97-102 மேகலை) காதலன் இறந்தபின் உயிர் போகாவிடில் தீப் புகும் பத்தினிப் பெண்டிர் கடமை அவர்க்கு இல்லை [33] (18:11-22 மேகலை)

அதனாலேயே, 'மாதவியும் மணிமேகலையும்' தாபதக்கோலம் தாங்கினமை எல்லோருடைய நகைப்பிற்கும் இடமாயிற்று என்கிருள் சித்திராபதி [34] (மேகலை 18:7-8). இதேகருத்தை மீண்டும் சித்ராபதி அரசியிடம் சொல்லுகிறுள், "நாள்தோறும் பரிசம் தருபவன் இறந்து விட்டான் என்று மாதவி,மாதவர் பள்ளிஅடைந் தது கேலிக்குரிய செயல். அதுபோலவே, 'அரங்கக் கூத்தி'யாகிய மணிமேகலை பௌத்த பிக்குணியாகி பிச்சை எடுத்துண்ணும் வாழ்க்கை விவேகமல்ல. இவ்விருவர் செயலும் நாடகக் **கணிகையர்க்குரிய தகுதியுமில்லை; தன்மை யுமில்லை"** [35] (மேகலை: 24:19-24) என்கிறுள்.

4.1 கணிகையரை இந்நூல்கள் வெகுவாகப் **பழித்துரைக்கின்றன**. ஆயினும் அவர்களே கதைத் தலைவர்களின் காதல் தலைவியர்களாக இருக்கிறார்கள்.

4.1.1 ஆடல் மகள்; வேசை; ஆசைப் பரத்தை; குடிகேடி; இழிவுறும் அவாவினர் [36] (ப. 83: பா. 121) தேவடியாள் மகள் [37] (ப. 95) ஒழுக்கம் பூண்டோர் கணிகையரை 'ஈமமாலை போல' இழித்தனர் [38] (ப. 181: பா 120) தாமரை மலை யுச்சியில் தோன்றுது; குதிரைக்குரிய நுகத்தைக் கழுதை தாங்காது; யவம் என்னும் தானியம் விதை நெல்லாக முளைக்காது; அவைபோல, 'தோமுறு கணிகையர் தூயர் அல்லரால் [39] (ப. 231; பா. 172) தானம், சீலம், தவிர்ந்த வள் [40] (ப. 295; பா. 239) பொல்லாமை உருவி னர், செருக்கு, வஞ்சகம், மாயை, பொய்ம்மை ஆகிய எல்லாம் உண்டாவதற்கோர் பிறப் பிடம் [41] (ப. 231: பா. 172)

4.1.2 முனிவரும், கற்றோரும், மதிநுட்பமுடையோரும் பிணி என்று விலக்குவது கணிகையர் வாழ்வு; அது இழிவானது. [42] (சிலம்பு 11:180-3) 'கணிகையர் சலம் புணர்கொள்கைச் சலதியர்' அதாவது பொய்சொல்லும் பொய்த்தியர். [43] (சி. 9:69) மாயப் பொய் பல கூட்டும் மாயத்தார். [44] (சி. 7 கட்டுரை) கற்பில்லாதவர்; தவவுணர்வில்லாதவர்; தாசிக்குலத்தார்; வருணக் காப்பு என்னும் வரையறை இல்லாதவர். [45] (மே. 5. 81-82)

4.1.3 'உருவிலாளன் ஒரு பெரும் சேனை' [46] எனக் கணிகையரைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. அவரைக் கணிகையர் [47] (5;224), காவல் கணிகையர் [48] (5:50) ஆடல் மகள் [49] (8:109) ஆடல் கூத்தியர் [50] (5:50) பூவிலை மடந்தையர் [51] (5:51) மங்கலத் தாதியர் [52] (6:125) கடைகழி மகளிர் [53] (14;71) நாடக மடந்தையர் [54] (22:142) பண்ணியல் மடந்தையர் [55] (22:139) என்றெல்லாம் கூறுகிறது.

5.1 அக் கணிகையர், அறுபத்திநான்கு கலைக்கற்றவர். அவர்கள் வாழ்வது இரு பெரும் வீதிகளில் எனச் சிலப்பதிகாரம் கூறுகிறது. [56] (14:167) இவ்வீதிகளுக்குச் சிறுதனம் பெறுந்தனம் பெறுவார் வீதி என அரும்பத உரைகாரரும்; அடியார்க்கு நல்லாரும்கூறுகின்றனர். [57] (ப: 362&380) அவர் பெறும் பணத்தைப் பொறுத்தே இப்பாகுபாடு அமைந்துள்ளது.

'அரங்கக் கூத்தி'யராக சித்திராபதி (மே: 24:22) வருணிக்கும் கணிகையர் நாலுவகைப் படுவர்[58]. அவர்கள் தலைக்கோலரிவை, வாரம் பாடும் தோரிய மடந்தை, தலைப்பாட்டுக்கூத்தி, இடைப்பாட்டுக் கூத்தி ஆவர். அவர்க்குத் தலைவரிசை 1008 கழஞ்சு பொன் பரிசம் பெறுகை நூல் வழக்கு [59] (சி: 14:154, 159) 'முட்டில் பாணரும் ஆடியல் மகளிரும், எட்டொடு புணர்ந்த ஆயிரம் பொன் பெறுவர்' என அடியார்க்கு நல்லார் மேற்கோள் காட்டுவார் [60] (ப: 120)

அவர்கள் 'அரசர்க்கு ஆடுங் கூத்தா'கிய 'வேத்தியலை'யும் 'எல்லோர்க்கும் ஒப்ப ஆடுங் கூத்தா'கிய 'பொதுவியலை'யும் அறிந்து ஆடவல்லவர் [61] (ப: 360 அரும்பதவுரை)

ஆசைப்பட்டு அரசு வைகும் மனை அவர்கள் மனை [62] (ப. 14:147 ப. 360 அரும்பதவுரை) பண்ணும் அவற்றின் திறங்களும் பழித்த இன்சொல்லினர். [63] (ப.14:166) அவர்கள் கண்வலைப் பட்டால் பொறுத்தற்கரிய அறிவும் திரியும். [64] (ப: 14:160, 161)

5.2 அரங்கக் கூத்தியரிடம் காணப்பெறும் வழக்கொன்றை சிலம்பும் மேகலையும் கூறுகின்றன. 'சுடுமண் ஏறு வடுநீங்கு சிறப்பின் முடியரசு ஒடுங்கும் கடிமனை வாழ்க்கையர்' என்று சிலம்பு [65] (14: 146-147) கூறுகிறது.

அடியார்க்கு நல்லார் 'பதியிலாரிற் குடிக் குற்றப்பட்டாரை ஏழு செங்கற் சுமத்தி ஊர் சூழ்வித்துப் புறத்திடுதல் மரபு' என உரை கூறியுள்ளார் [66] (ப: 377) 'சாதிக்குற்றப் பட்டால் தலையிலே செங்கல் ஏற்றி ஊர் சூழ்வித்துக் கழித்துவிடுதல் மரபு' என அரும்பத உரைகாரர் (ப: 360)[67] கூறியுள்ளார்.

ஆனால் மேகலையில்

''சுடுமண் ஏற்றி அரங்கு சூழ்போகி
வடுவொடு வாழும் மடந்தையர் தம்மோர்
அனையேன் ஆகி அரங்கக் கூத்தியர்
மனையகம் புகாஅ மரபினன் என்றே
வஞ்சினம் சாற்றி' உதயகுமாரனிடம்

மணிமேகலையை ஏற்கச் செய்வதாகத் தோழியர் சூழ, சித்திராபதி, தேரில் காற்று வேகத்தில் செல்லுகிறாள் [68] (18: 33-41)

இதனால் அரங்கக் கூத்தியரில் குடிக்குற்றப் பட்டவரை, சுடுமண் எற்றி, ஆடலரங்கைச் சுற்றச்செய்துஅப்புறப்படுத்தி விடுவர், அவர்க்கு அதன்பின் அரங்கக் கூத்தியர் வாழும் வீட்டில் புக உரிமையில்லை எனத் தெரிகிறது. அதோடு அரங்கேறும் உரிமையையும் இழந்துவிடுவர்.

5.3 இங்கு சொல்லப்படும் குடிக்குற்றம் என்றால் என்ன? கணிகை வாழ்க்கையை வாழ மறுப்பதே குடிக்குற்றமாகும். அதாவது துறவு பூணுவது, ஒருவனோடு வாழ உடம்படுவது முதலியவை **குடிக்குற்றமாகும்.**

ஆகவே ஒரே ஆடவருடன் நிலைத்த தொடர்பு கொள்ளவோ பெறவோ கணிகையருக்கு உரிமையில்லை. அவர்களுடைய பரத்தைமை வாழ்க்கையை விட்டு விலகாதபடி பல சட்டங்களை சமூகம் விதித்திருந்தது.

ஒருவனைக் காதலனுகக் கணிகை தேர்ந்தெடுப்பது, சந்தேகமின்றி ஒரு முறையாக ஏதாவது ஒரு வடிவில் அமைவது பாசன் கதையில் இருப்பதற்கிணையாக, கணிகையரின் கதா இலக்கியங்களிலும் காணலாம். அக்காதலுக்காக அவள், சட்டம் அவர்களை வற்புறுத்தி நடக்கத் தூண்டும் மரபுரிமையையும் (குலத் தொழிலையும்), எளிதில் விலக்க முடியாததுமான அழைப்புக்களையும் துறப்பதைக் காணலாம்'' 69 என்னும் மேற்கோள் (The Sanskrit Drama-Keith-P. 133 Mricchakatika) சட்ட அடிப்படையில் அக்கொள்கை நிலவிவந்ததை நமக்கு எடுத்துக்காட்டுகிறது.

இச்சட்ட அடிப்படையை நினைவூட்டும் வகையிலேயே சித்திராபதி உதயகுமரனிடம் பேசுவதும் உள்ளது. துறவுபூண்ட மணிமேகலை கணிகை குலப்பெண், ஆகவே அவளை அடைவதில் தவறில்லை'. 70 என்கிருள், (18: 55, 66)

5.4 இனி அரங்கேறும் உரிமை இல்லாமல் போனுல் என்ன என்னும் வினு எழலாம். மாதவியின் தாய் சித்திராபதி, மாதவியிடம், மணிமேகலையைப்பற்றி வினவுவதில் இக் கேள்விக்கு விடைகிடைக்கிறது 71 (சி.30:10-22)

அதாவது அரங்கேறும் உரிமை இழந்தவர் செல்வந்தர்களால் விரும்பப்படாதவர் ஆவர். அதனுல் செல்வச் செழிப்பு அவர்களுக்கு இல்லாமல் போகும். அதனையே தண்டனையாக அச்சமுதாயம் அரங்கக் கூத்தியர்க்கு வழங்குகிறது எனலாம்.

5.5 காதலரொடு பொழுதைக் கழிக்கும் கடைகழி மகளிர்க்கு தேர், சிவிகை,மணிக்கால்அமளி, உய்யானத்தில் அரசனேடு மகிழும் மகிழ்ச்சியெல்லாம் உண்டு. அத்தோடு சாமரைக் கவரி, தமனிய அடைப்பை, உடைவாள் முதலியன எடுக்கும் உரிமையையும் அரசன் கொடுப்பான். அவை எக்காலத்தும் மாருத வாழ்வையுடைய அம்மடந்தையர் நாடோறும் புதுமணம் புணர்ந்து வாழ்வர். அவ்வருத்தம் நீங்கிச்செருக்கேற, வேலைக்காரி பொன் கிண்ணத்தில் மதுத்தர, அதனைப் பருகி பின்னும் மயங்குவர். அம் மயக்கத்தால் கிறங்கி, கண்கள் விழியிடைச் செருகும். அதனைத் தமது இனம் என வண்டு சுழலும், அந்த வண்டை தமது மாலையைப் பறித்து விரட்டுவர். முன்பு புலவிக் காலத்தில் மனத்திலுள்ள குறையைக் கணவன் கைசேர்த்துக்கொண்டு கூறுவாள். அவ்வுரையை நாவால் நவில முடியாமல் குழறுவாள்.அது கேட்பார்க்கு நகை விளைவிக்கும். கடைக்கண்ணுல் செய்யும் பூசலோடு, வில் போன்ற புருவங்கள் வளைய, பொட்டிட்ட நெற்றியில் வியர்வை தோன்றும். இவையெல்லாம் தீரும் நேரத்தை எதிர்பாத்து வருந்தியவராய்ச் செல்வரும் அரசரும் காத்திருப்பர். அவர்கள் வாழும் தெருவை, செழுங்குடி செல்வரோடு வையங்காவலர் மகிழ்தருவீதி எனச் சிலம்பு கூறுகிறது. 72 (14: 126-145)

6.1 இனி, மாதவி, வசந்தசேனை ஆகிய இருவரின் செல்வப் பெருக்கைக் காணலாம்.

மாதவி வீடு, 'வானுற நிவந்த மேனிலை' உடையது 73 (8:17) அது 'நெடுநிலை மாடம்' கொண்டதாகும் 74 (13:69). 'நிலவுப்பயன் கொள்ளும் நெடுநிலா முற்றம்' 75 உடையது, (4:27)

'இல்வளர் முல்லையோடு மல்லிகை அவிழ்ந்த பல்பூஞ்சேக்கைப் படுக்கையை' உடையவள் 76 (4:27, 28)

மாதவி, 'அணிமேகலையார் ஆயிரவர் சூழ வாழும் கணிகை. 77 (15:38)

'மாந்தளிர் மேனி' மாதவி, 'வேந்துறு சிறப்பின் விழுச்சீர் எல்தியவள்' 78 (15:21) மணிமேகலை பெயர்சூட்டுவிழாவன்று, மங்கல மடந்தை மாதவி தன்னேடு கோவலன், செம்பொன்மாரி செங்கையின் பொழிகிற செல்வச் செழுப்புக் காட்சியைச் சிலப்பதிகாரம் காட்டுகிறது. 79 (15:40, 41)

வசந்தசேனை வீடு, ஆகாயமளாவியது, 80 (ப:193) புட்பக விமானம் போன்றது, 81 (ப:192) பொற்கதவு உடையது, விருப்பு வெறுப்பில்லார் பார்வையும் வன்மையால் ஈர்க்கும் தன்மையது. 82 (ப: 194)

இந்திரனது உத்தியான வனம்போல இக்கணிகை இல்லம் விளங்குகிறது 83 (ப:199) மூன்றுலகமும் ஓரிடத்தில் காணப்பட்டதாக

விளங்குவது [84] (ப: 201) இது விலைமகள் இல்லமோ? அன்றிக் குபேரன் கிருகத்தின் அளவோ? [85] (ப: 202) என வியப்பிற்குரியதாகிறது.

மாதவி, வசந்தசேனை ஆகிய இருவரும் 'போகம் புரக்கும் பொதுவர்'. கலை இன்பத்தையும் காம இன்பத்தையும் அரசர்க்கும் வணிகர்க்கும் அளிப்போர். அவர்களது கலைத் தேர்ச்சியை இரு கவிகளும் வருணிக்கிறார்கள்.

"ஆடலும் பாடலும் அழகும் என்று இக் கூறிய மூன்றின் ஒன்று குறைபடாத"வள் மாதவி. [86] (3 : 8-9). ஏழாண்டு கற்று, பண்ணிரண்டாம் வயதில் அரசனுக்குக் காட்ட வேண்டி அரங்கேறுகிறாள். [87] (3: 10,11) 'தலைக்கோலி' பட்டம் பெறுகிறாள். [88] (3:161) தாடகம் ஏத்தும் நாடகக் கணிகையாக விளங்குகிறாள்.[89] (பதியம் 15)'எண்ணெண் கலையும் இசைந்தவள்', 'பண்ணும் திறனும் புறங்கூறு நாவினள்', [90] (8:64, 65). 'நிலத்தெய்வம் வியப் பெய்த நீள் நிலத்தோர் மனம் மகிழ யாழ் மீட்டுவாள்'. [91] (7, கட்டுரை)

6.2 வசந்தசேனையின் அழகை, 'தாமரை நீங்கிய திரு', [92] (ப:220. பா ) உச்சயினி நகருக்கு 'அணி', 'இளையள்' [93] (ப. 300;பா,245) 'நலமிகு சீர் இரதி', 'ஆகமொளிர் அணிகளுக்கு அணி', 'எழிற் பண்ட நிலையம், ஆய மதனன் அங்காடி, [94] (ப: 314: பா: 260) 'திரு நகரத்து என்றும் திகழ் திரு', 'உறுமெழில் இரதி, [95] (ப:354) என்றெல்லாம் கவி வருணிக்கின்றார்.

வசந்தசேனை 'எல்லாக் கலைகளையும் உணர்ந்தவள்', [96] (ப: 230) 'நாடக அரங்கத்தில் நண்ணுபவள்', 'பாடுறு கலைகளின் பயிற்சி' பெற்றவள். [97] (ப:90: பா:40)

7.1 இனி, இவ்விருவரும் தம் காதலருடன் உறவு கொள்ளுதலைக் காணலாம்.

மாதவி, 'தலைக்கோலரிவை' சிறப்புப் பெறுகிறாள். அதோடு, 'விதிமுதறக் கொள்கைப்படி ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பொன் ஒரு முறை' யாக அரசனிடம் பெறுகிறாள்.இலைப்பூங்கோதை ஒன்றும் பெறுகிறாள். [98] (3: 161-163). அதன் விலை 1008 கழஞ்சு என்றும், அம்மாலை வாங்குபவர், மாதவிக்கு ஏற்றவர் என', நகர நம்பியர் திரிதரு மறுகில் [99] விற்பவள்போல கூனி நிற்கிறாள்.கோவலன் அந்தத்தொகையைக்கொடுத்து, மணமனை புகுந்தான். மாதவியோடு வைகினான். அவளிடம் 'விடுதலறியா விருப்பினன்' ஆயினன். [100] (3:164-175)

மாதவி, சமூக மரபுப்படி கோவலனுக்குக் கட்டுப்படுகிறாள். அதனோடு அவன் மீது காதல் வயப்படுகிறாள். அவன் அவளை விடுத்துச் செல்லும்பொழுது!, மீண்டும் அவனைத் திரும்பப்பெற முடங்கல் விடுகிறாள். அவனது கொலைச்செய்தி கேட்டு, தனது பரத்தைமை வாழ்க்கையை விடுத்துத் துறவு பூண்டு விடுகிறாள். எனவே அவளுடைய காதல் தியாகத்திற்குத் தூண்டும் வலுவுள்ளதாக உள்ளது.

7.2 "பிறப்பினாலேயே பிறர்க் குரியவளாகிய வசந்தசேனை, காமதேவாயதனம் என்னும் பூஞ்சோலையில் கண்டது முதல் வறியவனாகிய சாருதத்தன்பால் காதல் உடையவளாய், என்னை விரும்புகிறாள் இல்லை" எனச் சகாரன் கூறுவதிலிருந்து அவளது உண்மைக் காதல் புலனாகிறது [101] (ப: 89) இக்கருத்தை, 'வசந்தசேனை, இளமையின் செருக்கினால் இயைந்து நற்குலத்து உளனொரு மகனை தனை உளங்கொள் மங்கை' [102] (ப. 95: பா: 38)என்னும் சகாரனது பணியாளரின் கூற்று வலியுறுத்துகிறது.அவளது உண்மை, 'அக்குலத்தினுக்கு ஒவ்வா நன்னர் வான் குணங்கள் பெற்றவள்; குற்றமற்ற அன்பை உடையவள்; [103] (ப: 300:245)என்னும் கூற்றும் உணர்த்தும். நாகரிக நீர் நிறைந்த நதி; வாமை மிகு குணநிதி; 'தீமை ஒருவினவள்' என்றெல்லாம் அவள் தன் குலவொழுக்கத்திற்கு எதிர்நீச்சல் [104] போடுவதை நூல் காட்டுகிறது.

வசந்தசேனை, 'யான் மாட்சி மிக்க சாருதத்தருடைய குணங்களுக்கு தோற்று, ஈடுபட்ட பணிப்பெண் ஆவேன்' எனத் தன் காதல் உள்ளத்தைத் தானே வெளிப்படுத்துகிறாள். [105] (ப: 246)

காமநோயால் பற்றப்பட்டுத் தலைவன் இருக்குமிடத்தை நாடிச்செல்லும் அவிசாரிகை யாகவே 106 (ப: 219) வசந்தசேனை சித்தரிக்கப் பட்டிருக்கிறாள்.

7.3 சதுக்கபூதம், கணிகையரையும், அவரை நாடும் ஆடவரையும் எதுவும் செய்வதில்லை. மாறாக, 'அவம் மறைந்தொழுகும் அலவல் பெண்டிரையும்,' 'பிறன்மனை நயப்போரையும்' பாசக் கயிற்றிலிட்டுக் கொன்று உண்டு விடு மாம். 107 (5: 129, 130)

'கணவன் நம்பும் பொருட்டுப் பொய் யொழுக்கத்தில் மறைந்து அவமே ஒழுகிப் பிற ஆடவரை விரும்புவோர் அலவல்பெண்டிராவர். தமது மனைவியர் தனிப்ப, தனித்த பிற மனைவி யரை விரும்பும் துச்சாரி பிறன் மனை நயப்போர்' 108 ஆவர். இப்பெண்டிரும், ஆடவரும், கற் பொழுக்கத்திற்கு ஊறு செய்பவர்கள்.

சதுக்கபூதம் சமூக ஒழுக்க விதிகளை மீறு வோரைத் தண்டிக்கும் ஓர் கற்பனைச்சக்தி. இது பரத்தையரோடு கூடும் கணவர்களைத் தண்டிப் பதில்லை. பிறனில் புகுவோனையும், அலவல் பெண்டிரையுமே தண்டிக்கிறது. எனவே சமு தாய ஒழுக்கம் ஒருதார மணத்தில் கட்டுண்ட மனைவியரோடு ஆண்மக்கள் பாலுறவைத் தடை செய்கிறது. பரத்தையர் உறவு சமூக ஒழுக்க விதிகளுக்கு முரண்பட்டதன்று. பரத்தையோடு உறவுகொண்ட கணவனுயினும், பெண் பிற ஆடவர் உறவு கொள்வது பெருங்குற்றமாகும். இச்சமூக ஒழுக்க விதிகளைச் சதுக்க பூதம் பாது காக்கின்றது.

7.3.1 இது ஏன்? ஒருதார மண உறவில் பிறக் கும் ஆண் மக்களே நிலவுடைமச் சமுதாயத்தில் வாரிசு உரிமையுடையவர்கள். எனவே பிறர் மனை நயத்தலும், கற்புத்திறம்புதலும், நில வுடைமையின் வாரிசுரிமையில் குழப்பம் விளைவிக் கும். எனவே அவை தடை செய்யப்பட்ட தீய ஒழுக்கங்களாகும். பரத்தைமை அவ்வாறன்று. பரத்தைக்குப்பிறக்கும் ஆண்மக்களுக்கு பரத்தை யின் செல்வத்திலோ, அவளது காதலர்களின் செல்வத்திலோ எவ்வித உரிமையுமில்லை. எனவே ஆடவரது பரத்தைமையால் நிலவுடை மைச் சொத்துரிமைக்கு ஆபத்து எதுவுமில்லை. எனவே பரத்தைமை அனுமதிக்கப்பட்டது.

8.1 இக்கணிகையரால் துன்புற்ற கற்புடைய மகளிர் இருவர் நிலையைக் காணலாம்.

மாதவியால் பாதிக்கப்பட்டவள் கண்ணகி. கண்ணகி கற்புக்கடம் பூண்டவள்; 109 கணவன் துயர் கருதித் தன் துயர் மறப்பவள்; 110 கண வனை அன்றிப் பிற தெய்வத்தைத் தொழ மறுப் பவள்; 111 மாதவியைக் கோபிக்காதவள்; 112 மாமன், மாமியர் முன் கவலையற்றவளாகக் காட்டிக்கொள்பவள்; 113 கணவனது அழைப்பை ஏற்பது கடமையென, ஒருவரிடமும் சொல் லாமலே மதுரைக்குச் செல்ல துணிந்தவள். 114 கணவனது ஒழுக்கத்தைக் குறைகூறியதற் காகத் தாயைப் புறக்கணித்தவள். 115

இவ்வாறாக, கற்புடைய மகளிர்க்கு விதிக் கப்பட்ட நெறி முறைகளினின்றும் இம்மியும் பிச காத அசல் வார்ப்படமாகவே கண்ணகி சித் திரிக்கப்பட்டிருக்கிறாள்.

அதனாலேயே, 'மண்ணின் மாதர்க்கு அணி யாகிய கண்ணகி 116 (17:5)', கொங்கச் செல்வி, குடமலையாட்டி, தென்தமிழ்ப்பாவை, செய்தவக் கொழுந்து, ஒரு மாமணியாய் உலகிற்கு ஓங் கிய திருமாமணி, 117 (12:47-53), வீரபத்தினி 118 (22:155), 'பார் தொழுது ஏத்தும்' பத்தினி, 119 (28:210) என்றெல்லாம் பாராட்டப் பெறு கிறாள்.

ஆடவர் சுதந்திரம் போலவே பெண்ணும் சுதந்திரம் நாடினால் நிலப்பிரபுத்துவச் சொத் துரிமை சிக்கலாகிவிடும். அதைத் தடுக்கவே 'கற்பு' க்கருத்து மிகைப்படுத்தப்பட்டது.

8.2 வசந்தசேனையால் பாதிக்கப்பட்டவள் தூதை. தூதை, 'தன் கணவனே தனக்குச் சிறந்த அணிகலன்' 120 என்கிறாள். (ப. 247) கணவனை மையமாகக் கொண்டே தூதையாகிய சக்கரம் சுழல்கிறது.

களவுபோன வசந்தசேனையின் பொருளுக் காகத் தனது சீதனப் பொருளான இரத்தின மாலையைக் கொடுத்தவள்; 121 வசந்தசேனை அதனைத் திருப்பியனுப்பியபோது ஏற்க மறுத்த வள்; 122 கணவனுக்கு முந்தி உயிர்விடத்துணிந் தவள், 123 கணவனது உயிர்மீளக் காரணமாக இருந்ததால் வசந்தசேனையை உடன்பிறந்த வளாக ஏற்றவள். 124

9.1 கற்புக்கரசியரான கண்ணகி, தூதை ஆகிய வர்களின் கணவர்கள் எவ்வாறு படைக்கப்பட்டுள்ளனர்? கணிகையைரோடு தொடர்புகொண்டதால் அவர் நிலைதாழ்ந்து போயினரா?

கண்ணகியின் கணவன் கோவலன். அவன் பலதலைமுறைகளாக வாணிபம் செய்துவரும் பரதர் குலத்தவன்: *125* 'நற்குலத்தான்' *126* (10:46). 'ஏசாச் சிறப்பின் இசைவிளங்கு பெருங் குடியில்' *127* (20:57) பிறந்தவன்.

தூதையின் கணவன் மூன்று தலைமுறைகளாக வாணிபம் செய்துவரும் அந்தணர் குலத்தவன். *128* (ப. 277) உயர்குடிப் பிறப்பு வாய்ந்தவன். *129* (ப: 361: பா: 306)

கோவலன் 'மண் தேய்த்த புகழினன்' *130* (1:36) 'உரைசால் சிறப்பினன்' *131* (2:1) அவனில்லாத புகார் நகரம் 'அருந்திறல் பிரிந்த அயோத்திபோல' *132* துன்பத்தில் ஆழ்ந்தது *133* (13:65, 66) மாடலன், 'இம்மைச் செய்தன யானறி நல்வினை' என அவனைப் பாராட்டுகிறான்.

சாருதத்தனை 'மாட்சிமிக்க சாருதத்தர் *134* என விதூடகன் (ப: 97) நீதிபதி *135* (ப;337) பாராட்டுகின்றனர். 'மிகப் பிரசித்தி பெற்ற சாருதத்தர்' என்பாள் வசந்த சேனையின் தாய் *136* (ப: 336) 'பழிபடையாச் சாருதத்தர்' *137* (ப:346) 'எதிரில் சீருடைப் பெரியோன் *138* (ப: 347) நகர்க்கு அணியென விளங்குவோன்' *139* (ப: 371:பா:320) பொன்னால் இயலாப் பூண் *140* (ப:374:பா:326) திங்களுஞ் செல்வனிடத்து வெயில் தோன்றுது *141* (ப;184) செவிக்கு மாத்திரம் இன்பஞ் செய்பவரல்லர் *14²* என்றெல்லாம் புகழப்படுகிறவன்.

கோவலன், மாதவி மனம்மகிழ யாழ் மீட்டுகிறான். *143* (7:1), அம்பணவரோடு சேர்ந்து செங்கோட்டி யாழில்பாடல் பாடுகிறான். *144*

சாருதத்தன் இரேபிலன் பாடிய இசையைப் பாராட்டுகிறான். இசையின் ஆற்றலை விதந்தோதுகிறான். *145* (பா:79,80,81) கன்னத்துளையில் அழகைக் காண்பவன். *146* (ப:161) நீதிமன்றக் கட்டிடக்கலை நுட்பத்தை வியக்கிறான்.*147* (ப:340).

9.2 கோவலன் உயர் பேர் ஒழுக்கம் உடையவன். *148* (10:46) 'பெருமகன் திருமொழி பிறழா நோன்பினன்' *9* (10:47)

சாருதத்தன் நற்செய்கைக்குக் கட்டளைக் கல் *150* (ப:101: பா:46). பிறன் மனைவியைக் காண்டல் தக்கதன்று என்பவன். *151* (ப: 107: பா: 52)

இத்தகைய குணநலன்கள் வாய்ந்த இவ்விருவரும் கணிகையரிடம் ஈடுபாடு காட்டியவர்கள். சமுதாயம் அவர்களது சமுதாய உயர் நிலையைத் தாழ்த்திவிடவில்லை.

கணிகையரால் வாழ்க்கையில் துன்பம் நேரும் பொழுதுமட்டும் கோவலனும், சாருதத்தனும் சமுதாயக் கருத்துகளுக்கியைய மனம் வருந்துகிறார்கள். ஆனால் தாங்கள் தண்டனைக்குரிய சமூகக் குற்றவாளிகள் எனக் கருதவில்லை.

முதலில் மாதவியைக் 'கூத்தி' *152*யெனவும் 'மாயப் பொய் பல கூட்டும் மாயத்தாள்' *153* எனவும் கூறியவன், கோசிகமாணி கொணர்ந்த கடிதத்தைக்கண்டதும் 'தன்தீதிலள்'என்தீது*154* எனக்கூறி அவளைக் குற்றமற்றவள் எனக் கூறுகிறான்.

நீதிபதி, சாருதத்தனிடம், 'விலைமகள் தங்களுக்கு நட்புரிமையுடையவளா?' என வினவுகிறார்.சாருதத்தன் நாணமுறுகிறான். 'நாணமுற் வேண்டா. இது வழக்குப்பற்றியதென்று' நீதிமன்றச் செட்டியும் எழுத்தாளனும் கூறுகின்றனர். அப்போது நாணத்தோடு சாருதத்தன், 'விலைமகள் எனக்கு நட்புரிமையுடையாள் என்று யான் எங்ஙனம் கூறுவேன்? இந்நிகழ்ச்சியில் பௌவனப்பருவமே குற்றமுடையதாகின்றது' ஒழுக்கம் அங்ஙனமன்று' என்கிறான். *155* (ப:342 343( தூய ஒழுக்கம் உடையவனையும் இளம் பருவம் காம வயப்படுத்தும் என்பது இதன் கருத்தென மொழிபெயர்ப்பாசிரியர் குறிப்பையுங்காணலாம்.)

கணிகையருடன் உறவு கொள்வது நாணமாகப்படவில்லை. ஆனால் அதைக் கனவான்கள் முன்னிலையில் சொல்வது நாணமாகப்படுகிறது.

அதனாலேயே கோவலனை, 'இம்மையில் நானறிய நல்வினைகளே' செய்தாய் *156* என்று

மாடலனும், பொய்சாட்சி சொன்னவனை, 'நரக னுயிர்' என்றும், தன்னுயிர்தர முன்வந்த கோவலனை 'நல்லுயிர்'157 என்றும் பூதம்,பேதப் படுத்திக்காட்டி உயர்த்துகிறது.

அதுபோலவே சாருதத்தனை எல்லோரும் மாட்சிமைமிக்க சாருதத்தர் என்றே கூறுகின்ற னர் போதாக்குறைக்கு,சாருதத்தன்-வசந்தசேனை சோடிப் பொருத்தத்தை 'இரத்தினம் இரத்தினத் தோடு கூடிவிளங்கும் தன்மையது' எனக் கூறு வதைக் கேட்கலாம். 158 (ப:90)

10.1 கோவலனும், சாருதத்தனும் வாழ்ந்த சமு தாயம் ஆணாதிக்கச் சமுதாயமாகும். அது ஒருதார மணத்தை வற்புறுத்துவதாகும். மூவா யிரம் ஆண்டுகளாக நிலவிவரும் ஒருதார மணத் தின் விளைவுகளைப் பற்றி எங்கல்ஸ் கூறுவது சிந்திப்பதற்குரியது.

"ஒருதார மணக்குடும்பம், ஆணின் மேலா திக்கத்தை அடிப்படையாகக் கொண்டது: அதன் தெளிவான நோக்கம் விவாதத்திற்கு இடமில்லாத தந்தை முறையுள்ள குழந்தை களைப் பெறுவதுதான். காலா காலத்தில் இந் தக் குழந்தைகள் தமது தகப்பனாரின் இயற்கை வாரிசுகள் என்ற முறையில் அவரது சொத்தைச் சுவீகரிக்கலாம் என்பதற்குத்தான் இந்தத் தந்தை முறை வேண்டியிருந்தது" 159 (ப. 140)

"ஆரம்பத்திலிருந்தே ஒருதார மணம் என் பது பெண்களுக்கு மட்டுமே. ஆண்களுக்கு இல்லை என்ற ஒரு குறிப்பான தன்மையை முத் திரையிட்டுக் காட்டியது. அது இன்றைக்கும் கூட இத்தன்மை பெற்றுத்தான் இருக்கிறது." 160 (ப:142, 143)

இதற்கான சான்றுதாரங்களைச் சிலப்பதி காரமே உள்ளடக்கியுள்ளது.

10.1.2 "கங்கை தன்னைப் புணர்ந்தாலும், கன்னிதன்னைப் புணர்ந்தாலும் புலவாய் நீ காவேரி! அதுவே மங்கை மாதர் பெருங்கற் பென்று அறிந்தேன் வாழி காவேரி" என்னும் கோவலன் பாடல், பலமனைவியர் வாழ்க்கையை நினைவுறுத்துகிறது." (ப:108. கானல்வரி தெ. பொ. மீ.)161

10.1.3 கண்ணகி கூறும் பத்தினிப் பெண்டிர் எழுவர் வாழ்க்கையும் ஆணாதிக்கத்தை நிலை நாட்ட உதவும் கருத்துக்களேயாகும். (21: 5-34) 162

ஆணாதிக்கச் சமுதாயம் தம் நலம் பேண மகளிர்க்கு இத்தகைய கதைகளைக் கூறியதில் வியப்பில்லை. கற்பு மீறிய பெண்டிர்க்குக் கடுந் தண்டனையும், கற்புடைப் பெண்டிரை நயந்த வனுக்குக் கடுந்தண்டனையும் வழங்கிய போதி லும், பரத்தையரை நாடி அவரோடு கூடி வாழ்ந்தவருக்குச் சமூக-அரசியல் தண்டனை எதனையும் அச்சமுதாயம் வழங்கவில்லை.

10.1.4 தலைக்கோல் பற்றிய செய்தியும்; அதற் குச் செய்யப்படும் சிறப்பும், இறுதியில் நாடகக் கணிகைக்கு தலைக்கோலரிவை என்னும் பட்டம் சூட்டுவதும், மன்னன் இலைப் பூங்கோதை கொடுப்பதுடன் ஒரு முறையாக, விதிமுறை தவறாமல் 1008 களஞ்சு பொன் தருவதும் கணிகையர்க்கு அரச ஆதரவைச் சட்டப்படி உறுதிப்படுத்துவதாகும். 163

11.0 பொதுமகளிர் பற்றிய விளக்கத்தில், "யதார்த்தத்தில் குறிப்பாக ஆளும் வர்க்கத்தி னர் இதைச் சகித்துக்கொள்வதோடன்றி ஆர்வத்துடன் பின்பற்றவும் செய்கிறார்கள். என்றாலும் அதைச் சொல்லளவில் கண்டிக்கிறார் கள்" என்று இவ்வுண்மையை எங்கல்ஸ் வெளிப் படுத்தியுள்ளார். 164 (ப. 152)

தொடர்ந்து, 'யதார்த்தத்தில் இந்தக் கண்டனம் அதில் ஈடுபடும் ஆண்களைத் தாக்கு வதில்லை, பெண்களைத்தான் தாக்குகிறது; அவர் கள் சமூக பகிஷ்காரம் செய்யப்பட்டுச் சமூகத் துக்கு வெளியே தள்ளப்படுகிறார்கள். எதற்காக? பெண்பாலர் மீது ஆண்பால் செலுத்தும் பூர்ண ஆதிக்கமே இச்சமுதாயத்தின் அடிப்படை விதி என்று பிரகடனம் செய்யத்தான்' என எடுத்துக் காட்டுகிறார். 165 (ப: 152)

'ஒருதார மணமுறைக்குள்ளேயே இரண்டா வது முரண்பாடு ஒன்று தளர்கிறது. பொது மகளிர் முறையைக் கொண்டு தனது வாழ்க்கையை அணி செய்துகொண்டுள்ள கணவ

னுக்குப் பக்கத்திலேயே புறக்கணிக்கப்பட்ட மனைவியும் நிற்கிறாள்,' என்னும் எங்கல்ஸ் கூற்று, கண்ணகியையும் தூதையையும் நினைவு படுத்தாமலில்லை. 166

12.1.1 மாதவியும், வசந்தசேனையும் கணிகையர். செல்வச் சிறப்பும் அழகும் கலைச்செல்வமும் உடையவர்கள். அரசனால் மதிக்கப்படும் உயர்வு பெற்றவர்கள்.

12.1.2 இருவரும் கதைத்தலைவர்களை நேசிக்கிறார்கள். இருவரும் ஒரு செல்வனோடு காதல் வாழ்க்கை வாழ விரும்புகிறார்கள்.

ஆனால் அவர்கள் காலத்துச் சமுதாய ஒழுக்கமுறைக்கு விரோதமாக அவர்களது விருப்பம் இருக்கிறது. இதனால் அவர்கள் காதல் வாழ்க்கையில் சிக்கல்கள் தோன்றுகின்றன. மாதவிக்குக் கானல் பாணி கோவலனது மனத்தில் அவளைப்பற்றிய நல்லெண்ணத்தை மாற்றுகிறது. அவளது குல இயல்பை நினைவில் கொண்டு அவளது காதலைப் பாசாங்குதான் எனக் கருத வைக்கிறது. அவன் பிறமாதரை மனத்தில் கருதி விரகதாபம் தோன்றப்பாடலாம். அவனுக்கு ஆணாதிக்க சமுதாயத்தில் அவ்வுரிமை உண்டு. ஆனால் தனது சமுதாயத்தில் தான் விரும்பும் கணிகைக்கு, மனைவிக்குரிய கற்பைப் பொருத்திக் காணும் பொழுது, அவள் பிற ஆடவரை எண்ணி ஏக்கம் தோன்றப்பாடும் உரிமையில்லை, என அவன் நினைக்கிறான். மாதவி கற்புடை மகளிரைப்போல பிறர் நெஞ்சு புகுதல் தவறு என்ற கோட்பாட்டிற்கு இலக்கணமாக வாழவேண்டிய மனையறம் புகுந்த மனைவியல்லள். எனவே அவள் தனக்குக் கோவலனைப் போலவே சுதந்திரம் உண்டெனக் கருதுபவள்.

12.2.1 குல ஒழுக்கத்தை விட்டு ஒருவனைக் காதலிக்கும் ஒழுக்கத்தை மேற்கொண்டு, தனது சமுதாய ஒழுக்க முறையை எதிர்த்து நின்ற மாதவிக்குக் 'கற்புக்கடம்' என்ற கட்டுப்பாடு இருப்பதாகத் தோன்றவில்லை. எனவே சமூகக் கட்டுப்பாட்டு ஒழுக்க விதிகளை அவள் எதிர்த்து நின்று கோவலன் ஒருவனையே நேசித்தாள். அவன் தனது சமூக ஒழுக்க நம்பிக்கைப்படி அவளுக்குப் பிற ஆடவரை நினைத்துப் பாடும் உரிமையை மறுத்து அவளது குல ஒழுக்கப்படி அவள் நடக்க விரும்புவதாக எண்ணி அவளைத் துறந்தான்.

12.2.2 ஆயினும் அவளது காதலையும், அவள் அளித்த இன்பத்தையும் மறக்காத இரண்டுபட்ட உள்ளத்தோடு மறுபடி 'மனையறம்' மேற்கொண்டான். தொலைத்த பெருஞ் செல்வத்தை மறுபடியும் ஈட்டக் கண்ணகியோடு மதுரை சென்றான்.

12.2.3 மாதவி, கோவலனும் கண்ணகியும் இரவில் புகாரை விட்டு அகன்றது குறித்து; "குலப்பிறப்பாட்டியோடு இரவிடை கழிதற்கு, என் பிழைப்பு அறியாது கையறு நெஞ்சம் கடியல் வேண்டும்" என வருந்தி எழுதிய கடிதத்தை கோசிகமாணியிடம் 167 பெற்றான் கோவலன்.

தன்னிலையில் தான் பாடிய கானல்பாணி தவறென்று அவன் ஏன் கருதினான் என்று தோன்றாமல், தன் தவறென்னவென்று அறியாது திகைத்தாள். கோசிகமாணியை முடங்கலோடு கோவலனிடம் அனுப்பினாள். முடங்கல் கண்ட கோவலன் அவளது உள்ள உறுதியையும், தன் மீது கொண்ட நேசத்தையும் அறிந்து இரண்டுபட்ட உள்ளம் ஒன்றாகி, 'தன் தீதிலள், என் தீது' என்று சொல்லக் கேட்கிறோம். ஆயினும் செல்வம் ஈட்டும் 168 ஆசை உந்த மதுரையை அடைந்தான்.

அங்கு கோவலன் இறந்தான். மாதவி கோவலன் சாவையும், கண்ணகி மரணத்தையும் கேட்டாள்.

கோவலனைத் திரும்பவும் காண முடியும் என்றும் நம்பிக்கை அதனால் அற்றுவிட்டது. அந்நிலையில் அவள் தன் குலஒழுக்கத்தை ஏற்கவும் விரும்பவில்லை. கோவலன்மேல் அவள் கொண்ட காதல் அவளை அவ்வாறு நினைக்கத் தூண்டுகிறது. அந்நிலையில் அவள் தன் குல ஒழுக்கத்திற்கு எதிராகக் கலகக் கொடி தூக்குவதைப்போல துறவை மேற்கொள்ளுகிறாள்.

12.3.0 சித்திராபதியிடம், "நல்திறம்படர்கேன்; மணிமேகலையை வான்துயர் உறுக்கும் அக்கணிகையர் கோலம் காணாது ஒழிக எனப் போதித் தானம் புரிந்து அறங்கொண்டாள் மாதவி. 169 (27:105-808) என்று மாடலன் சொல்வான்.

அதே செய்தியை, அடித்தோழி அரற்ற லும் பின்னுல் வற்புறுத்துகிறது.

"ஏதிலார் தாம் கூறும் ஏச்சுரையும் கேட்டேங்கி
போதியின் கீழ் மாதவர் முன் புண்ணிய தானம் புரிந்த
மாதவி தன்துறவும் கேட்டாயோ, தோழி"
170 (29:7)

12.4 இவ்வாறு, 'மாதவி கண்ணகியாயிருந்து வாழ்க்கைச் சோதனையில் அடிபட்டுக் குலத் தொழிலை விட்டுத் துறவியானுள். அறிவின் துணை கொண்டவள்"அல்லள். உணர்ச்சி உந்த உணர்வு பூர்வமாக மாறியவள்" 171 என்பதை Dr. கைலாசபதி கூறியிருக்கிருர். (ப:142 பழந் தமிழர் வாழ்வும் வழிபாடும்)

இளங்கோவைப் பொறுத்தவரையில் அச் சமூகச் சூழலில் இதுவே பெரும் புரட்சியாகத் தோன்றுகிறது. துன்பமுறுவோர்க்குரிய புகலிடம் துறவே என்னும் அவரது சமய நோக்கே இதற்கு அடிப்படை எனலாம்.

13.11 இனி சூத்திரகன் இப்பிரச்னைக்கு எவ்வாறு விடை காண்கிருன் எனக் காண்போம்.

வசந்த சேனையும் மாதவியைப் போலவே, சிறந்த நலங்கள் யாவும் பெற்ற கணிகை. அவள் சதைத் தலைவனுகிய சாருதத்தனைக் காதலிக்கிருள். அவனும் பிறப்பால் பிராமணன்; தொழிலால் வணிகன். வணிககுல ஒழுக்கமே அவனுக்குத் தொழிலால் உரியது. பரத்தையோடு இன்பம் துய்த்தல் சமுதாய உயர்நிலையிலிருந்து அவனை வீழ்த்தாது. அவள் அவனை நாடிச் செல்லுகிருள். இருவருக்கும் காதல் வாழ்க்கை அமைகிறது. அவளும் தனது குல ஒழுக்க விதிகளை மீறுகிருள். அவர்கள் காதல் வாழ்க்கைக்கு தடை சகாரன் வசந்தசேனைமீது கொண்ட காம நோக்கு. அவ்வாறு அவனை நோக்கவும் அவனை அணுகவும் செல்வம் படைத்த எவனுக்கும் அச்சமுதாயத்தில் உரிமையுண்டு. வசந்தசேனை அவனை மறுக்கலாம். ஆனுல் ஒருவனேடு காதல் வாழ்க்கை வாழ்வதற்கு அவளுக்குச் சமுதாயம் உரிமையளிக்காது. இச்சிக்கலால் காதலர் பிரிவு ஏற்படுகிறது. சகாரன் முயற்சியாலும், வஞ்சகத்தாலும் பொருண்மையாலும் சாருதத்தன் கொலைத் தண்டம் விதிக்கப் பெற்ருன். அரசன் மாறியிருவிடில் அவன் தண்டம் நிறைவேறி இருக்கும். ஆனுல் சாருதத்தனது உதவிபெற்ற ஆரியகன் அரசனுகி அவனை விடுதலை செய்கிருன்.

இந்நிலையில் சூத்திரகன் காட்டும் முடிவு என்ன? வெகு துணிச்சலாகக் கணிகையைக் குலவதுவாக ஆக்கிவிடுகிருன். 'குலவது' என்னும் குலமகளிர்க்குரிய கௌரவத்தையும் அளித்து, அதற்குரிய வகையில் முக்காடும் இடப்படுகிறது. இதனை அரச ஆணையால் நடைபெறுவதாகவே சித்தரிக்கிருன் சூத்திரகன். நம்பமுடியாத ஒன்றை நடத்திக்காட்டி தன் கதையளவில் 172 புரட்சிக்கொடி நாட்டியிருக்கிருன்.

14. இவ்வாருக இளங்கோவும், சூத்திரகனும் கணிகையரான தத்தம் கதைத் தலைவியரை, தத்தம் மனதிற்குகந்த வகையில் முறையே துறவியாகவும், குலமகளாகவும் ஆக்கியுள்ளார்கள்.

### இருநூல்களும் காட்டும் சமுதாயத்தைக் காணலாம்,

இரு நூல்களும் நால்வகை வருணப்பாகுபாட்டை வெளிப்படுத்துகின்றன. ஆனுலும் மண்ணியல் சிறுதேர் (மிருச்சகடிகா) காட்டும் சமுதாயத்தில் சாதிப்பாகுபாடு செறிவில்லாது இருப்பதைக் காண்கிருேம். (133) அந்தணன் வாணிபம் செய்வதும், மற்ருெரு அந்தணனுகிய சருவிலகன் களவு செய்வதும் உள்ளன 173 (133) தீண்டாமை பற்றிய பேச்சு காணப்படவில்லை. 174 (134)

திருமணத்திற்கும் சாதிப்பாகுபாடு தடையாகஇல்லை. அந்தணன் கணிகையை, அல்லது அவளது அடிமையை மணக்க முடியும். பிரதிலோம விவாகம் பற்றிய பேச்சு மிருச்சகடிகாவில் இல்லை. 175 (137)

14.2 அரசியல் புரட்சி சுலபமானதாக இருந்தது. அரசில் திருப்தியற்றவரும், வெறுப்புக் கொண்டவரும் தகுந்த தலைவனைக்கொண்டு அரசனைக் கொலைசெய்துவிட்டுத் தம் தலைவரை அரசனுகப் பிரகடனப்படுத்திவிடமுடிந்தது 176 (ப. 144)

சூதாட்டத்தில் துன்பமுற்ற சம்வாககன் வசந்தசேனையால் விடுவிக்கப்பட்ட பின், துறவையே நிவாரணமாகக் கருதுகிறுன். குல ஒழுக்கம் நீங்கிய கீழ்மக்கள் மேற்கொள்ளும் துறவுநிலை விளக்கமுறுது [177] (ப: 221:பா:150).

15.0 இனி இவ்விருநூல் ஆசிரியர்களும் வாழ்ந்த காலத்தைக்காணலாம்.

மிருச்சகடிகா ஆசிரியர் சூத்திரகன், பாச கவிக்குப்பிற்பட்டவர்; வாமனர்க்கு முற்பட்டவர் ஆகவே இவர்காலம் கி. பி. முதலாம் நூற்றுண்டிலிருந்து நான்காம் நூற்றுண்டிற்குட்பட்ட இடைவெளி எல்லைக்குள் இருக்கலாம். மொழியியல் அமைப்பால் காளிதாசருக்கு முற்பட்டவராகவும் இருக்கலாம் என டாக்டர் தேவஸ்தாரி [178] (ப:8) கூறியுள்ளார்.

அதுபோலவே, 'இரட்டைக் காப்பியங்கள் வீரயுகத்தை (சங்க காலத்தை) அடுத்த காலப் பகுதியிலே தோன்றியிருக்கவேண்டும்' [179] என டாக்டர் கைலாசபதி கூறியுள்ளார். (ப: 128)

16·1 நூலாசிரியர்கள் தத்தம் வழியிலேயே கதைப்போக்கிற்கு வெவ்வேறு முடிவைக்காட்டியுள்ளனர். ஆனுல் அது தனிப்பட்ட இரு பாத்திரங்களின் முடிவாகவே அமைந்தன. ஆகவே அச்சமுதாயச் சூழல் ஒன்றும் மாறிவிடமுடியாது என்பதைக் கருத்திலிருத்தவேண்டும்.

16·2 அதனுல்தான் ஆணுதிக்கச் சமுதாயத்தின் விளைபொருளான கணிகையர்-குலமகளிர் சிக்கல் ஒரேடியாகத் தீர்ந்துவிடாமல் நின்று நிலவி வருகிறது. அதனடிப்படையில்தான் பேராசிரியர் சிவத்தம்பி அவர்கள் கூறுவது போல, "பொதுமகளிர் முறை, ஒரு மனிதாபிமானச் சிக்கலாகவும், அறைகூவலாகவும் மனையில் வாழும் கிழத்திக்கு இருந்தது" [180] ஆணுதிக்கச் சமுதாயம் மாறும் வரையில் இந்நிலை மாறப் போவதில்லை.

---

*இக்கட்டுரை எழுத 'மிருச்சகடிகா' விற்கு பண்டிதமணி கதிரேசஞ் செட்டியாரின் தமிழ்மொழிப் பெயர்ப்பாகிய மண்ணியல் சிறுதேரும்'* V. G. Paranjpe *யின் ஆங்கில மொழிப் பெயர்ப்பான* The Toy cart of clay *யும் பயன் படுத்தப்பட்டுள்ளது.*

1 தொல்காப்பியம்
2 எங்கல்ஸ்-பக்கம் 150
3 ,, ,, 151
4 ,, ,, 152
5, 6, 7 Dr. கா. சிவத்தம்பி 1971-ஜுலை ஆராய்ச்சி
8 மண்ணியல் சிறுதேர் பக்கம் 83 பாட்டு 21
9 சிறுதேர் ப: 180 பா: 116
10 ,, ப: 181: பா 120
11 ,, ப 182 பா 121
12 ,, ப 112
13 ,. ப 198
14 மணிமேகலை 18: 19.20
15 ,, 18: 21-22
16 ,, 16: 10
17 . சிறுதேர் ப 83 பா 21
18 சிலம்பு ப 14 160-165.
19 சிறுதேர் ப 83 பா 121
20 ,, பா 22
21 ,, பா 88 பா 29
22 ,, ப 89
23 ,, ப 89 பா 30
24 ,, ப 181 பா 121
25 ,, ப 231 பா 172
26 ,, ப 182 பா 122
27 ,, ப 221 பா 150
28 மேகலை 18: 103-111
29 ,, 18 11-22
30 சிலம்பு 3: 168
31 மேகலை 5: 81
32 ,, 18 97-102
33 ,, 11-22
34 ,, 18: 7-8
35 ,, 24: 19-24

36 சிறுதேர் ப 83 பா 121
37 ,, ப 95
38 ,, ப 181 பா 120
39 ,, ப 231 பா 172
40 ,, ப 295 பா 172
41 ,, ப 231 பா 172
42 சிலம்பு 11: 180-183
43 ,, 9: 69
44 ,, 7 கட்டுரை
45 மேகலை 5: 81-82
46, 47 சிலம்பு 5: 224
48 ,, 5; 50
49 ,, 8: 109
50 ,, 5: 50
51 ,, 5: 51
52 ,, 16: 125
53 ,, 14: 71
54 ,, 22: 142
55 ,, 22: 139
56 ,, 14: 167
57 ,, ப 362-380
58 மேகலை 24: 22
59 சிலம்பு 154: 154-159
60 ,, ப 120
61 ,, ப 360 அரும்பத உரை
62 ,, 14: 147 ,,
63 ,, 14: 166 ,,
64 ,, ப 14: 160, 161 ,,
65 ,, ப 14: 146-147
66 ,, ப 377
67 ,, ப 360
68 மேகலை 18: 33-41
69 The Sanskrit Drama Dr. Keith P. 133
70 மேகலை 18: 65-66
71 சிலம்பு 30: 10-22
72 ,, 14: 126-145
73 ,, 8: 17
74 ,, 13: 69
75 ,, 4: 27
76 ,, 4: 27.28
77 ,, 15: 38
78 ,, 15: 21
79 ,, 15: 40-41
80 சிறுதேர் ப 193
81 ,, ப 192
82 ,, ப 194
83 ,, ப 199
84 ,, ப 201
85 ,, ப 202
86 சிலம்பு 3: 8-9
87 ,, 3: 10-11
88 ,, 3: 161
89 ,, பதிகம் 15
90 ,, 8: 64-65
91 ,, 7 கட்டுரை
92 சிறுதேர் ப: 220
93 ,, ப: 300 பா:245
94 ,, ப: 314 பா: 260
95 ,, ப: 354.
86 ,, ப: 230.
97 ,, ப: 90 பா: 40
98 சிலம்பு 3:161-163
99 ,, 3:168.
100 ,, 3:164-175.
101 சிறுதேர் ப: 89.
102 ,, ப: 95. பா: 38.
103 ,, ப: 300: பா.245.
104 ,, ப: 314: பா: 260.
105 ,, ப: 246.
106 ,, ப: 219.
107 சிலம்பு 5:129, 130.
108 ,, ப: 108.
109 ,, 15:143.
110 ,, 15: 139-141.
111 ,, 9:64.
112 ,, 29:3.
113 ,, 16:74-80.
114 ,, 16:81-83.
115 ,, 30:98-99.
116 ,, 17:5.
117 ,, 12:47-53.
118 ,, 22:155.
119 ,, 28:210.
120 சிறுதேர் ப: 247.
121 ,, ப: 165.
122 ,, ப: 246, 247.
123 ,, ப: 415.
214 ,, ப: 419.
125 ,, நா. வானமாமலை, 'சங்கும், முத்

தும் சமுதாய மாறுதல்களும் (2)' தாமரை-மே '69.
126 சிலம்பு 10:46.
127 ,, 20:57.
128 சிறுதேர் ப:277.
129 ,, ப: 361 பா. 306.
130 சிலம்பு 1:36.
131 ,, 2:1.
132 ,, 13:65, 66.
133 ,, 15:91.
134 சிறுதேர் ப:97.
135 ,, ப:337.
136 ,, ப:335.
137 ,, ப:346.
138 ,, ப:347.
139 ,, ப:371, பா:320.
140 ,, ப: 374 பா:326.
141 ,, ப:184.
142 ,. ப:
143 சிலம்பு 7:1.
144 ,, 13: 104-114.
145 சிறுதேர் பா: 79, 80, 81.
146 ,, ப:161.
147 ,, ப:340.
148 சிலம்பு 10:46.
149 ,, 10:47.
150 சிறு ப;101. பா: 46.
151 ,, ப:107: பா:52.
152 சிலம்பு 8:109.
153 ,, 7, கட்டுரை.
154 ,, 13:94, 95.
155 சிறு ப: 342, 343.
156 சிலம்பு 15:91,92.
157 ,, 15:84, 85.
158 சிறு ப:90.
159 எங்கல்ஸ் ப:140.
160 ;, ப:142,143,
161 கானல்வரி-தெ. பொ. மீ. ப. 108.
162 சிலம்பு 21:5-34.
163 ,, 3:159-163.
164, 165 எங்கல்ஸ் ப:152.
166 ,,
167 சிலம்பு 13:89-91.
168 ,, 13:94-95.
169 ,, 27:105-108.
170 ,, 29:7.
171 பழந்தமிழர் வாழ்வும் வழிபாடும் Dr. கைலாசபதி ப. 142.
172 சிறு ப:419,420.
173 ப:133
174 ப:134
175 ப:137
176 ப:176
(173–176) Dr. தேவஸ்தாலி Introduction to the study of Mrichakatika
177 சிறு ப 221. பா: 150.
178 Dr. தேவஸ்தாலி ப. 8.
179 Dr. கைலாசபதி
180 Dr. சிவத்தம்பி 'ஆராய்ச்சி' ஜூலை 1971.

---

## சொந்தச் செலவு 2 கோடி டாலர்

அரிஸ்டாடில் ஒனாஸிஸ் ஒரு கிரேக்க கோடீசுவரர். இவருடைய கோடிகளுக்காக, காலஞ் சென்ற அமெரிக்க ஜனாதிபதியின் விதவை ஜாக்குலின், 64 வயதான இவரை இரண்டாவது கணவராக மணம்செய்துகொண்டார். இவருடைய சொந்தக் குடும்பச் செலவுக்கு 2 கோடி டாலர் ஆண்டு தோறும் ஆகிறதாம். அப்படியானால் இவருக்குச் சொந்தமான மூலதனம் எவ்வளவோ? அமெரிக்காவில் ஹோவார்டுஹூயூஸ் என்ற கோடீஸ்வர முதலாளிக்கு 200 கோடி ரூபாய் மூலதனம் இருப்பதாக அரசாங்கக் கணக்குகளிலிருந்து தெரிகிறது. இதேசமயம் அமெரிக்க மக்களில் ஒரு கோடிப்பேருக்கு பிழைப்புக்குக் காணாத குறைந்த வருமானம் இருக்கிறதென்று அரசாங்கப் புள்ளி விவரங்கள் கூறுகின்றன. அச்சமுதாயத்தில் மிகச் சிலருக்கு எல்லையற்ற செல்வமும், மிகப்பலருக்கு தம் உழைப்புச் சக்தியைத் தவிர விற்பதற்கு எதுவுமில்லாத நிலையும் உள்ளது. (நியூடைம்ஸ்.)

# கமலாம்பாள் சரித்திரம்

எஸ். தோதாத்திரி.

[கமலாம்பாள் சரித்திரம் தமிழில் எழுதப்பட்ட முதல் நாவல் என்று சிலர் கூறு கிறார்கள். பிரதாப முதலியார் சரித்திரம் காலத்தால் அதற்கு முந்தியது எனினும் அது ஒரு கற்பனை வயமான கதையேயன்றி, உருவமைப்பிலும், நடப்பியல் தன்மையிலும் நாவலாக இல்லை என்று விமர்சகர்கள் கருதுகிறார்கள். இவையிரண்டையும் நாவலுடைய தன்மைகள் என விமர்சகர்கள் எல்லோருமே ஒப்புக்கொள்கிறார்கள். அவ்வாறாயின் தமிழக கிராம வாழக்கையில் நடப்பியல் படிமத்தை அளிக்கும், நாவலுருவம் கொண்ட முதல் தமிழ் நாவல் அதுதான். அதனை எழுதிய பி. ஆர். ராஜமய்யரின் சமூக நிலையும், தத்துவ நிலையும் அந்த நாவலின் படைப்பையும், பத்திரங்களையும், கருத்துகளையும் பாதித்துள்ளன. நாவல் எழுந்த சமூகச் சூழல் கதாபாத்திரங்களின் சமூக நிலைச்சார்புகள், இவற்றால் கதை மாந்தர்களின் உணர்வு, சிந்தனை ஆகியவற்றை மதிப்பீடு செய்ய தோதாத்திரி முயன்றுள்ளார்.

ராஜம் ஐயரின் நூற்றாண்டு முடிவின் நினைவாக இக்கட்டுரையை அர்ப்பணிக்கிறோம்.

-ஆசிரியர்]

1.0 ராஜம் ஐயர் எழுதிய "கமலாம்பாள் சரித்திரம்" தமிழ் நாவலை ஆராயும் எல்லோருக் கும் நன்கு பழக்கமான ஒரு நூல் ஆகும். தமிழ் நாவலின் வரலாற்றை அறிய முற்படும் ஒவ் வொருவரும் படிக்கவேண்டிய நவீனங்களில் ஒன்று கமலாம்பாள் சரித்திரம். முதல் தமிழ் நாவலான "பிரதாப முதலியார் சரித்திரத்திலி ருந்து" கலை முறையிலும் (Artistic Method), சமூகத்தைப் பிரதிபலிப்பதிலும், கதாபாத்திர அமைப்பிலும் முற்றிலும் வேறுபட்ட நாவல் 'கமலாம்பாள் சரித்திரம்' 'பிரதாப முதலியார் சரித்திரம்' உருவாக்கிய அற்புத நவீனச் (Romance) சூழ்நிலையிலிருந்து தமிழ் நாவலை விடுவித்த பெரும்பங்கு ராஜம் ஐயருக்கு உண்டு. தமிழ் நாவலை விமரிசனம் செய்யும் க. நா. சுப்பிரமணியம், கமலாம்பாள் சரித்திரத்தில் கலை நுட்பக் குறைபாட்டைக் கண்டாலும், அது மொத்தத்தில் வெற்றிகரமான நாவல் என்கி றார். 1 டாக்டர் கைலாசபதி சமூக மாறுபாட் டைச் சித்தரிக்கத் தொடங்கும் நாவல் 'கமலாம்பாள் சரித்திரம்' என்று குறிப்பிடுகிறார். 2 இத்தகைய பாராட்டுக்களைப் பெற்றுள்ள இந்நாவலை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

1.1 தமிழ் நாவல் சென்ற நூற்றாண்டின் பிற்பாதியில் ஏற்பட்ட சமூகப்-பொருளாதார மாறுபாடுகளின் விளைவாகத் தோன்றிய புதிய கலைவடிவம் ஆகும். கி.வா. ஜகந்நாதன் போன்ற பழமை நோக்கு விமர்சகர்கள் எவ்வளவுதான் காலத்தைப் பின்னுக்கு இழுத்து,தொல்காப்பியர் காலந்தொட்டே நாவல் இருக்கிறது என்று வாதிட்டாலும் 3 நாவல் அதற்குரிய இலக்கிய நோக்குடன், இலக்கிய வடிவம் கொண்டு மலர்ந்தது நிச்சயமாக 1850ம் ஆண்டிற்கும் பின்புதான் என்று நாம் கூறலாம். இப்படிப் பட்ட பின்னோக்குப் பண்டிதர்களுக்கு நாம் ஒன்று கூறலாம்: தமிழ் இலக்கியத்தில் பழங் காலந்தொட்டே **கதை இருந்தது; ஆனால் நாவல் இல்லை.** பரமார்த்த குரு கதை, பஞ்ச தந்திரக்கதை, மரியாதை ராமன் கதை போன்ற கதைகள் பரவலாக இருந்தன. கதைகள் எல்லா வற்றையும் நாம் நாவல் என்று கூறமுடியாது.

நாவல் என்ற வடிவத்துடன் முதன் முதலாக வெளிவந்த நூல் வேதநாயகம் பிள்ளை யின் 'பிரதாப முதலியார் சரித்திரம்.' இந்த நாவல் முதல் படைப்பு என்ற பெருமை பெற் றது. ஆனால் இதை நாம் முழுமையானபடைப்பு என்று கொள்ளமுடியாது. வேதநாயகம் பிள்ளை அவர் காலத்தின் அளவிற்கு இதை எழுதி வெளி யிட்டதன் மூலம் மகத்தான சாதனையைச் செய் திருந்தாலும், நாவலுக்குரிய அம்சங்கள் பல குறைந்து காணப்படுகிறது. இதற்குக் காரணங்கள் என்ன?

வேதநாயகம் பிள்ளை மத்தியதர வர்க்கத்தினர்; ரோமன் கத்தோலிக்கக் கிருஸ்தவர்; ஆங்கில அரசில் வேலைபார்த்தவர். எனவே அவர் தமது நாவலில் ஒரு குறுகலான கண்ணோட்டத்துடனே உலகை அணுகுகிறார். அவரது காலத்திலேயே இந்தியாவில் பல புதிய வர்க்கங்கள் தோன்றிய போதிலும் கூட, அவற்றை கவனிக்கத் தவறி விடுகிறார் வேதநாயகம் பிள்ளை. வெள்ளையர் ஆட்சியின் விளைவாலும், புதிய வர்க்கங்களின் தோற்றத்தாலும் அப்பொழுது நிகழ்ந்துவந்த சமூக மாறுபாடுகளைச் சித்தரிக்கும் முயற்சி வேதநாயகம்பிள்ளையிடம் சிறிதளவுகூட இல்லை. அவரது நோக்கமெல்லாம், தமிழ் மொழியில் இருந்த உரை நடைப் பஞ்சத்தை நீக்கவேண்டும் என்பதில் தான் இருந்தது.[4] சீரழிந்துவரும் உலகைச் சீர்திருத்தம் செய்யவேண்டும், உலகிற்கு நன்னெறி புகட்டவேண்டும் என்றகொள்கையை மேற்கொண்டு அவர் தமது புத்தகத்தை எழுதினார்.[5]

1.2 இதனால் அவரது "பிரதாப முதலியார் சரித்திரம்' காவியத்தன்மை பொருந்திய அற்புத நவீனமாக விளங்குகிறது. இது முதல் தமிழ் நாவலின் முக்கியமான பண்பு.

1.3 காவியம் என்பது நிலப்பிரபுத்துவ சமூகத்தின் முக்கியமான இலக்கிய வடிவம். காவியத்தின் சிறப்பான பண்பு மனிதனை அவனது குறைபாடுகளுடன் காட்டாமல், நல்லது கெட்டதுடன் காட்டாமல் லட்சியக் குணங்களுடன் காட்டுவது ஆகும். காவியத்தின் கதாநாயகர்கள், தனிப்பெருந் தலைவர்கள்; இராமன் சர்வ வல்லமை பொருந்தியவன்; இலக்குவன் சீற்றத்தின் உறைவிடம்; இராவணன் உலகையே தூக்கி எறியும் பலம் மிகுந்தவன்; தருமன் பொய்யே பேசாதவன்; இந்தத் தலைவர்கள் யாவரும் அரசனின் மறு பதிப்புகள்.

இதன் காரணமாக காவியங்கள் நடப்பு உலகைவிட்டு, ஒரு லட்சிய உலகை மக்கள் முன்பு சித்தரித்துக் காட்டும் சக்திவாய்ந்த சாதனமாக விளங்கின. காவியத்தின் மூலம், காவிய ஆசிரியர்கள் அந்தந்தக் கால ஆள்பவர்களுக்குச் சாதகமான நன்னெறி புகட்டுவதைத் தொழிலாகக் கொண்டனர். காவியத்தைப் போன்று, மக்கள் மனதில் நிலவுடமைச் சமூகத்தின் வீரர்களைப் பற்றியும் மன்னர்களைப் பற்றியும் ஏராளமான கதைகள் நிலவி வந்தன. இக் கதைகள் மனிதனை மனிதனுகக் காணுமல், அதியற்புத வீரனுகக் கண்டன. இவற்றின் முக்கிய நோக்கம் சீமாட்டிகளின் காதலை வர்ணிப்பதும் பெருந்தலைவர்களது வெற்றிகளைப் புகழ்வதும் ஆகும். ஆங்கில இலக்கியத்தில் ஷேக்ஸ்பியர் காலத்தில் சிட்னி என்பவரால் எழுதப்பட்ட 'Arcadia' என்பதும் லிலி என்பவரது 'Epheus' என்பதும் இவ்வகையைச் சார்ந்தவை. இவற்றின் தலையாய நோக்கம் சமூகமுரண்பாடுகளைப் புறக்கணித்து. படிப்பவர்களை கனவு உலகிற்கு அழைத்துச் செல்வதாகும். இவற்றை ஷேக்ஸ்பியரது நாடகங்களுடன் ஒப்பிட்டுப் பார்ப்பவர்கள், அவரது நாடகங்களில் சுடர்விடும் மனிதாபிமானம் சிறிதளவேனும் இவற்றில் இல்லாமல் இருப்பதைக் காண்பார்கள். இவற்றை அற்புத நவீனம் (Romance)என்று அழைக்கிறார்கள்; இவை நடப்பியலுக்குப் புறம்பானவை.

1.4 இவை இரண்டையும் வேதநாயகம் பிள்ளை ஒன்ருக இணைக்கிருர். வேதநாயகம் பிள்ளையின் நூலில் சமூகம் பிரதிபலிக்கப்பட்டிருக்கும் முறையே அது நாவல் இல்லை என்பதைக் காட்டுகிறது. வேதநாயகம் பிள்ளையின் கதாநாயகன் பிரதாப முதலியார் சகல நற்குணமும் பொருந்திய பெருங்குடிப் பிறந்த வீரன். அவனது பிறப்பிலிருந்து கதை தொடங்குகிறது. கதாநாயகி ஞானம்பாள் பெண்மை நலங்கள் யாவும் ஒருங்கு சேரத் திகழும் காவிய நாயகி. இவர்கள் இருவரையும் மையமாகக் கொண்டு அக்காலத்தில் நிலவிவந்த பல சிறுகதைகளையும் நிகழ்ச்சிகளையும் இணைத்துத் தொடுக்கப்பட்ட, அழகற்ற மாலைதான், இந்த முதல் தமிழ் நாவல். இந்த உயர் குடும்பச் சூழ்நிலையில் இருந்துஆசிரியர் இவ்வற்புத நவீனத்தை விடுதலை செய்ய வில்லை. இக்குடும்பங்கள்,முடியாட்சியை ஆதரிக்கும் குடும்பங்களாகவே அவர் சித்தரிக்கிருர். பிரதாப முதலியாரும், ஞானம்பாளும் தங்கள் நிலையில் இருந்து உயர்மட்ட நிலையில் உள்ள குடும்பங்களைத்தான் ஆதரிக்கிருர்கள். அக்கால நிலைக்கு ஏற்ப வேதநாயகம் பிள்ளை முடியாட்சி சிறந்தது என்று கூறுகிருர். இவ்வாறு ஒரு குறுகிய சமூக உலகையே அவர் எடுத்துக்காட்டு

கிறார். இதைக் காவிய இலக்கணங்களுடனும், பொழுது போக்குக் கதைகளுடனும் அவர் கலக்கிறார். இது விக்ரமாதித்தன் கதைகளை கம்ப ராமாயணத்துடன் இணைத்தது போன்று உள்ளது. இதன் விளைவாக முதல் தமிழ் நாவல், நாவலாக இல்லாமல் அற்புதங்கள் நிறைந்த உரைநடைக் காவியமாகத் திகழ்கிறது. மனித உறவுகளைப் புறக்கணித்து ஒரு லட்சியக் கனவு வகை (Idyllic) உருவாகியுள்ளது. இந்த சூழ்நிலையைத்தான் அவரது சுகுணசுந்தரியும் பிரதி பலிக்கிறது.

2.6 ஆனால் பிரதாப முதலியார் சரித்திரம் வெளியிடப்பட்டு பதினெட்டு ஆண்டுகள்கழித்து எழுதப்பட்ட "கமலாம்பாள் சரித்திரம்" தமிழ் நாவலின் வரலாற்றில் ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தியது. இதன் ஆசிரியரான ராஜம் ஐயர், தமக்கென்று ஒரு பாணியை வகுத்துக் கொண்டு எழுதினார். அவரது பாணியின் சாயலை மாதவய்யாவின் நாவல்களிலும், சங்கரராம், கு. வெங்கடரமணி, கல்கி, (கல்கியின் சமூக நாவல்கள்) சிதம்பரசுப்பிரமணியன் ஆகியோரது நாவகளிலும், காணலாம். இந்த நாவலிற்கு முன்னுரையில் குறிப்பிட்டுள்ளது போல [6] கமலாம்பாள் சரித்திரத்தின் வழியேதான் தமிழ் நாவல் சுவடு விட்டுக்கொண்டு போகிறது என்று நாமும் கூறலாம்.

2.1 ராஜம் ஐயரின் **உலகக் கண்ணோட்டம், அவரது தனி மனோநிலையாலும், வர்க்கக் கண்ணோட்டத்தாலும், அவர் கால மதக்கொள்கையாலும் பாதிக்கப்படுகிறது,** இது எவ்வாறு என்று காண்போம்.

2.2 ராஜம் ஐயர் வத்தலக்குண்டில் பிறந்தவர். மத்தியதர வர்க்கத்தைச்சேர்ந்தவர். அவரது குடும்பத்தினர், நடுத்தரமான நிலச்சுவான்தார்கள்: ராஜம் ஐயர் காலத்தில் இதுபோன்ற மத்தியதர வர்க்கத்தினர் ஆங்கிலம் பயின்று அரசாங்கத்தில் உயர் பதவி பெற மிகவும் விரும்பினர். அது அவர்களுக்கு சமூகத்தில் ஒரு அந்தஸ்தையும்,செல்வாக்கையும் தேடித்தந்தது. இந்த நோக்கத்தில் ஆங்கிலக் கல்வி பயின்ற ராஜம் ஐயர், சட்டப்பரீட்சையில் தவறி விட்டார். இது அவருக்கு மனச்சோர்வை அளித்தது, 7 இதன் பிறகு அவர் எழுத்துத் துறையில் நுழைந்தார். எழுத்துத் துறையில் நுழையும்போது சென்னையில் அந்தக் காலத்தில் செயல்பட்டு வந்த இந்துமத ஸ்தாபனங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டார். [8] விவேகானந்தரது ஆசி பெற்ற "பிரபுத்த பாரத" என்ற ஆங்கில இதழின் ஆசிரியராக இருந்தார். பல புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை சென்றார்; தனித்தே இருந்து சிந்தனை செய்து உண்மையை - கடவுள் ரகசியத்தை - அறிந்து கொள்ளும் ஞான மார்க்கத்தைப் பின்பற்றினார்; இவரது வாழ்வில் ஒரு சந்நியாசினியும், சந்தானந்த சுவாமிகள் என்ற துறவியும் குறுக்கிட்டனர்; பிறப்பால் ஸ்மார்த்த பிராமண குலத்தைச் சேர்ந்திருந்ததால் அத்வைத சித்தாந்தத்தைக் கற்றிருந்த ராஜம் ஐயர், மேலே விவரித்த வாழ்க்கைச் சூழ்நிலையினால், பழுத்த அத்துவைதியானார். உலகம் மாயை என்று கூறுவதிலும், உலகில் காணும் பொருள்கள் அநித்தியமானவை, அவற்றிற்கு எல்லாம் மேலாக கடவுள் இருக்கிறார் என்று நம்புவதிலுமே தன் வாழ்நாள் முழுவதையும் கழித்தார். இவ்வாறு எல்லாவற்றிலும் பரந்து, பேருண்மையாக விளங்கும் கடவுளை அடைவதற்கு அமைதியான நிலையில் தியானம் செய்தலே தகுந்த மார்க்கம் என்று கருதினார்.

2.3 இந்தக் கருத்துக்களின் சாயல் 'கமலாம்பாள் சரித்திரம்' முழுவதிலும் காணப்படுகிறது. நாவலின் பின்கூற்று ராஜம்ஐயரது வேதாந்தக் கருத்துக்களுக்கு சிறந்த எடுத்துக் காட்டு. [9]

"இப்பொய்க் கதையை இதுகாறும் பொறுத்தருளிய நேயர்காள்" என்று கூறுகிறார். தான்சிருஷ்டித்த உலகே மாயை என்பதுஅவரது கருத்து; தனது வாழ்வின் மனச் சாந்திக்காக வேதாந்தத்தில் ஈடுபட்டதை, இங்கு ஆசிரியர் மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிறார். இக்கதை பலவித மனோசஞ்சலத்தின் மத்தியில் எழுதப்பட்டதால் இதில் குறைகள் உள்ளன என்று கூறுகிறார் ராஜம் ஐயர். [10] தமது அத்வைதக் கருத்து முழுவதையும் பின்வரும் பகுதியில் வெளிப்படுத்துகிறார். [11]

"இது நிற்க இச்சரித்திரமெழுதுவதில் எனக்குக் கதையே முக்கியக் கருத்தன்று ......... (பகவானது) மாயா விபூதியாம் பெருங்கடலுள் ஓர் அலையுள், ஓர் நுரையுள், ஓர் துளியில், ஓர் அணுவை யானெடுத்து, அதனுள் என் புல்லறிவிற் கெட்டிய மட்டும் புகுந்து பார்த்து:

சாணினுமுளனோர் தன்மையணு வினைச்சத கூறிட்ட
கோணினுமுளன் மாமேருக்குன்றிலு முன்னிந் நின்ற
தூணினுமுளன் முன்சொன்ன சொல்லினு முளனித்
தண்மை காணுதி விரைவில்

என்று காட்ட தூண் பிளந்து தோன்றிய அங்கும் இருக்கக்கண்டு திசை திறந்தண்டங் கீறிச் சிரித்த செங்கட் சீயத்தைக் கண்டு கைகூப்பி, ஆடிப் பாடி யரற்றி உலகெலாந் துள்ளித் துகைத்த இளஞ்சே யொப்ப யாமும் ஆடிப்பாடி தேட வேண்டுமென்பதே யன்றி வேறன்று."

2.4 இத்தகைய தத்துவ-உலக நோக்குடன்தான் ராஜம் ஐயர் அவரது கால யதார்த்தத்தைக் காண்கிறார். ராஜம் ஐயரது தத்துவம் அகவயமானது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். சமூகத்தில் ஏற்படுகிற பலவிதச் சிக்கல்களுக்கு சமூகத் தீர்வு காண்பதை விட்டுவிட்டு, அவற்றிற்குச் சிந்தனையளவிலேயே தீர்வு கண்டு சமூகமே மாயை, அதற்குப்பின்னால், பிரகலாதன் முன்பு தோன்றிய நரசிம்மமூர்த்தியைப் போன்று கடவுள் கரந்துறைகிறான், எனவே புறவாழ்வு முக்கியமில்லை, கடவுளைத் தேடும் அகவாழ்வுதான் பரமானந்த நிலை என்ற தத்துவம்தான் ராஜம் ஐயரின் தத்துவம். இந்தக் கண்ணோட்டமுள்ள ராஜம் ஐயர் தமது நாவலில் அவர்கால நடப்பியல்பை அணுகுகிறார். அது அவரது அத்வைதக் கொள்கைக்கு அடங்காமல் அக்கொள்கையிலிருந்து முரண்படுகிறது. இது எவ்வாறு என்று காண்போம்.

3.0 'Being determines consciousness' என்று காரல் மார்க்ஸ் கூறுகிறார். ராஜம் ஐயரது நாவலுக்குத் தேவையான மூலப்பொருள்களை வழங்கியது அவர்கால சமூக அமைப்பாகும். ராஜம் ஐயர் காலம், இந்தியாவின் பொருளாதார-சமூக அரங்கில் பல மாறுதல்கள் நிகழ்ந்துவந்த காலம். இரு பெரும் சமூக அமைப்புகளை நேரில் கண்டவர் ராஜம் ஐயர். ஆண்டாண்டு காலமாக இருந்த நிலப்பிரபுத்துவ சமூகம் தேய்வடைந்து கொண்டிருந்த நேரம் அவரது காலம்; வெள்ளையர் வரவால் ஆலை முறையும், போக்குவரத்து வசதிகளும், செய்தித் துறையும் தலையெடுக்கத் தொடங்கிய காலம். பிரிட்டிஷ் அரசின்கீழ், இந்திய நிலவுடைமையாளர்கள் தங்களது அதிகாரத்தைச் செலுத்தி வந்த காலம். இவர்களது அதிகாரம் இந்திய கிராமப் புறங்களில் கொடிகட்டிப்பறந்த அக்காலத்திலேயே வெள்ளை முதலாளிகளும், அவர்களைச் சார்ந்த இந்திய முதலாளிகளும், குட்டி முதலாளிகளும் நகரங்களில் தங்கள் வாணிபத்தைப் பெருக்கி வந்தனர். இவர்களது வளர்ச்சியைக் கண்ணுற்ற விவேகானந்தர் கூட 12 'பாரதம் இதுவரை வர்ணசிரமத்தின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது; இப்பொழுது வைசியர்களின் (வியாபாரிகள், பூர்ஷ்வாக்கள்) ஆட்சி நடைபெறுகிறது; வருங்காலத்தில் சூத்திரர்கள் ஆட்சி இடம்பெறும் (சோஷலிசம்)" என்று குறிப்பிட்டார்.

இந்தத் தலைமை வர்க்கங்களுடன் முரண்பட்ட தாழ்த்தப்பட்டவர்களும், விவசாயிகளும் வாழ்ந்துவந்த காலம் அது. இவ்வர்க்க அமைப்பில் புதிதாகத் தோன்றிய முக்கிய வர்க்கங்கள் இரண்டு (1) வெள்ளை முதலாளிகள் (2) இந்திய முதலாளிகள்; தொழிலாளிகள். ஜமீன்தார்களும், பண்ணையடிமைகளும், வெள்ளையர்கள் வருவதற்கு முன்பிருந்தே இந்தியாவில் இருந்தவர்கள். வெள்ளையர்கள் வரவால், அவர்களுக்குச் சட்டரீதியான அங்கீகாரம் கிடைத்தது. அதனால் சமூகத்தில் அவர்களது பங்கு தீவிரப்பட்டது.

3.1 இந்த சமூக அமைப்பில் இருந்து ராஜம் ஐயர், விவேகானந்தர் குறிப்பிட்ட வர்ணசிரம தர்ம ஆட்சியாளர்களில் ஒரு பிரிவினர்களான அந்தணர்களது வாழ்க்கையைச் சித்தரிக்க முற்படுகிறார். பிறப்பால் அந்தணரான ராஜம் ஐயருக்கு அவரது ஜாதி முதலில் தென்பட்டதில் வியப்பில்லை.

அந்தணர்கள் இந்தியாவில் பரம்பரை பரம்பரையாக அறிவாளிகளாக விளங்கினர்; ஆளும் வர்க்கத்தைச் சார்ந்திருந்தனர். வெள்ளை யர்கள் ஆட்சிக் காலத்தில் அவர்கள் தங்கள் வாழ்க்கைமுறையைச் சற்று மாற்றவேண்டி வந்தது. உள்நாட்டு ஜமீன்தார்கள் தயவை விட்டு வெள்ளையர்களது தொண்டர்களாகிவிட் டால் சமூக அந்தஸ்து உயரும்: தமிழ்நாடு முழு வதையுமே ஆட்டிப்படைக்கலாம் என்று கண்டு கொண்டனர். இதன் காரணமாக, இயல்பாக படிப்பாளிகளாக இருந்ததால், ஆங்கிலம் பயின்று பல அரசு அலுவல்களில் அமர்ந்தனர். அவ்வாறு அரசாங்கப் பணிகளில் நுழைந்தகாலை புதிய வர்க்கங்களைச் சந்திக்கும் வாய்ப்பு அவர் களுக்குத் தமிழ்நாட்டில் கிடைத்தது. அந்தப் புதிய வர்க்கங்களைப் பற்றி தங்கள் போக்கில் ஒரு முடிவிற்கு வந்தனர்.

3.2 "கமலாம்பாள் சரித்திர"த்தின் கதா நாயகர் முத்துசுவாமி ஐயர் இந்த நடப்பியல் பைப் பிரதிபலிக்கிருர். அவர் சிறுகுளம் கிரா மத்தில் உள்ள ஒரு மிராசுதார், அவர் தம்பி, சுப்பிரமணிய ஐயரும் ஒரு மிராசுதாரே; முத்து சுவாமி ஐயர், நாவலில் சிதைந்துகொண்டுவரும் கூட்டுக் குடும்ப அமைப்பின் தலைவனுகக்காட்சி தருகிருர்.

சென்ற நூற்ருண்டின் பிற்பகுதியில் இது போன்ற இந்து கூட்டுக் குடும்பங்கள் பல அக, புறக் காரணங்களால் சிதைவடைந்து கொண்டி ருந்தன. நாவலாசிரியர் இங்கு வெளி உலகத் தொடர்பு இல்லாத கூட்டுக் குடும்பம் ஒன்று உட் பொருமையினுல் எவ்விதம் சிதைகிறது என்பதைச் சுட்டிக் காட்டுகிருர். முத்துசுவாமி ஐயர் பண ஆசை காரணமாக பம்பாய் வியாபா ரத்தில் ஈடுபடுகிருர். அந்த வியாபாரத்தில் நஷ்டம் ஏற்படுவது, முத்துசுவாமி ஐயர் குடும் பம் அழிவதற்கு பல காரணங்களில் ஒன்று என்ருலும், மூலகாரணம் அதுவல்ல. முக்கிய காரணம் சிறுகுளம் கிராமத்தில் உள்ள பிராமண சமூகத்தினரிடையே நிலவிய பொருமையாகும். ராஜம் ஐயர் தமக்கே உரித்தான ஹாஸ்ய ரசத் துடன் அறிமுகப்படுத்தும் 'வம்பர் மகாசபையும்' 'கல்யாணத் தடபுடலும்' பிராமணர்களிடையே, பணக்காரனை, ஏழை பிராம்மணன் எவ்வாறு காண்கிருன் என்பதன் வெளிப்பாடு ஆகும்.

3.3 முத்துசுவாமி ஐயர் குடும்பத்தின் தலைவன்; பிரபல திருடன், பேயாண்டித்தேவன் கூட அவரிடம் மதிப்பும் மரியாதையும் வைத்தி ருக்கிருன். முத்துசுவாமி ஐயருக்கு உட்பட்டவர் சுப்பிரமணிய ஐயர். தன் தமையனுக்குச் சம மான செல்வம் இருந்தாலும் அவர் குடும்பத்தலை வரான முத்துசுவாமி ஐயருக்கு உட்பட்டவர். பின்னவரது வேண்டுகோளுக்கு இணங்க தாசில் தார் வைத்தியநாத ஐயர் உடனடியாக பேயாண்டித் தேவனைப் பிடிக்க ஆட்கள் சகிதம் வருகிருர். முத்துசுவாமி ஐயர் அரசாங்கத்திலும் செல்வாக்கு உள்ளவர். அவரது மகள் லக்ஷ்மி திருமணத்திற்கு பெரும்பாலான அரசாங்க அதி காரிகள் வருகின்றனர். இது மதிப்பிற்குரிய விஷயம். இது, எவ்வாறு நிலவுடைமை சமூகத் தின் தலைமைப் பகுதியினர், ஆங்கில அரசுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர் என்று காட்டுகிறது. *13*

"ராமசாமி சாஸ்திரிகளுடைய குமாரர் சிரஸ்தார் நாராயணய்யருடைய பெட்டி வண்டி ஒன்று,... தாசில் குப்புசுவாமி அய்யருடைய பெட்டி வண்டி ஒன்று, டிப்டி கலெக்டர் ராம ராயர் குதிரை வண்டி ஒன்று இவ்விதமாகக் கூடிய முப்பது வண்டிகளும் விடிந்து பயணம் புறப்பட ஆரம்பித்தது" இவ்வாறு ஆசிரியர் அரசு அலுவலர்கள் முத்துசுவாமி அய்யர் வீடு தேடி வருவதை வருணிக்கிருர்.

அதே சமயத்தில் முத்துசுவாமி அய்யரு டைய சுற்றத்தார்களில் ஏழைகள் இல்லாமல் இல்லை. அவர்கள் முத்துசுவாமி அய்யரை அண்டிப் பிழைத்தனர். இதை ஆசிரியரே வரு ணிக்கிருர். *14* "சிறுகுளத்தருகில் கடுகனூர், குள்ளப்புறம், விருத்தக்கப்பட்டி, சோரனூர் முதலிய சில பிரபலமான கிராமங்கள் உண்டு. அவற்றின் மகாஜனங்களுடைய உத்தியோகம் அபிசிரவணம் சொல்லல், பரிசாரகம் செய்தல், சவண்டி தின்னல், பொய்ச்சாட்சி சொல்லல் முதலியனவாம்......முத்துசுவாமி அய்யருடைய பெண்ணின் கலியாணத்தைச் சிறப்பிக்க எண்ணி இந்த பிராமணோத்தமர்கள்... விபூதி டப்பி,

ஸ்தாலிச் செம்பு...ஆகிய இவ்வித உத்தியோகச் சின்னங்களுடன் சர்வாபரண பூஷிதர்களாய் சிறுகுளத்தை நோக்கிக் கலியாணத்திற்கு ஒரு வாரத்திற்கு முன்னமேயே தங்களுடையஇஷ்ட மித்திர சகல பரிவார பந்துக்களுடன்... புறப் பட்டு வந்துவிட்டார்கள்''

3.4 முத்துசுவாமி ஐயருக்கு இவ்வளவு செல்வாக்கு இருந்தாலும், அவரைவிட சமூகத் தில் பணத்தில் குறைந்தவர்களுக்கு உள்ளூரப் பொருமை இருந்தது. அவரை எப்படி அழிக்க லாம் என்பது அவர்களது சிந்தனையாகவே இருந்தது. முத்துசுவாமி ஐயரது சொத்தைப் பற்றி பொருமை மேலிட்டால் நாகு என்ற பெண் கூறுகிருள் 15 ''பணமாம் பணம். இந்த ஊருக்குத்தான் அதிசயம். ஆலையில்லாவூரில் இலுப்பப்பூ சர்க்கரை.'' பொன்னம்மாளுக்கு தன் மகனை கமலாம்பாள் வளர்ப்பதே பிடிக்கவில்லை. முத்துசுவாமி ஐயரை ''புருஷக் கைம்பெண்''16 என்று கூறும் அளவிற்கு அவளது உள்ளத்தில் பொருமை வளர்ந்திருக்கிறது.

3.5 இந்தப் பொருமை முத்துசுவாமி ஐயர் குடும்பத்தையே அழிக்கிறது. இத்துடன் நில வுடைமையாளர்களிடையே இருந்த போட்டியும் சேர்ந்து அச்சமூகத்தையே சிதைக்கிறது. இது எவ்வாறு? சுப்பிரமணிய ஐயர் பண்ணையார் களுக்குரிய ஆடம்பரப் பிரியர். தன் செல்வ பலத்தைக் காட்ட வேண்டும் என்ற எண்ண மூள்ளவர். அவர் புதிய ஜல்லிக்கட்டுக்காளைகளை வாங்குகிருர். கோமளநாயக்கனூர் ஜமீன்தார் காளையும் ஆண்டுதோறும் ஜல்லிக்கட்டுக்கு அவ் வூருக்கு வருவது வழக்கம்; ஆண்டுதோறும் அதைப்பிடிக்க ஆள் இல்லாமல் அது வெற்றி மாலை சூடும். சுப்பிரமணிய ஐயர் தன் காளை வெற்றிபெறவேண்டும் என்பதற்காக,ஆட்களைத் தயார் செய்து, ஜமீன்தாரின் காளையை அடக்கு கிருர்; ஐயரது காளை ஜெயிக்கிறது. இதனுல் கோபம்கொண்டு ஜமீன்தார் பேயாண்டித்தேவன் என்ற கொள்ளைக்காரனை ஏவிவிடுகிருர். அவன் ஐயரது காளைகளைத் திருடுகிருன். முத்துசாமி ஐயர் தம்பியின் உதவிக்கு வருகிருர். பேயாண் டித்தேவன் கைதாகிருன். ஆனுல் பொருமை பிடித்த மனைவியின் சொற்படி ஆடும் சுப்பிர மணிய ஐயர், பேயாண்டித்தேவனுக்கு எதிராகச் சாட்சி சொல்லுகிருர். பேயாண்டித் தேவன் விடுதலையாகி வந்தவுடன் முத்துசாமி ஐயர் குழந்தை நடராஜனை ஆள் வைத்து தூக்கிச் சென்றுவிடுகிருன். இது முத்துசாமி ஐயர் குடும்பம் சிதைய முதற் காரணம். இதில் பொருமை அதிகமாகப் பங்கு பெறுவதைக் காண்கிருேம்.

3.6 முத்துசுவாமி ஐயர் அவரது தம்பி யைப் போன்றவர் அல்லர். சற்றே பரந்த கண்ணுேட்டம் உள்ளவர். **ஆசிரியரைப் போன்று ஒரு வேதாந்தி; ஆனுல் உலகின் மாறுதல்களையும் கவனிப்பவர்**; தம்பி முத்து சுவாமி ஐயர், மிராசுதார்களுக்குரிய குணங்கள் நிரம்பியவர்; அவர் வெளி உலகைக் காண்பவர் அல்லர்; புதுமையை வரவேற்காதவர்; **முத்து சுவாமி ஐயர், அவர் காலத்தின் புது வர்க்க மான வியாபாரிகளுடன் தொடர்புகொள்ளு கிருர்**. பம்பாயில் ஒரு வியாபாரத்தை சில கூட்டாளிகளுடன் ஆரம்பிக்கிருர். அது லாபம் தருகிறது. அதனுல் லாப நோக்குடன் தன் சொத்து முழுவதையும் விற்று முதலீடு செய்கி ருர்.

பணத்தாசை கொண்டு மோசக்காரர்களு டன் சேர்ந்து வியாபாரம் நடத்துகிருர் முத்து சுவாமி ஐயர். அவர் பணம் மறைந்துவிடுகிறது. அதைத்தேடி பம்பாய் சென்று பலன் இன்றிச் சிதம்பரம் வருகிருர்.அங்கு துறவியாகவேண்டும் என்ற எண்ணம் அவருக்கு எழுகிறது. அப் பொழுது பொன்னம்மாள் ஏவிவிட்ட ஆட்கள் கமலாம்பாள் நடத்தை கெட்டவள் என்று முத்துசுவாமி ஐயரிடம் கூறுகின்றனர். உடனே உலகை வெறுத்து அவர் தற்கொலை செய்து கொள்ள முயலுகிருர். அவரை ஒரு சந்நியாசி தடுத்தாட்கொள்ளுகிருர். இதன் பின்பு அவர் அத்துவைதம் பேசுகிருர்; துறவியாகிருர். இதனுல் உலகைக் காண மறுத்துவாழ்க்கையை வெறுக்கும் குருட்டு மனுேபாவத்தில் ஈடுபடு கிருர். இதனுல் முத்துசுவாமி ஐயர் குடும்பம் முற்றிலும் சிதைந்துவிடுகிறது. இச்சிதைவை ஆசிரியரே பேயாண்டித் தேவன் மூலம் வரு ணிக்கிருர். 17

4.0 இவ்வாறு முத்துசுவாமி ஐயர் மூல மாக வாசகர்களிடம் பேசுவது ராஜம்ஐயர் தான்.

ஸில் காட்டப்படும் இலட்சியப் பெண்கள் கூட அங்குள்ள குலபதிக்குக் கட்டுப்பட்டு நடப்பவர் களே.

இக்காரணங்களினுல் பாரதிக்கும் கிருத்திகா வின் ஃபிராய்டிஸக் கருத்துக்களுக்கும் திணையத் தனை தொடர்பும் இல்லை என்பது புலனுகிறது. அவ்வாறு காட்டக் கிருத்திகா எடுத்துக் கொண் டுள்ள முயற்சி பொருந்தாது நிற்கிறது.

7.0 இதுகாறும் நாம் ஆராய்ந்தவற்றி லிருந்து கீழ்க்கண்ட முடிவுகளுக்கு வரலாம்.

கிருத்திகாவின் இவ்விரு நாவல்களில் வாஸவேச்வரம் நடப்பியலைப் பிரதிபலிக்கும் நாவல். புதிய கோணங்கியோ நடப்பியலை விட்டு விலகிய படைப்பு. இவ்விரண்டு நாவல் களிலுமே ஃபிராய்டிஸம், நவீன ஃபிராய்டிஸம், நீட்ஷேயிஸம் ஆகியவற்றைப்புகுத்த ஆசிரியை முயன்ருலும் முன்னது நடப்பியலைச் சித்தரிப்ப தால் அதில் இக்கொள்கைகள் மிகப் பலவீன மாகவே காட்சியளிக்கின்றன. இவ்வகையில் ஆசிரியையின் நோக்கம் நிறைவேறவில்லை. ஆனுல் புதிய கோணங்கியோ நடப்பியலை விட்டு முற்றிலும் விலகியிருப்பதால் இந்த அகவயக் கொள்கைகள் அப்படைப்பில் ஆதிக்கம்செலுத் துகின்றன.

புதிய கோணங்கியில் சமுதாயப் பிரச்னை களுக்குத் தீர்வு காண ஆசிரியை முயல்கிருர். ஃபிராய்டிஸம், நவீன ஃபிராய்டிஸம் ஆகியவற் ருேடு நீட்ஷேயின் பாஸிஸக் கருத்துக்களையும் இணைத்துத் தீர்வுகாண அவர் முயல்கிருர். இம் முயற்சிக்குத் துணையாக ஒரு கற்பனை உலகை யும் சிருஷ்டித்துக் கொள்கிருர். எரிக் ஃப்ராம் ஸென் புத்த மதத்தைத் துணைக்கழைத்தது போலவே இவர் சக்தி வழிபாட்டையும், பாரதி பாடல்களையும் பொருந்தாத முறையில் தனது கற்பனைப் படைப்புக்குள் திணிக்க முயன்றிருக் கிருர். ஒன்றுக் கொன்று பொருந்தாத விஷயங் களைப்பொருத்த எடுத்துக்கொண்ட முயற்சியால் 'புதிய கோணங்கி' நடப்பியலை விட்டு முற்றிலும் விலகி நாவல் எனும் இலக்கணத்துக்கு பொருந் தாது நிற்கிறது.

## மேற்கோள்கள்


1 பேராசிரியர் நா. வானமாமலை- தாமரை ஜனவரி 70 இதழ் ஃபிராய்டிஸம் என்ற கட்டுரை.

2 Joseph Reynolds-Freudianism and Neo Freudianism-Peace freedom and socialism Nov. 71-vol 14 Page 38

3 Do Page 39

4 Will Durant-The story of philosophy-Washington Square press Inc-Newyork-Page 421

5 Frank Thilly-A History of Philosophy-Central Book Depot Allahabad-Page 501

6 Sigmund Freud-Collected Papers Vol V-London 1950 Page 285

7 Will. Durant-The Story of Philosophy-Washington Square Press Inc. Newyork-Page 437

8 Prof. P. V. Bapat-2500 Years of Buddhism- The Publication Division-Page 359

# ஆரியர்-திராவிடர்.

டாக்டர், சுநீதிகுமார் சாட்டர்ஜீ.
(தேசீயப் பேராசிரியர், கல்கத்தா. தலைவர், சாகித்ய அகாடெமி.)

1968 ஜனவரியில் இந்தியாவில் முதன் முறையாக நடைபெற்ற இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கம் இந்தியவியல் துறையில் பல அம்சங்களில், குறிப்பாக-விரிந்து பரந்து கிடக்கும் இந்தியவியலுக்கு உட்பட்ட ஆனால் இதுகாறும் ஒதுக்கப்பட்டுவந்த தமிழியல், திராவிடவியல் ஆய்வுகள் சிறப்பிடம் பெற்ற நிலையில் முக்கியத்துவம் பெற்றதாக விளங்குகிறது. தமிழ், திராவிட இயல்கள் இந்தியவியலில் மிக முக்கியமான சரியான தொரு இடத்தைப்பெற்றுள்ளனவாகும். ஆனால் போதிய சான்றுகள் இன்மை காரணமாகவும், அதனை நிரப்பி உண்மை கண்டறிவதில் மிகையான கற்பனைக்கு இடம் தந்ததன் காரணமாகவும், இந்திய வரலாறு, பண்பாடு ஆகியவற்றின் தோற்றம், வளர்ச்சி பற்றிய கண்ணோட்டங்களில் தவறான பல போக்குகள் இதுகாறும் இருந்துவந்தன. இதற்குக் காரணம், தமிழர், மற்றும் திராவிட மக்களின் பண்பாட்டு உலகத்தைப் பற்றியும் அவர்தம் பண்பாட்டுக் கொடை பற்றியும் இந்த ஆய்வாளர்கள் சரிவர அறிந்து கொள்ளவில்லை என்பது மட்டுமல்ல; அன்னாருக்கு திராவிடம் மற்றும் ஆரியமல்லாத இந்தியப் பண்பாடு பற்றிய சரியான கண்ணோட்டம் இன்மையும், அறியாமையும்கூட முக்கியமான காரணங்களாகும். (அவர்களுக்கு ஆரியமல்லாத பிற இந்தியப் பண்பாடுகளிடத்து ஒரு கசப்புணர்வு இல்லையென்று கூறமுடியாது.) இவையே இந்திய வாழ்க்கைத் தத்துவத்திற்கும், இந்தியரிடமுள்ள இந்தியத் தன்மைக்கும் உள்ள அடிப்படைகளில் ஒன்றாக அமைந்துள்ள, அதாவது ஆரியருக்கு முற்பட்ட இந்திய வாழ்க்கை மற்றும் பண்பாடுகளின் அடிப்படையைச் சரிவரக் காணமுடியாமல் போனதற்குக் காரணங்களாகும்.

இந்தோ-ஐரோப்பிய நாகரிகங்களுக்கு முற்பட்ட எகிப்து, ஆசியா மைனர், மெசபடோமியா முதலிய அண்மைக் கிழக்கு நாகரிகங்கள் வீழ்ச்சியடைந்த பின்னரும், கிரேக்கம், ஆசியா மைனர், ஈரான், இந்தியா முதலிய நிலப் பகுதிகளில் இந்தோ, ஐரோப்பிய இன மக்கள் கி.மு. 15ஆம் நூற்றாண்டு வாக்கில் குடியெறிப் பழம்பெரும் நாகரிகங்களை உருவாக்கத் தொடங்கியதற்குப் பின்னரும் உள்ள பழம் ஐரோப்பாவின் வரலாற்றில் ஆதிக்கம் பெற்றிருந்த ஆரியர், அல்லது இந்தோ-ஐரோப்பியர் பற்றிய கொள்கையே ஆரிய வருகைக்கு முற்பட்ட இந்திய நாகரிகம் பற்றிய ஆய்வு கடந்த அரை நூற்றாண்டுக்கும் மேலாக ஒதுக்கப்பட்டு வந்ததற்கு மூலகாரணமாகும். ஆரிய ஆதிக்கம் பெற்ற இந்திய வரலாறானது அமெரிக்கா, ஆப்ரிக்கா, ஆசியா, ஓசியானா முதலிய பகுதிகளில் கடந்த 5 நூற்றாண்டுகளாக சிவப்பு, கருப்பு, பழுப்பு, மஞ்சள் முதலிய நிறத்து இனமக்களை வென்று அவர்களுக்கு நாகரிகம் கற்றுத் தந்ததாகக் கூறப்படும் ஐரோப்பியரின் அனைத்துலகப் பரவலுக்கும், ஆதிக்கத்திற்கும் கட்டியங் கூறி வரவேற்கும் ஒன்றாகக் கருதப்பட்டது. 3000 ஆண்டுகட்கு முன்னர் இந்தியாவிற்கு வந்துகுடியேறிய இந்த வெள்ளை நிறத்து ஆரியர்களுக்கு அதே நிறத்தை உடைய ஐரோப்பியர்கள் இரத்தத் தொடர்புடைய சகோதரர்களாகக் கருதப்பட்டனர். இந்தியாவில் ஏற்கனவே வசித்துவந்த பழுப்பு, கருப்பு, மஞ்சள் நிற மக்களாகிய

திராவிட, ஆஸ்திரிய, மங்கோலிய மக்கள் தங்களுக்கென தனி நாகரிகம்,பண்பாடு இல்லாதவர்களாகவே கருதப்பட்டனர். (இந்தக் கருத்து ஒரு வகையில் அறியாமையினாலும், வெறுப்புணர்ச்சியினாலும் ஏற்பட்டதேயாகும். இந்தியாவில் ஆரியர்க்கு முற்பட்டு வசித்து வந்த இம் மக்களை வென்று அடக்கியாள வந்த ஒரு நாகரிகமான இனமாக ஆரிய இனம் கருதப்பட்டது. எனவே, ஆரியப் பண்பாடு மேன்மையான பண்பாடெனவும், அதனைப் பிற இனமக்கள் வேறுவழியின்றி அப்படியே ஏற்றுக் கொண்டார்கள் எனவும் நம்பப்பட்டது. ஆரியர் வருகைக்கு முற்காலத்து மக்களின் பாரம்பரிய நிலைமையும், அந்நிலையில் தோன்றிய எண்ணங்களும் நடைமுறைகளும், இந்து அல்லது ஆரிய சமயம், நாகரீகம் இவற்றின் அடித்தளமாகவே ஆகி, அதுவே ஆரியப் பண்பாடாக வளர்ந்துவிட்டது. இக்காரணத்தினால் இந்தியாவின், ஆரிய வருகைக்கு முற்பட்ட திராவிட, ஆஸ்திரிய, மங்கோலிய மக்களது பண்பாட்டு அம்சங்கள் பூரணமாக ஒதுக்கப்பட்டு விட்டன.

ஆனால், இவையெல்லாம் இன்று மாறி விட்டன. ஆரியமல்லாத மற்றவை, குறிப்பாகத் திராவிடம் இன்று தனக்குரிய மதிப்பைப் பெற்றுக் கொண்டு வருகிறது. மாறிய இப்போக்கிற்கு மூன்று காரணங்களைக் கூறலாம். முதலாவதாக, சென்ற நூற்றாண்டின் இறுதியில் பழந்தமிழ் இலக்கியத்தைப்பற்றியும், அதன் வழி பழந்தமிழ்ப் பண்பாட்டு மரபு பற்றியும் தீவிரமான ஒரு ஆய்வுத் தொடங்கப் பெற்றது என்பதைக் குறிப்பிட வேண்டும். இந்த ஆய்வினை மேற்கொண்டவர்கள் பலர். அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள், ராவ் பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை (1832—1901), வி. கோ. சூரியநாராயண சாஸ்திரி (1871-1903), திருமலை சண்முகம் பிள்ளை (c 1880), சமஸ்கிருதத்திற்கெதிராகத் தமிழைத் தீவிரமாக ஆதரித்த ஏ. கே. அமிர்தம் பிள்ளை (1845—1899), செல்வ கேசவராய முதலியார் (+1921), தற்காலத்திய மதுரைத்தமிழ்ச் சங்கத்தைத் தொடங்கிய பாண்டித்துரைத் தேவர் (+1911), யாழ்ப்பாணத்துச் சபாபதி நாவலர் (+1803), வெ. கனகசபை பிள்ளை (+1903), ஜெ. மு. நல்லுசாமிப்பிள்ளை (1860—1920) முதலியோராவார். எல்லாவற்றிற்கும் மேலாக இந்த வரிசையில் சிறப்பாகக் குறிப்பிடப்பட வேண்டியவர், மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் (1861—1942) ஆவார். இவர் பழந்தமிழ் இலக்கியங்கள் பலவற்றை, மிகச் சிரமப்பட்டு உழைத்து ஆழ்ந்தகன்ற புலமையறிவுடன் சிறப்பாகப் பதிப்பித்து வெளியிட்டார். இப்பதிப்புக்கள், முதன் முதலில் தமிழ் அறிவாளிகள் மத்தியில் பழந்தமிழ் இலக்கியத்தைப் பற்றிய உணர்வினை ஏற்படுத்தின. அடுத்துக் குறிப்பிடப்பட வேண்டியவர் கிறித்துவ சமய போதகராகத் தமிழகத்தில் பணியாற்றிய ஜி. யு. போப் (1820—1907) ஆவார். தமிழ் மொழியைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதிய இவரது இலக்கண நூல்களும், திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகிய நூல்களின் இவரது ஆங்கிலமொழி பெயர்ப்புகளும், தமிழ், தமிழிலக்கியம் பற்றி வெளி உலகம் நன்கு அறிந்து கொள்ளும்படியாகச் செய்தன.

இது, தமிழர்கள் தமது பழந்தமிழ் இலக்கியச் சிறப்பைக் கண்டறிவதற்குக் காரணமாயிருந்ததுடன், தமிழ், மற்றும் திராவிட வியல் ஆய்வின் உண்மையான ஒரு மறுமலர்ச்சியையும், தமிழ் இலக்கியத்திலும் பண்பாட்டிலும் ஒரு விருப்பத்தையும், ஆர்வத்தையும் உண்டாக்கியது. சமஸ்கிருதத்திற்கு அளவுக்கு மீறிக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவமே தமிழின் சிறப்பை ஓரளவுக்கு மறைத்தது என்ற கருத்து சிலவிடங்களில் தோன்றியது. ஆனால் தமிழ் வேதத்திற்கும், வட அல்லது சமஸ்கிருத வேதத்துடன் அங்கீகாரம் அளிக்கப் பட்டிருப்பது போன்ற செய்திகள் இது முழு உண்மையல்ல என்பதை உணர்த்தினும் மேற்கூறிய கருத்து நிலவி வரவே செய்தது.

இனி, இரண்டாவதாக இந்திய வரலாற்றிற்கும், உலக வரலாற்றிற்கும் புதிய விளக்கங்கள் நடைமுறைக்கு வரத்தொடங்கின. அவற்றில் பழைய நாகரீகத்தை உருவாக்குவதில் இந்தோ — ஐரோப்பியர்களுக்கும், இந்தியாவிலிருந்த அவர்களது ஆரிய சந்ததியினருக்கும் கொடுக்கப்பட்ட முக்கியத்துவம் மறுபரிசீலனைக்குட்பட்டது. வரலாற்று நிலைபெற்ற இந்துப்

பண்பாட்டிற்கும், மற்ற நாகரிகங்கட்கும் உரிய அடிப்படைகளைத் தந்தனவாக ஆரியவருகைக்கு முற்பட்ட பண்பாட்டு அடிப்படைக் கூறுகள் தமக்குரிய உண்மையான பண்புடனும், முக்கியத்துவத்துடனும் அங்கீகரிக்கப்படத் தொடங்கின. இவ்வாறு திராவிடம் தனக்குரிய முக்கியத்துவத்தைப் படிப்படியாகப் பெற்றுவந்தது. சென்ற நூற்றுண்டின் ஆங்கிலம் மற்றும் ஐரோப்பிய மொழி நூலார் வரலாற்று ஆசிரியர் ஆகியோரின் வழியே சென்று தங்களை ஆரியர் வழி வந்தோர் என்று எண்ணிய ஆங்கிலக் கல்வி பெற்ற பிராமணர், க்ஷத்திரியர் முதலிய இந்திய (தமிழகம் உட்பட) மேல் சாதி மக்கள் இந்தியாவில் ஆரியரின் ஆதிக்கத்தை ஏற்றுக் கொண்டனர். ஆனுல் பொதுமக்கள், குறிப்பாக பிராமணரல்லாத மக்கள் இதனை ஒத்துக் கொள்ளவில்லை. ஆனுல் இவர்களில் பலர் கல்வியறிவில் மேம்பட்டவர்களல்லர். எனவே அத்தகைய துறையில் இவர்களுக்குச் செல்வாக்கும் இல்லை. தவிரவும், இத்தகைய கருத்துக்களின் வரலாற்றுப் பூர்வமான முக்கியத்துவமும், பாதிப்பும் இவர்களுக்கு தெரியாது. இறுதியில் அவர்கள் தமிழ் ஆய்வின் மறுமலர்ச்சி காரணமாகவும், அடுத்து ஆரியரல்லாத பிறர் இந்தியத் தொன்மைப் பண்பாட்டின் வளர்ச்சிக்கு ஆற்றியிருக்கின்ற பங்கு அங்கீகரிக்கப் பட்டதாலும், மூன்ருவதாக இந்தியாவிற்குள் தமிழ், மற்றும் திராவிடத்தின் மறுமலர்ச்சி தந்த ஊக்கத்தின் காரணமாகவும், திராவிடத்தின் (குறிப்பாகத் தமிழின்) பழஞ் சிறப்பினை நிலைநாட்டிக் கொள்ள வழிகண்டு கொண்டார்கள்.

தமிழும், திராவிடமும் ஆய்வு உலகில் தமக்குரிய இடத்தைப் பெற்று மறுமலர்ச்சியை அடைந்ததற்கு மூன்ருவது காரணமாக அல்லது தூண்டுதலாக அமைந்தது சிந்து, பஞ்சாப் நிலப்பகுதிகளில் மொகஞ்சோதோரோ, ஹரப்பாவின் மிக உயர்ந்த நாகரிக வகைகளை இந்தியப் புதைபொருள் ஆராய்ச்சிக் கழகம் கண்டுபிடித்துத் தந்ததாகும். (இக்கண்டுப்பிடிப்புக்குத் துணைநின்றவர்கள் இக்கழகத்தின் மேலதிகாரியாகப் பணியாற்றிய காலஞ்சென்ற ராக்கல் தாஸ் பானர்ஜி, மற்றும் இதைப் பற்றி விரிவாக ஆராய்ச்சி செய்த சர். ஜான் மார்ஷல், அவருடைய துணைவர்கள் நோனி கோபால் மஜும்தார், மாதவ சொரூப் வாட்ஸ் போன்ருேராவர்) இந்தப் புதைபொருள் நாகரிகத்தில் காணப்படுகின்ற செங்கற்களால் கட்டப்பட்ட இரண்டு அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மாடிகளை உடைய வீடுகளைக் கொண்ட நகரமைப்பும், நன்கு கட்டப்பட்ட சாக்கடை அமைப்பும் குளியலறையும், பிறவசதிகளும் இந்த நாகரிகம் அரைகுறை நாடோடிகளாகவும், பெரும்பான்மையும் ஆடு மேய்ப்பவர்களாகவும் வாழ்ந்து வந்த ஆரியர் தம் நாகரிகத்திலும் பேரளவு மாறுபட்டது என்பதை உணர்த்துகிறது. மேலும் இந்த மொகஞ்சதாரோ, ஹரப்பா நாகரிகம் பற்றிய ஆய்வு தொடங்கப்பட்டபோதே, ஆரிய வருகைக்கு முற்பட்ட இந்த நாகரிகம் திராவிட நாகரிகமே என்று அறிஞர்கள் கருதினர். இது தமிழ் மற்றும் திராவிட மரபில் வந்தவர்களுக்கு புதியதொரு எழுச்சியைத் தந்தது. தமிழ், திராவிட ஆய்வுகள் பன்மடங்கு பலத்துடன் தொடங்கின.

இவ்வேளை அரசியல், பொருளாதார நிலைமைகளும் மாறத் தொடங்கின. ஆரியத்துக்குப் பதிலடி தரும் உணர்வையும் உட்கொண்ட திராவிட எழுச்சிக்கு இந்த மாற்றங்கள் கட்டுப்பாடான, வலுவான ஒரு குணத்தையும் தந்தன. அதுவரை கல்வியும், அதிகாரமும் தந்த பேருதவியினுல் அறிவாளிகள் ஜாதியான பிராமண ஜாதி இந்தியாவிலேயே குறிப்பாக தென்னிந்தியாவிலேயே ஆதிக்கம் பெற்ற ஜாதியாக விளங்கி வந்தது. மக்கள் விகிதாச்சார எண்ணிக்கையிலும் பல மடங்காக பிராமணர்கள் அரசாங்க, மற்றும் பிற நிறுவனங்களை முழுக்கவும் ஆதிக்கம் செய்தனர். இதுவே திராவிட மொழிகள் பேசப்படும் மாநிலங்களில் பின்னர் அரசியல் சமுதாயப் பிரச்னைகளாக உருவெடுப்பதற்குரிய பிராமணர், பிராமணரல்லாதார் என்ற போராட்டமாக வளர்வதற்கு மறைமுகமான காரணமாக அமைந்தது. ஏனென்ருல், பிராமணரல்லாத சாதாரண மக்கள் தாங்கள் அலட்சியப்படுத்தப் படுவதாகக் கருதினர். பிராமணர், பிராமணரல்லாதவர் என்று ஏற்பட்ட முரண்பாட்டின் காரணமாக பிராமணரோடு தொடர்புபட்ட எல்லாமே-சமஸ்கிருதம் உட்பட-வெறுப்புக்கும், சந்தேகத்திற்கும் ஆளாகின. தமிழ் நாட்டில் தமிழர்களே முழுமையாகி ஆதிக்கம் செலுத்தவேண்டும் (பிற திராவிட மாநிலங்

களில் இவ்வுணர்வு ஓரளவு குறைந்த வேகத்துடன் காணப்பட்டது) என்ற உணர்வுடனேயே இந்தவகையான பிராமண, சமஸ்கிருத வெறுப் புணர்வுகள் தோன்றின.

தமிழும் திராவிடமும் பெற்றிருக்கும் இந்த முக்கியத்துவம், அதன் நியாயமான உரிமைக் குட்பட்டதேயாகும். தமிழ் பற்றிய ஆய்வுக்கு இதனால், இயல்பாகவே புதிய சக்தி தோன்றியது; அது பரவலாகவும் தோன்றியது. இந்து சமயத்துப் புனித நூல்களான வேதங்கள், புராணங்கள் முதலியவற்றின் மொழியென்ற அளவில் சமஸ்கிருதத்திற்கு இருந்த பெரிய மதிப்புடன் இணைந்து கிடந்த ஆரிய ஆதிக்க உணர்வானது திராவிடவியல் ஆராய்ச்சியில் ஒரு தவறான கண்ணோட்டத்தையும் உண்டுபண்ணியது என்பதை நாம் ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும்

வட இந்தியாவில் சிந்து, கங்கை வெளிப் பிரதேசங்களில். ஆரியர் ஆரியரல்லாதவர் இனங்களிடையே ஏற்பட்ட கலப்பின் வழியாக பெருகிய மக்களிடையே கி. மு. ஐந்தாம் நூற்றுண்டில் இந்து சமயமானது (அதன் முப்பெரு வடிவங்களாகிய பிராமணீயம், சமணம், பௌத்தம் ஆகியவற்றுடன்), அதாவது, ஆரிய, திராவிட, ஆஸ்திரிய, மங்கோலிய இனங்களின் கலப்புப் பண்பாடாகவும், மதமாக விளங்கிய இந்து சமயம் உருவாகி அங்கீகரிக்கப்பட்டது. ஆரியர், திராவிடர், நிஷாதர், கிரபதர் (ஆரியரின் தலைமையில்) ஆகியோரால் உருவாக்கப்பட்ட கலப்புப் பண்பாடு. சமயம் தெற்கே ஆந்திரம். கர்நாடகம்,கேரளம், தமிழகம்ஆகிய பகுதிகளுக்குப் பரவிப் பெருகியது. காவியங்களிலும், புராணங்களிலும் காணப்படுவது போலவே, பிராமணியத்தின் தோற்றத்திலும் ஆரியர், திராவிடர் தொடர்பு இந்தியாவில் ஏற்பட்ட காலத்திலிருந்தே, ஆரிய திராவிடக் கொள்கைகளும், நம்பிக்கைகளும், சடங்குகளும் பின்னிப் பிணைந்து கிடந்தன. கி. பி. முதல் ஐந்து நூற்றுண்டுகளில் தெற்கில் இக்ஷ்வாகு, பல்லவ, கங்க, சாளுக்கிய அரசர்கள் காலத்தில் பெரும்பாலான பிராமண, பௌத்த, சமண ஆச்சாரியர்கள் வந்து குடியேறத் தொடங்கியவுடன் திராவிட ஆரிய நிலங்களின் இணைப்பு முழுஅளவில் நடைபெற்றது.இந்தியாவின் மிகப் புராதனமான, பிராமணப் பழங்கதைகளும், புராணங்களும் (ஜைன, புத்த சமய புராணங்களும், அச் சமயத் துறவிகளின் கதைகளும் உட்பட) சிறந்த கலைத் தோற்றங்களாக திராவிட நாட்டில், அமராவதி, நாகார்ஜுன கொண்டா, மகாபலிபுரம், காஞ்சிபுரம், பாதாமி, பட்டாட்கடல், முதலிய பகுதிகளிலும் ஆரிய, மகாராட்டிர வருகைக்கு முற்பட்ட கன்னட நாட்டுப் பகுதிகளாகிய கர்லா, பஜா, அஜந்தா, எல்லோரா, எலிபெண்டா, கனேரி முதலிய பகுதிகளிலும் தோன்றி வளர்ந்தன. தென்னகத்து ஞானிகளான கேரளாவில் தோன்றிய சங்கரரும் தமிழகத்து இராமானுஜரும், துளு நாட்டைச் சேர்ந்த மத்வரும், வடநாட்டில் இவர்களுடைய துணைவர்களும், ஆதரவாளர்களுமான இராமனந்தர், கபீர், சைதனியர், நானக், சங்கர தேவர், வல்லபாச்சாரியா, துளசிதாசர் முதலியோரும் இந்தியாவின் இன்றைய இந்து சமய மக்களிடையே செங்கோல் செலுத்தும் பிராமண தத்துவங்கள் கோட்பாடுகள், பிராமண சமய நிறுவனங்கள் ஆகியவற்றை உருவாக்கினர். இந்து சமய உலகைக் காக்கவும், அதற்குப் புத்துணர்ச்சியளிக்கவும் திராவிட ஆரியப் பகுதிகள் இரண்டுமே, தம் பகுதிகளிலிருந்து விஜய நகர அரசர்கள், இராஜபுத்திரர்கள், சிவாஜி, குரு கோவிந்தசிங் முதலிய பல பெருவீரர்களைத் தந்திருக்கின்றன.

சமஸ்கிருதமானது திராவிடக் கடவுள்களோடு ஒன்றுக்கப்பட்ட ஆரியக் கடவுள்களின் இந்து உலகின் பொதுவான (ஆரிய, திராவிட, ஆஸ்திரிய,மங்கோலியக் கலப்பான) ஆராதனைக்குரிய கடவுள்களினுடையவும், முனிவர்களினுடையவும் மொழி என யாவராலும் மௌனமாக ஏற்றுக்கொள்ளப்பட்டதானது இந்துக் கோட்பாட்டில் மனிதனின் ஆதிகாலத்துத் தொன்மையான மொழி என்ற இடத்தை சமஸ்கிருதத்திற்குத்தந்தது. இந்நிலைமைக்குச் சிலவிடங்களில் குறிப்பாகத் தமிழகத்தில் இலேசாக எதிர்ப்பு இருந்தபோதிலும், மற்ற இடங்களில் அது கற்றுக் கொள்ளப்பட்டது. சமஸ்கிருதம் தொன்மையான மொழி என்ற அளவில் அதுவே பிறமொழிகளுக்கு மூலம் எனவும் இயற்கையாகவே அப்பகுதிகளில் ஒத்துக் கொள்ளப் பட்டது. தமிழ் உட்பட்ட திராவிட மொழிகள்

சமஸ்கிருதத்தின் மறுவடிவங்களாகவும், திரா விட பிரகிருதம் என்றழைக்கப்பட்ட வற்றின் (சொல்லளவில் தான் உண்மை நிலையிலல்ல) திருந்திய வடிவங்களாகவும் கருதப்பட்டன. (சிந்தனையற்ற சமஸ்கிருதப் பற்றுளர்கள் போன்ற தமிழ், திராவிடப் பற்றுளர்கள் சமஸ் கிருதமே மூலம் என்ற கருத்திற்கு நேர்மாருக திராவிடமே மூலம் என்ற கருத்தும் தோன்றி யுள்ளது) சமஸ்கிருதத்தில் வழங்கும் சொற்களா கிய பிகா (குயில்,இலத்தீன் மூலச் சொல் பிகஸ்) நேம (பாதி; பழம் பாரசீக மூலம் நேம என்பது: தற்காலப் பாரசீக மூலம் நீம்), சத (வேதச் சடங்குகளில் பயன்படும் ஒரு மரப் பாத்திரம்; மூலம் தெரியவில்லை), தாமரச (தாமரை; மூலம் தமிழ்) முதலிய சொற்களை மீமாம்ச சூத்திரங் களின் பழைய உரைகாரராகிய சபா சுவாமி என்பவர் கடன் வாங்கப்பெற்ற பிறமொழிச் சொற்களாகக் கூறுகிருர். ஆனுல் மீமாம்சத் தத்துவத்திற்கு உரையெழுதிய அவருடைய வழித் தோன்றலும், கி. பி. 6-ம் நூற்ருண்டில் பல்லவர் காலத்தில் தமிழகத்திலிருந்து வடக்கே வந்தவர் என்று கருதப்படுபவரும் ஆகிய குமாரில பட்டர் என்பவர் பழந்தமிழ்ச் சொற் களாகிய சோறு, அதர், பாம்பு, மால், வயிறு முதலிய சொற்களுக்கு வடமொழியிலிருந்து மூலம் கூற, (மீமாம்ச தத்துவ உரையில் இவ் வாராய்ச்சி தேவையற்ற ஒன்று எனினும்) முயலுகிருர்.

பிற்காலத்தில் தமிழே முழுமையாக பிரா கிருத மொழிகளிலிருந்து தோன்றியது என்று காட்டுவதற்கும், தமிழ்ச் சொற்கள் சமஸ்கிருத மூலத்திலிருந்தே தோன்றின என்று காட்டு வதற்கும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. ஆனுல், அறிவியலுக்குப் புறம்பான இத்தகைய முயற்சிகள் இப்போது பழங்கதையாகி விட்டன. தற்கால மொழி ஆராய்ச்சி முறைகளாகிய விளக்கமுறை, வடிவமைப் பாராய்ச்சி முறை, ஒப்பீட்டு முறை, வரலாற்று முறை முதலிய முறைகள் இன்று தமிழ், மற்றும் திராவிட மொழிகளின் ஆராய்ச்சிக்குப் பயன்படுத்தப்படு கின்றன. இதனடிப்படையில் திராவிட மொழி களின் ஒலியியல், சொல்லியல், தொடரியல், பொருளியல், முதலிய மொழிக்கூறுகள் ஆராயப் பட்டு அவற்றிற்குரிய உயர்ந்த பெருமையான இடங்களும் நிறுவப்பட்டுள்ளன. சமஸ்கிருதம் போன்ற பிற மொழிக் குடும்பங்களிலிருந்து வேறுபட்ட ஒரு தனிக்குடும்பமாகத் திராவிட மொழிக் குடும்பம் இன்று நிறுவப்பட்டுள்ளது.

இவ்வாறு இங்கே, தமிழ் திராவிட மொழி யியல்களின் மேன்மையையும், விடுதலையையும் நாம் காணுகிறேம். தமிழின் சொந்த இயல்பு அல்லது பண்பினை நாம் கண்டறிகிறேம். இது வரை நம்மிடமிருந்து மறைக்கப்பட்டு வந்த தமிழ்,திராவிட மொழி நிலைகளின் வல்லமையை யும், வளர்ச்சியையும் வெளிக் கொணர்கிறேம். இந்தப் பணிகளில் பலநாடுகளின் ஒத்துழைப்பும் கிடைத்துள்ளது மகிழ்ச்சிக்குரிய ஒன்ருகும். தங்களுடைய பிறப்புரிமை போன்று இத்தகைய ஆராய்ச்சிப் பணியைக் கருதும் திராவிட மொழி பேசும் அறிஞர்கள் மட்டுமல்லாது பிற இந்திய அறிஞர்களும், திராவிடவியல் ஆராய்ச்சியில் கவனம் செலுத்துகின்றனர். தவிரவும், இப்பெரும் பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்ட பல வெளிநாட்டு அறிஞர்களும் நமக்குக் கிடைத்துள்ளனர். அவர்களுள், சென்ற தலைமுறைகளைச் சேர்ந்த இராபர்ட் தெ நொபிலி, கான்ஸ்டான்டைன் பெஸ்கி, பார்த்தோ லோமியோ, சீகன் பால்கு மற்றும் கால்டுவெல், கிரால், பிரௌன், கிட்டெல், குண்டாட், போப், வின்சன், ஸ்டென்கொனவ், ஹர்ன், கிரையர்-சன் முதலியோர்களும், அண்மையில் வாழ்ந்து சென்ற யூல் பிளாக், பி. மெயில், ஆல்பர்ட் மாஸ்டர், கூயிப்பர் முதலியோரும் குறிப்பிடத் தக்கவர்களாவர். இவர்களைத் தவிர, இன்று நம்மிடையே வாழும், கமில்சுவல பெல், எம். எஸ். ஆன்ட்ரெனவ், யூரி கிளாஸொவ், டி. பர்ரோ, எம். பி. எமனே முதலியோரும் திராவிடவியல் ஆராய்ச்சிக்கு நமக்குக்கிடைத்த அறிஞர்களாவர். இப்பொழுது மற்ற எந்த மொழியியல் ஆராய்ச்சியையும் போல இவ்வாராய்ச்சியும் சிறந்த எதிர்கால முடைய பயன் மிக்கத்துறையாக விளங்குகிறது. வேதாந்த சமயக் கொள்கைகளோடு சிக்கிக் கிடந்த நிலைமை பழங்கால நிகழ்ச்சியாகி விட்டது. திராவிட மொழியாராய்ச்சியில் ஈடுபட்டு வெற்றிகண்ட இந்திய அறிஞர்களாகிய கே. வி. சுப்பையா, எல். வி. இராமசாமி ஐயர், பி. எச். கிருஷ்ணமூர்த்தி போன்ற பலரை இங்கு

குறிப்பிட வேண்டியதில்லை என்றெண்ணு கிறேன்.

தமிழ், திராவிட மொழியியல் ஆராய்ச்சிகள், பிறமொழிச் செல்வாக்கு, மொழிஇடையீடு முதலியன தவிர பிற நிலைகளில் வேற்றுமொழிக் குடும்பங்களிலிருந்து தனியாகவும், தொடர்பு படுத்தாமலும் மேற்கொள்ளப்பட வேண்டும். ஆனால், தமிழ், திராவிட பண்பாடுகளைப் பற்றி ஆராயும்போது, குறிப்பாக இந்தியா முழுமைக்கும் பொதுவான தத்துவங்கள், சமயங்கள் பற்றிய உண்மைகள் காணப்படும்போது, இவை திராவிடத்தையும் திராவிடம் அல்லாததையும் பாதித்திருப்பதைக் காணும்போதும் மிகவும் எச்சரிக்கையாக அணுக வேண்டும். ஏனெனில், திராவிடப் பண்பாடு என்று தனித்துச் சிறப்பித்துக் கூறுவதிலும் வேறான தன்மைகள் பண்பாட்டாராய்ச்சியில் காணப்படும். இந்திய நாகரிகம், இந்திய வாழ்க்கை முறை, இந்திய சிந்தனைப் போக்கு, இந்திய சமயம், இந்திய சமுதாய ஒழுக்கம், உண்மை உணர்வு பற்றிய இந்தியக் கண்ணோட்டம் முதலிய அனைத்தும் ஒரு தனி ஒருமையை அளிக்கின்றது. புதிய சில அமைப்புக் கூறுகளைப் பிறநாட்டு மதங்களாகிய இஸ்லாமியமும், கிறித்தவமும் இங்கேகொண்டு வந்தாலும் கூட அவை இந்திய வாழ்க்கைத் தத்துவத்தின் அடிப்படையோடு ஒன்றாது மேலெழுந்தநிலையில் இருப்பதால், மேற்குறிப்பிட்ட இந்தியப் பண்பாட்டின் தனியொருமை சிதையாமலேயே காணப்படுகிறது. இது, தொன்மைத் திராவிடமும், தொன்மை ஆரியமும் சேர்ந்து புதிதாக உருவான ஒரு இராசயனக் கலவையேயன்றி, பிரிக்கப்படக் கூடிய பௌதிகக் கலவையல்ல. 2500 ஆண்டுகளாக இந்த ஒருமதம் இடவேறுபாடுகள், குறுகிய ஜாதி வேறுபாடுகள் முதலியவற்றிற்கு ஏற்ப சில மாறுதல்களுடன் பல பிரிவினதாக்கவும் காணப்பட்டாலும், இந்திய இந்துக்கள் அனைவரையும்-பிராமணரோ, பௌத்தரோ, சமணரோ யாராயினும் — ஒருங்கிணைக்கும் அமைப்பாக விளங்குகிறது. ஆரிய இலக்கியங்களும், திராவிட இலக்கியங்களும் சில இலக்கிய வழக்குகள் நீங்கலாக (உதாரணமாக, நிலம், பொழுது பாகுபாடுகளை மக்கள் வாழ்க்கை ஒழுக்கங்களுக்கு இணையாக செய்யுள் மரபில் பழந்தமிழ் இலக்கியம் கூறுகிறது. பழந்தமிழ் இலக்கியத்திற்கே உரிய இம்மரபு பிற திராவிட மொழி இலக்கியங்களில் காணப்படவில்லை. சமஸ்கிருதம் மற்றும் பிற இந்தோ—ஆரியமொழி இலக்கியங்களிலும் இது சிறிதும் காணப்படவில்லை.) பிற இடங்களின் புற, அகச் சூழல்களில் ஒன்று பட்டிருக்கின்றன. இராமாயணம், மகாபாரதம், சாணக்கியநீதி, காமாந்தகம் முதலிய சமஸ்கிருத இலக்கியங்களைம், தத்துவங்களையும் படித்து, தமிழின் பத்துப்பாட்டு, நாலடியார், சிலப்பதிகாரம், தேவாரம், நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் முதலிய நூல்களையும் படித்தால் அயல்மொழி இலக்கியங்களைப் படிக்கிறோமென்ற உணர்வு இராது. வர்ணனை, நீதி, பக்தி முதலிய வகைகளின் சிறந்த சமஸ்கிருத இலக்கியங்களைத் தழுவி தமிழிலும், கன்னடம் தெலுங்கு மொழிகளிலும் இலக்கியங்கள் பல தோன்றியிருக்கின்றன. தமிழ் இலக்கியங்கள் காட்டும் தமிழகத்து அக, புறப் பண்பாட்டு உலகத்தினை சமஸ்கிருத இலக்கியப் பின்னணியிலிருந்து பிரித்துவிட முடியாது. தொல் காப்பியத்திற்கு (எழுத்து, சூ.,) உரையெழுதிய சிவஞானமுனிவரின் கூற்று இங்கு நினைவுகூறத் தக்கது. 'வடநூல் உணர்ந்தார்க்கன்றி தமிழ் இயல்பு விளங்காது'.

இந்த ஆரிய, திராவிடத்தின் இணைப்பில்-தென்னகத்தின் பண்பாட்டுக் கலவையின் ஒரு குறியீடாக அகத்தியர் விளங்குகிறார். இந்த அகத்தியர் ரிக்வேதத்தில் மித்ரா, வருணா ஆகியோரின் மகனாகவும், உலோபாமுத்திராவின் கணவராகவும் சொல்லப்படுகின்ற முனிவரல்லர். இங்கு நாம் குறிப்பிடும் அகத்தியர் தென்னகத்தில் ஆரியர்கள் பெருமளவில் பரவத்தொடங்கிய கி. மு. 5ம் நூற்றாண்டு வாக்கில் வாழ்ந்தவராயிருக்கலாம். ரிக்வேதத்திற்குப் பிற்பட்ட அகத்தியராகிய இந்த ஆரிய முனிவர் வட இந்தியாவிலிருந்து விந்திய மலைகளைத் தாண்டி வந்தவர். இவர் முதலில் கன்னடம், துளு நாடுகளின் தெற்கே கூர்க் பகுதியில் குடகுப் பிரதேசத்தில் தங்கியிருந்தார். அதன் பின் என்றுமே அவர் வடக்கே திரும்பவில்லை. அந்தக் குடகுப்பகுதியில் காவேரா என்ற தலைவனின் மகள் காவேரியை மணந்து கொண்டார். அவர் தன்னுடன் வடமொழி வேதங்களைப்பற்றிய அறிவினைத் (வேதத்தை பழந் தமிழர்கள் மறை என்றனர்கள். இவ்வேதம் ஆரியர்

களின் ஞானத்திற்கு உட்பட்டது.) திராவிடம் பேசுகின்ற தெற்குப் பகுதிக்குக் கொண்டு வந்தார். தவிரவும், அவர் இலக்கண நூல்கள் எழுதித் தமிழ் மொழியை வளர்க்கவும் முற்பட்டார். அகத்தியரும், தொல்காப்பியம் எழுதிய அவருடைய மாணவராகிய தொல் காப்பியரும் இல்லாத தமிழ் அல்லது திராவிடப் பண்பாடு பற்றியோ, இலக்கியம் பற்றியோ நம்மால் சிந்தித்துப் பார்க்கவும் முடியுமா? அகத்தியரால், உணர்வூட்டப்பட்ட தொல்காப் பியமே சங்கத் தமிழுக்கு அடிப்படை நூலாக விளங்குகிறது; தவிரவும் தமிழின் ஒலியியல், சொல்லியல், இலக்கியப் பொருள் முதலியவற் றிற்குத் திறவுகோலாக தொல்காப்பியத்தின் எழுத்து, சொல், பொருள் அதிகாரங்கள் விளங்கு கின்றன. அகத்தியர் என்ற ஆளுமையில் பழந் தமிழ் இலக்கியத்தைப் போலவே சமஸ்கிருதத் தின் உணர்வும், தமிழின் உணர்வும் ஒன்றாக ஆக்கப்பட்டிருக்கின்றன. ஆரியம், ஆரிய மல்லாத உணர்களின் கலவையாகிய இந்து சமயத்தையே முக்கியமாகக் கொண்ட சமஸ்கிருத உணர்வை இந்த சிந்தனையிலி ருந்தும் இலக்கியத்திலிருந்தும் நீக்குவதென்பது நெய்யப்பட்ட ஆடையிலிருந்து அதன் குறுக்கு நெடுக்கலான இழைகளைப் பிரித்தெடுப்பது போலாகும்.

இந்தியப் பண்பாடு பாதிக்குமேல்-பழைய பாணியில் சொல்லப் போனால் ஒரு ரூபாயில் எட்டணாவுக்கும் மேலாக—திராவிடத்தாலானது, என்று சொல்லாம். திராவிடப் பண்பாட்டுக் கூறு பெரும்பாலும் வெளிப்படையாகத் தெரியா மல் உட்கிடக்கை நிலையில் இருக்கிறது. மேலும் அதன் செயல் மிக அமைதியானதாகவும், அதே நேரத்தில் பூரணத்துவம் பொருந்தியதாகவும் வழங்குகிறது. சமஸ்கிருதக் கூறுகளும் அவற் றின் பின்னைய வடிவங்களும் பெருமளவு திராவிடக் (ஆரியமல்லாத பிறவும்) கூறுகளை ஏற்றுக்கொண்டு மூலமான தம்சொந்த இந்தோ-ஐரோப்பியப் பண்பிலிருந்து வெகுதூரம் விலகிச் சென்று, அதே நேரத்தில் திராவிடத்தோடு மிக அண்மையில் நெருக்கிக் கொண்டிருக்கின்றன. சமஸ்கிருதத்தில் மிக அதிகமாக வழக்கத்தி லுள்ள சொற்களில் 400-500 வரை திராவிட மூலங்களைக்கொண்டவை. இவ்வாறு இங்கே சமஸ்கிருதமானது திராவிடர், மற்றும் ஆரிய ல்லாத பிற மக்களுக்கும் அன்னியமாகக்காட்சி யளிக்கவில்லை. உண்மையில், திராவிடமும் ஆரியமும் ஒரு பொதுவான இந்தியப் பண் பாடாக ஒன்று கலந்துள்ளன. சமஸ்கிருதம், பாலி, பிராகிருதம் மற்றும் தற்காலத்திய இந்தோ-ஆரிய மொழிகள் இத்தகைய இந்தியப் பண்பாட்டினைப் புலப்படுத்துவது போலவே, தமிழ், மற்றும் திராவிட மொழி இலக்கியங் களும் நன்கு புலப்படுத்துகின்றன. இராமாயனம், மகாபாரதம், பாகவதம், பிற புராணங்கள் முதலியனவும், சிவன், உமை, விஷ்ணு. ஸ்ரீ முதலிய கடவுள்கள் பற்றிய கொள்கைகளும், தோற்றத்திலும், ஈர்ப்பிலும் இந்தியப் பொதுப் பண்பைப்பெற்றுள்ளன. அதேபோல் வேதாந்தம் அல்லது வேத மௌலி எனும் 'மறைமுடி' தத்துவம் தன்னுடைய வேறுபட்ட சில கோட் பாடுகளுடன், பல்வேறு இனங்களையும், மொழி களையும் கொண்ட இந்தியாவில் இந்து உலகம் அல்லது இந்தியத் தன்மையால் அரசியல், பண்பாட்டு ஒருமைப் பாட்டிற்கு அடிப்படை அம்சமாக அமைகிறது. கடந்த 2500 ஆண்டு களாக உள்ள கூட்டு ஒத்துழைப்பு, ஒன்றிணைவு இவற்றின் வாயிலாக இந்தியாவின் ஆரிய, திராவிடக் கலப்புப் பண்பாட்டில், அன்பு, கருணை ஆகியவற்றின் கடவுளாக விளங்கும் விஷ்ணுவும், அறிவு, ஞானம் ஆகியவற்றின் கடவுளாக விளங்கும் சிவனும் என்ற இரு பெருந் தெய்வீகக் கூறுகளும் ஹரிஹரனாக, மால்—சிவனாகப் பிரிக்கவியலாது இரண்டறக் கலந்து பாரத்பரா அல்லது பரமசிவம் அல்லது பெரும் பரனாக, யாவற்றினும் சிறப்பான மேலானதொரு தனியொருமையாகக் காட்சியளிப்பதைப் போன்ற ஒன்றினை நாம் காணுகிறோம்.

இங்கே நாம் கி. பி. 7ம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழகத்து சைவ சமயக குரவராகிய திருநாவுக்கரசர் கூறிய ஒரு கூற்றினை நினைவிற் கொள்ளவேண்டும்:

ஆரியன் கண்டாய்
தமிழன் கண்டாய்

எனவே, இத்தகைய ஆரிய, திராவிட ஒன்றிணை வின் வழியாக, நம்முடைய பண்பாடு, இனங் களின் தோற்றங்களைப் பற்றிய உண்மையான உணர்வுடன் ஒன்றுபட்டு வாழவேண்டும்.

சமஸ்கிருதமும் வாழ்க. தமிழும் வாழ்க.

தமிழாக்கம்: சு. நடராஜன் எம். ஏ,

# வரலாறும் வக்கிரங்களும்

டாக்டர் ரொமீலா தப்பார்.

வரலாற்று ஆசிரியன் பழங்காலத்தைப் பற்றி அக்கறை கொண்டுள்ளவனாயினும், அவன் ஆராய்கிற சமூகத்தின் வருங்காலத்தில் ஒரு முக்கியப் பாத்திரமுடையவனாக இருக்கிறான் என்பது ஒரு விநோதமான முரண்பாடாக இருக்கிறது. வரலாற்று முற்காட்சியோடு ஒரு சமுதாயத்தின் தோற்றத்தையும் படி முறை வளர்ச்சியையும் அறிய முயலுவது வரலாற்று ஆசிரியனது ஆர்வம். சமுதாயம் என்ற சொல் மக்களது வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் உள்ளடக்கியதாகும். தனது ஆராய்ச்சியின் விளைவாக வரலாற்று ஆசிரியன் ஒரு சமுதாயத்தின் கருத்துப்படிமத்தை உருவாக்கினான். பழங்காலச்சான்றுகளைக் கையாளும் பொழுது தற்காலநிலைகளால் அவன் பாதிக்கப் படுகிறான். வரலாற்றின் பொருளைக் காண்பதில் இருவித மனச்செயல் முறைகள் இருக்கின்றன. தற்காலத் தேவைகளை கடந்த காலத்தில் காண முயலுவதும், பழங்காலத்தின் படிமத்தை தற்காலத்தின் மீது பதிக்க முயலுவதும் அவ்விரு செயல் முறைகளாகும். பழங்காலத்தின்படிமம் வரலாற்றாசிரியன் வருங்காலத்திற்கு அளிக்கும் நன்கொடையாகும். இப்படிமத்தைத் தற்காலத்தார் அரசியல் புனைகதைகளை உருவாக்க பயன்படுத்துகிறார்கள். இத்தகைய அரசியல் மேல்கோப்புகளுக்கு வரலாற்று ஆசிரியர்கள், சமூக ஆய்வாளர்களது கொள்கைகளிலிருந்து அறிவியல்ஆதாரங்கள்பெறப்படுகின்றன. அண்மைக் கால நிகழ்ச்சிகளிலிருந்து இப்போக்கிற்கு இரண்டு உதாரணங்களைக் காட்டலாம். 'ஆரிய இனத்தின் (race) உயர்வு' என்ற கொள்கை இட்லருக்கும், பாஸிஸ்டுகளுக்கும் உதவியாக இருந்தது. இந்துக்களும், முஸ்லிம்களும் இரு வேறு (nation) நாட்டினர்' என்ற கொள்கை பாகிஸ்தானை உருவாக்க ஆதாரமாக இருந்தது. ஆனால் இக்கொள்கை 'பங்களாதேஷ்' நிகழ்ச்சிகளால் உடைத்தெறியப் பட்டது. ஆயினும் ஒரு பரம்பரைக்காலம் முழுவதும் திரிபுபட்ட படிமங்களால் உணர்வூட்டப்பட்டது. இத்தகைய ஆதாரங்கள் தற்காலத்தை பழைமையின் மீது பதித்த செயல்களாகும்.

ஆனால் சில ஆண்டுகளாக வரலாற்றின் ஆய்வு முறைகள் மாறி வந்துள்ளன. துல்லியமானதும், பகுப்பு வழிப்பட்டதுமான ஆய்வுகள் வரலாற்றியலில் தோன்றி வருகின்றன. புதிய சான்றுகளும், புதிய விளக்கங்களும் பழமையை மெய்யியல்-பாங்கோடு காணவும்,புதிய மதிப்பீடு செய்யவும் உதவுகின்றன. இவை வரலாற்று ஆராய்ச்சியைப் புதிய திசையில் திருப்பியுள்ளன. வரலாற்று ஆசிரியனும் சான்றுகளின் தன்மை பற்றியும், கடந்த காலத்தில் வரலாற்று நூல்கள் அரசியல், சமுதாயத் துறைகள் உண்டாக்கும் விளைவுகள் பற்றியும் சுயஉணர்வு கொள்ளத் தொடங்கிவிட்டான்.தனது படிப்பியல் நாணயத்தை இழந்துவிடாமல் எக்காலத்திலும் இல்லாதபடிக்கு இன்று வரலாற்றாசிரியன் சமுதாயத்திற்கு தனது பங்கைச் செலுத்தும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது.

தற்கால வரலாற்று நூல்கள் கடந்த இரண்டு நூற்றாண்டுகளில்தான் தோன்றியுள்ளன. இக்காலத்தின் தேவைகள் சில கருத்தோட்டங்களையும் கொள்கைகளையும் ஆதரித்தன. இவை இப்பொழுது பொருத்தமற்றவையாகிவிட்டன. அடிமைக் காலத்தில் அவசியமாயிருந்த பட்டி மன்ற விவாதமுறை வரலாறு எழுதுவதற்குப் பொருத்தமற்றதாக ஆகிவிட்டது. நமது பண்பாட்டையும், வரலாற்றையும் விமர்சன ரீதியாக ஆராய்வதற்குரிய சுய நம்பிக்கை நமக்கு ஏற்படவேண்டும்.

தற்காலத்தை அறிந்து கொள்வதற்கு இந்திய வரலாற்றின் அடிமைக்கால வரலாறு ஒரு முன்னுரையாகும் என்பதை அனைவரும் ஒப்புக்கொள்ளுவர். ஏனெனில் அக்கால நிகழ்ச்சிகள் தற்காலத்தோடு நேரடியான தொடர்புடையவை. ஆனால் மிகப் பழங்காலம்

கூடத் தற்காலத்தோடு நேரடியான தொடர் புடையது என்பதை இப்பேச்சுக்களில் நான் உணர்த்த விரும்புகிறேன். பொதுவாகப் பழமையை வரைந்து காட்டும் கருத்துக்கோலங் களை முதலில் விவாதிப்போம். இக்கோலங்கள் பல, உவப்பு வெறுப்புகளின் விளைவாக வக்கிர மானவை. பழைமை பற்றிய கோலங்களை நமது மனத்தில் மாற்றிக்கொள்வதற்குத் தேவையான புதிய சான்றுகளையும், விளக்கங்களையும் அடுத் தாற்போலச் சுட்டிக்காட்டுவேன்.

'இந்தியர்கள் வரலாற்று உணர்வில்லாத வர்கள் அவர்கள் தங்களது வரலாற்று ஆவணங் களைப் பாதுகாத்து வைக்கவில்லை' என்பது ஒரு பொதுஜன நம்பிக்கை, இந்தியர்கள் தங்களது ஆவணங்களைப் பாதுகாத்துத்தான் வைத்திருக் கிறார்கள். எவை முக்கியமானவை என பண்டைய இந்தியர்கள் கருதினார்களோ அவற்றையெல் லாம் காப்பாற்றி வைத்துள்ளார்கள். கொடி வழிப்பட்டியல்கள், கோயிலொழுகுகள், விகாரை வரலாறுகள் போன்ற சமய நிறுவனங்களின் சரித்திரங்கள் இவையெல்லாம் இன்று கிடைக் கின்றன. இவை வரலாற்று மரபின் மூலப் பகுதிகள்தாம். ஆனால் அவை சமகால நிகழ்ச்சி களின் வருணனைகளாக இல்லாததால் வரலாற் றுச்சான்றுகள் என்ற தன்மையில் உயர்ந்த மதிப்புடையனவல்ல. ஆனால் கி. பி. 500க்குப் பிறகு சமகால வருணனைகள் தோன்றின. ஆஸ்தான வரலாறுகளும், வரலாற்றுத் தன்மை யுடைய வாழ்க்கை வரலாறுகளும் துருக்கிய, முகலாய அரசர்கள் ஆதரவினால் எழுதப்பட்டன. இவை அனுபவ வருணனைகள் என்பதால் வரலாற்று மதிப்பு பெரிதும் உடையவை. இம் மரபு தற்காலம் வரை நீடித்தது. ஐரோப்பியர்கள் இந்தியாவிற்கு வந்தபொழுது இந்திய வரலாற் றைத் தேடினார்கள். கி. பி. 1000க்குப் பின்னுள்ள கால நிகழ்ச்சுகளைப்பற்றி அவர்களுக்கு அதிக மான சான்றுகள் கிடைத்தன. ஆனால் அதற்கு முற்பட்டகாலம் பற்றிய சாசனங்கள் பிராமி மொழியில் இருந்ததாலும் இந்தியர்கள் அந்த வரிவடிவத்தை மறந்து போய் விட்டதாலும் ஆங்கிலேயரின் ஆதரவில் தான் இந்தியாவின் பழங்காலம் பற்றிய ஆய்வு கள் நிகழ்ந்தன. இந்தியாவின் பழங்காலத்தைக் கடந்த இருநூறு ஆண்டுகளில் தோன்றிய விளக்கங்களைக் கொண்டுதான் நாம் அறியமுடி கிறது. இதுதான் இந்தியாவின் பழமை பற்றிய ஆராய்ச்சியின் மிகப்பெரிய இடர்ப்பாடு.

பழைய வரலாற்றாசிரியர்கள் வரலாறு எழுதியதற்கும், இன்று வரலாறு எழுதப்படுவ தற்கும் வேறுபாடு உள்ளது. சான்றுகளைக் கையாளுவதில் இரண்டு அம்சங்கள் தற்கால வரலாற்றாசிரியனைப் பாதிக்கின்றன. ஒன்று தற்கால விஞ்ஞானப் புரட்சி. இதன் ஆய்வு முறைகளால், ஒழுங்கு முறைப்படுத்தப்பட்ட ஆய்வுகளால் பழங்காலத்தை வெளிப்படுத்த வேண்டும், சான்றுகளை சோதித்தறிய வேண்டும் என்ற முயற்சி தோன்றியுள்ளது. மற்றொன்று தேசீய எழுச்சியின் விளைவால் உருவான 'தேசீயக் கொள்கை' (national ideo-logy). பொதுப் பண்பாடு, பொதுக் கொள்கை பொது வரலாறு என்ற அழுத்தங்களைக் கொண்டது, தேசீயக் கொள்கை. தேசீயக் கொள்கையை நிரூபிக்கும் வழியில் உலக முழுவ திலும் வரலாற்று ஆராய்ச்சி வழிப்படுத்தப் படுகிறது.

ஐரோப்பாவில் 18-ம் நூற்றாண்டில் தோன்றிய தேசீயம், ஐரோப்பியப் பழங்கால வரலாற்றைப் புதிய பார்வையில் காண்கிறது. ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் குடியேறிய ஐரோப்பியர்கள், இந்நாட்டு வரலாறுகளை இப் பார்வையோடு ஆராயவில்லை. வாணிப உறவு கள் கலோனியல் உறவுகளாக மாறியவுடன், அவர்கள் வரலாற்றை அறிவார்வத்தால் கற்றுக் கொள்வதைப் பார்க்கிலும், ஆட்சி நிர்வாகத்தை நடத்த உதவுவதற்காகவே கற்றுக்கொண்டார் கள். ஓர் அடிமை நாட்டினரின் மரபுகள், மதிப்புக்கள், நடத்தை வகைகள் (behaviour patterns)—ஆகியவற்றைப்பற்றி அறிய அவர் களது வரலாற்றை ஆராய்தல் வேண்டும்.

இந்தியப் பழைமையைத் தேடிப்பார்த்த பொழுது பழைமை பற்றிய பல விளக்கங்கள் தோன்றின. அவை முதன் முதலில் தோன்றிய வையாதலால் திரும்பத் திரும்பக் கூறப்பட்டு அச்சு வார்ப்புகள் போலாகிவிட்டன. இன்று இவை கேள்விக்குரியனவாயினும், அவை பரவ லாக நம்பிக்கை உருவத்தில் ஆய்வாளர்கள் மனத்தைப் பாதிக்கின்றன. இவற்றுள் சில

வார்ப்புகள், ஏகாதிபத்தியத்தின் தேவைகளோடு தொடர்புடையன. பொருளாதார ஏகாதிபத்தியம், பண்பாட்டு ஆதிக்கத்தை நிறுவிக்கொள்ளும். அவ்வாறின்றி அது நிலைக்க முடியாது. இந்நோக்கில் வரலாறு எழுதுபவர்கள் இந்தியாவின் பழங்காலத்தை ஏகாதிபத்திய நலன்களுக்கு உகந்த முறையில் சித்திரித்தார்கள். ஏகாதிபத்திய ஆட்சியை எதிர்த்தவர்கள் இந்திய தேசிய உணர்வு, சிந்தனைகள் என்ற நோக்கிலிருந்து, அவர்களுடைய கொள்கைக்குப் பழமையில் ஆதாரம் தேடிக் கண்டுபிடித்தார்கள். இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் இந்திய தேசியக் கொள்கை அரசியலில் மட்டுமின்றி, எல்லா அறிவுத் துறைகளிலும் இந்திய தேசியத்தின் பாதிப்பு காணப்பட்டது. வரலாற்றாசிரியர்கள், இந்திய தேசிய நோக்கினால் முழுமையான பாதிப்பைப் பெற்றார்கள். இந்தியப் பழமையை கருத்துருவமாக்கும் முயற்சியில் இந்திய தேசியம் பங்கு பெற்றது. அவ்வாறு தான் உருவாக்க உதவிய கருத்துருவத்தால் தானும் மாற்றமடைந்தது. தேசிய உணர்வினால் பாதிக்கப்பட்ட வரலாற்றாசிரியர்கள், இந்த மாற்றங்களைத் தம் வயப்படுத்தினர். ஏகாதிபத்தியத்தின் பண்பாட்டு ஆதிக்கத்தை, ஏகாதிபத்தியத்தை எதிர்க்கும் தேசியவாதிகள், தாங்களே 'பண்பாட்டு தேசியம்' என்றதோர் கொள்கையையும் உருவாக்கி, பண்பாட்டு விடுதலைக்கும் போராட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இக்கொள்கைத் திட்டங்களின் மூலம் உள்நாட்டுப் பண்பாட்டின் மறுமலர்ச்சிக்காகப் பணிபுரிய அவர்கள் முயன்றார்கள். அடிமைத்தனம் (Colonialism) தொழிலபிவிருத்தி, பொருளாதாரப்பின்னிடைவு ஆகிய தன்மைகளை எதிர்த்து நிற்க வேண்டிய தேவை இந்தியர்களுக்கு ஏற்பட்டதால் இவற்றின் எதிர்ப்பே அவர்களது அறிவியலின் உள்ளடக்கமாயிற்று. சான்றுகள் குறைவாகக் கிடைத்ததால் அவர்கள் இவ்வெதிர்ப்பை அச்சுவார்ப்புகளாகப் படைத்தனர். புதிய சான்றுகள் இப்பொழுது கிடைத்திருப்பதால், இந்த அச்சுவார்ப்புகள் கேள்விக்குரியனவாகிவிட்டன. இவ்வச்சுவார்ப்புகளில் சில நீடித்து நிலைத்துவிட்டதால் வரலாற்று விளக்கப் போக்குகளையும், அரசியல் கொள்கைகளையும் அவை பாதித்துள்ளன.

இவ்வார்ப்புகளில் இன்னும் நீடித்திருக்கும் கருத்து ஒன்றை குறிப்பிடுவோம். "இந்திய சமுதாயம் மாறுதல் அடையாதது. அதன் அடிப்படை ஜாதி அமைப்பு இறுக்கமானது. மாறுதலை அனுமதிக்காதது." அல்லது "இணக்கமும், முரண்பாடின்மையும் இந்திய சமுதாயத்தின் அடிப்படைகள். இதுவோர் பொற்கால சமுதாயம்." இந்த நம்பிக்கைகள் இன்னும் நம்மிடையே உள்ளன. இவற்றுள் முதலாவது நம்பிக்கையின் மீதுதான் "கீழ்த்திசை எதேச்சாதிகாரம்" என்ற கொள்கை எழுப்பப்பட்டது. இக்கொள்கை ஐரோப்பாவில் பிரபலமாயிற்று. ஆசிய வரலாற்றை இக்கொள்கையின் நோக்கில் ஐரோப்பிய அறிவாளிகள் கண்டனர். 19வது நூற்றாண்டில் இக்கொள்கை புத்துயிர் பெற்றது. மற்றோர் கருத்துவார்ப்பு; "கீழ்த்திசைப் பண்பாடும் மேல் திசைப் பண்பாடும் பெரிதும் வேறுபட்டவை. கீழ்த்திசைப் பண்பாடு ஆன்மீகவயமானது. பொருள் வயமானது அன்று. மேல் திசைப் பண்பாடு பொருள் மதிப்புகளை ஆதாரமாகக் கொண்டது." விவேகானந்தர் இக் கருத்தை எழுதினார்.

"......மேலைநாட்டார் புலன்கள் வழியே அறியப்படும் உலகை உண்மையெனக்கருதுவது போலவே கீழ்த்திசை நாட்டார் ஆன்மீகஉலகை உண்மையெனக் கருதுகின்றனர். ஆன்மீகத்தில் கீழ்த்திசை நாட்டார்தாம் விரும்புவதனைத்தையும், நம்புவதனைத்தையும் காண்கிறான். வாழ்க்கையை உண்மையெனக் காண்கிற அனைத்தும் அவனுக்கு ஆன்மீகத்தில்தான் உள்ளது."

இந்திய வரலாற்றுக் கருத்துக்களைப் பெரிதும் பாதித்துள்ள வற்றுள் ஆன்மீகவய-பொருள் வயப்பாகுபாடு ஒன்று மட்டுமன்று. இதுபோன்ற முரண்பட்ட இரட்டைக் கருத்துக்கள் பல வரலாற்று நோக்கங்களைவிட, அரசியல் நோக்கங்களுக்கே உதவுகின்றன. இனவேறுபாடொன்று ஊகிக்கப்படும் ஒரு வேறுபாட்டில் இரட்டைக் கருத்துக்கள் உருவாகியுள்ளன. ஆரிய-திராவிடர் இந்து முஸ்லிம் என்பன போன்றவை அவை. இனம், நாடு, பண்பாடு முதலிய பண்புகளின் அடிப்படையில் வேற்றுமைகளை இயல்பானவை என்று கூறவும், பூசல்களை நியாயப்படுத்தவும் இவ்விரட்டைக் கருத்துக்கள் பயன்படுத்தப்பட்டன. பிரிட்டிஷ் முற்கால இந்தியாவில் இந்த வார்ப்புக்கள், வரலாற்றுச் சான்றுகளாகக் கிடைக்கவில்லை என்பது மிகத் தெளிவாக விளங்குகிறது.

ஆரிய இனம் என்பது இந்திய மரபிற்கு அந்நியமானது. 'ஆரியர்' என்ற சொல் சமுதாயத்தின் மேலோர் என்ற பொருளிலும்,மிலேச்சர் ஆரியரல்லாதார் என்ற பொருளிலும் பண்டைய இந்திய இலக்கியத்தில் வழங்கப்பட்டுள்ளது. இந்த வேறுபாட்டின் அம்சங்கள் மொழியும், வர்ணாசிரம தருமமும் ஆகும். அதாவது ஜாதி அமைப்பு முறையும், ஒருவனது வாழ்க்கையின் நான்கு கட்டங்களும் (ஆசிரமங்கள்) ஆகும். வேறுசில வேறுபாடுகளும் பழஞ்சுவடிகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை தோற்றமும், வழிபாட்டு முறையுமாகும். இதிலிருந்து ஆரியர்கள் ஒரு இனத்தாரல்லர், (ஒரே சமுதாயத்தின், ஒரே இனத்தின்) ஒரு பண்பாட்டுப் பிரிவுவகை, என்பது தெளிவாகிறது. பண்டைய நூல்களில் 'ஆரிய வர்த்தம்' என்ற சொல் ஆரியர் நாடு என்ற பொருளில் வழங்கப்படுகிறது. ஒவ்வொரு நூலிலும் இதன் பூகோளப்பரப்பு வேறுபட்டுக் கூறப்படுகிறது. பிற்கால வேதமூலங்கள் (Vedic texts) ஆர்யவர்த்தம் என்பது கங்கை யமுனை நதிகளின் இடைநிலம் என்று கூறுகிறது. இந்தப் பகுதிக்கு வெளியேயுள்ள நாடுகளை மிலேச்ச நாடு என்று அது அழைக்கிறது. மகதம், அங்கம் (பாட்னா, கயா, மாங்கிர், மகல்பூர் பகுதிகள்) ஆகிய நாடுகளில் சங்கீரண ஜாதியார்(கலப்புச் சாதி) வாழ்வதாகவும். அவர்களோடு ஆரியர்கள் உறவு கொள்ளக் கூடாதென்றும் அந்நூல் கூறுகிறது. ஆனால் ஜைன நூல்களில் மகதமும், அங்கமும் ஆரியவர்த்த நாடு என்று கூறப்பட்டுள்ளது. பௌத்த நூல்கள் கங்கை, யமுனை நதிகளுக்கு இடைப்பட்ட நிலத்தை ஆரியவர்த்தமென்று கூறாமல், அதற்குக் கிழக்கேயுள்ள ராஜமகால் பகுதியை அப்பெயரிட்டு அழைக்கிறது. பிற்காலத்தில் மனு விந்தியமலைத் தொடருக்கு வடக்கிலுள்ள நிலப்பகுதி முழுவதையும் ஆரியவர்த்தம் என்றழைக்கிறார். இனம் (race) என்ற பண்பைக் கொண்டு இத்தேசம் வரையறுக்கப்பட வில்லை. ஏனெனில் இனம் என்ற வரையறுப்பையே தற்கால ஐரோப்பிய மானிடவியலாரும், இனவியலாரும் (ethnologists) தான் உருவாக்கினர்.

18ம் நூற்றாண்டிற்கு முன்னர் இந்தியர்கள் மற்ற நாட்டினரைவிடத் தாங்கள் ஆன்மீக மேம்பாடு உடையவர்கள் என்று பறைசாற்றிக் கொண்டிருக்கவில்லை. இந்திய வாழ்க்கைமுறை ஆன்மீகத்தைப் பற்றி மட்டுமே அக்கறை கொண்டதாக இருக்கவில்லை. மனிதனது வாழ்க்கை இலட்சியங்களாகப் பண்டை நூலாசிரியர்கள் கருதியவை, 'தர்மம், அர்த்தம்,காமம், மோட்சம்' என்பனவாகும். இவற்றுள் எவையும் முனைப்பின்றிச் சமநிலையில் இருத்தல் வேண்டுமென ஒழுக்க நூல்கள் போதிக்கின்றன. ஆன்மீகத்தை மிகைப்படுத்தியோ, பொருளை மிகைப்படுத்தியோ, நீதிநூலார் எழுதவில்லை.

'இந்திய சமுதாயம் மாறாநிலைபேறுடையது' என்ற கருத்துக்கு மாறான வரலாற்றுண்மைகளைப் பண்டைய நூல்களில் காணலாம். சமுதாய மாறுதல்கள் பல அவற்றில் குறிப்பிடப்பட்டுள்ளன. சில மாறுதல்களை அவர்கள் விரும்பி வரவேற்றார்கள். சிலவற்றைக் கண்டித்தார்கள். இந்து, பௌத்த, இஸ்லாமிய பிரபஞ்சவியல்கள் (cosmology) 'சமுதாயம் மாறிக்கொண்டேயிருக்கிறது' என்று அறிவுறுத்துகின்றன. முழு நிறைவான நிலையிலிருந்து சமுதாயம் தாழ்வடைந்து வருவதாக இம்மூன்று தத்துவச் சார்புடையோரும் கருதினர். ஆயினும் 'இறுதியில் மனித சமுதாயம் முழு நிறைவை நோக்கிச் சென்றுவிடும்' என்றும் அவர்கள் கருதினர். அது சத்திய யுகமாகவோ,இறுதித்தீர்ப்பு நாளாகவோ இருக்கலாம். அப்படியானால் 'மாறாத தன்மை' என்ற வார்ப்பு எப்படித்தோன்றியது? தற்காலத்தில் அவை எப்படி அறிவாளிகளைக் கவர்ந்தன? இதற்கு விடைகாண கடந்த இருநூறு ஆண்டுக் காலத்தின் அரசியல் பண்பாட்டுப் பின்னணியை நாம் ஆராய்தல் வேண்டும்.

வேறு ஆசிய நாடுகளின் கலோனியல் கால கட்டத்தில், பழமையைப் பற்றிய மதிப்பீட்டு முயற்சிகளில் இத்தகைய வார்ப்புகளைக் காணலாம். கடந்த சில பத்தாண்டுகளில் உயர்ந்த இனம், ஆன்மீக மேம்பாடு, மாறாதபொற்காலம் போன்ற கருத்துருவங்களை ஆரியப் பண்பாடுகளின் ஆராய்ச்சியில் நாம் காண்கிறோம்.

இக்கருத்துருவங்களைக் கொண்டுள்ளோர் இரு பிரிவினராவர். அவர்கள் அறிவாளிகளும், அதிகார வர்க்கத்தினரும் ஆவர். அறிவுத் துறை முயற்சிகளால் பல புதிய சான்றுகள் கண்டுபிடிக்கப்பட்டன. இம்முயற்சியில் கடின

மான உழைப்பும், எல்லையற்ற ஆர்வமும் காணப்பட்டது. வரலாற்று அனுமானங்களை யும், விளக்கங்களையும் உருவாக்குகிற போது வார்ப்புகள் குறுகிட்டன. வார்ப்புகளை ஏற்றுக் கொள்ளுவதில் ஆய்வாளருக்கும் மற்றோர் ஆய் வாளருக்கும் அளவில் வேறுபாடு இருந்தது.

அறிவாளிகளில் இக்கருத்துக்களை வலுவாக வெளியிட்டவர் மாக்ஸ்முல்லர் ஆவார். அவர் இந்தியப் பண்பாட்டில் நேசம் கொண்டிருந்த ஐரோப்பிய அறிவாளிகளில் ஒருவராவார். எதேச்சாதிகாரம், பின்னிடைவு ஆகிய இரண்டு தன்மைகளையும் பண்டைய இந்தியப் பண்பாட் டில் மிகையாகக்கண்ட அறிவாளிகளின் கூற்று களை இவர் மறுத்தார். கிரேக்க மொழிக்கும் சமஸ்கிருத பாஷைக்கும் உள்ள மொழியியல் இணக்கத்தைக்கண்டு ஓர் புதிய ஆர்வம் ஐரோப்பிய அறிவாளிகளிடையே உண்டா யிற்று. இதனால் ஒப்பீட்டு மொழியியலை அவர் கள் கற்றார்கள். அதன் விளைவாக இந்திய — ஐரோப்பியப் பண்பாடுகளினைத் தோற்றுவித்த வர்கள் ஆரியர்கள் எனக் கருதுகிற சிந்தனைப்படி மங்கள் உருவாயின. சமஸ்கிருதத்தை ஐரோப்பிய அறிவாளிகள் கற்றுக் கொண்டதன் மூலம், தாங்கள் பண்டைய ஐரோப்பியப் பண்பாட்டின் இழந்துபோனதோர் சிறகைக் கண்டுவிட்டதாக நினைத்தார்கள். சமஸ்கிருதம் பேசியவர்களைப் பற்றி மாக்ஸ்முல்லர் நினைத்ததாவது;

"......இந்திய ஆரியர்கள் நமது அறிவுலக உறவினர்கள். அதிசயமான பாஷையாகிய சமஸ்கிருதத்தை உருவாக்கியவர்கள். அடிப் படைத் தத்துவ சிந்தனைகளைப் படைத்தவர்கள். இயற்கையான இயற்கைச் சமயத்தைத்தோற்று வித்தவர்கள். பளிங்குபோலத் தூய்மையான புராணங்களை எழுதியவர்கள். மிகவும் நுண்மை யான தத்துவத்தை சிந்தனையால் நிர்மாணித்த வர்கள். விரிவான ஒழுக்க விதிகளைக்கூறும் தர்ம சாஸ்திரங்களை எழுதியவர்கள்."

ஆரியரது மேன்மையை இந்திய மதிப்புக் கள் அனைத்திற்கும் அவர்கள் விஸ்தரித்து அவர் களைப் பற்றிப் பின்வருமாறு எழுதினர். "...... அவர்கள் செயலூக்கம், போர் ஆர்வம், பொருளாசை முதலிய இயல்புடையவர்களல்லர். ஆனால் சாந்தம் தியானம், சிந்தனை முதலிய தெய்வீகப்பண்புகளுடையவர்கள்."

இந்த இலட்சியத் தன்மைச் சித்திரத்தை பிளவாட்ஸ்கியும் அன்னிபெஸன்டும், பிரம்ம ஞான சங்கத்தாரும் முழுமையாக்கினர். இதன் மிகைப்படுத்தப்பட்ட வளர்ச்சியைத் தற்கால ஹரேகிருஷ்ண இயக்கத்தில் காணலாம். இத் தகைய பூர்ணத்துவமான சமுதாயம் என்ற கற்பனைக்குக் காரணம் மாக்ஸ்முல்லர் 19-ம் நூற்றாண்டின் இந்திய கிராமத்தைக் குறைபாடு களில்லாததாகக் கருதியதுதான். இக்கிராம வாழ்க்கையையே அவர் இந்திய சமுதாயத்தின் சாந்திமயமான அணுவாகக் கண்டார். இந்தியா விற்கு மாக்ஸ்முல்லர் ஒரு முறைவந்து கிராமங் களில் சிலவற்றைப் பார்த்திருப்பாராயின் இத் தகைய அதீதக் கற்பனைக் கோட்டைகளைக் கட்டி யிருக்கமாட்டார்.

ஒப்பியல் மொழி ஆராய்ச்சியாளர்கள் தங்கள் ஆய்வுகளால் ஐரோப்பிய, இந்திய மொழிகள் பல ஒரே தாய்மொழியினின்றும் தோன்றியது என்ற அனுமானம் செய்தனர். இந்தத் தாய்மொழியினின்றே சமஸ்கிருதம், கிரேக்கம், லத்தின், கெல்டிக், டியூட்டானிக், இரானியன், தொச்சாரின் முதலிய மொழிகள் தோன்றினவென்றும் இவற்றிடையே உள்ள ஒற்றுமையால் இவற்றைப் பேசுகிறவர் ஒரே இனத்தவர் என்றும், அவர்கள் ஆரியரென்றும் ஐரோப்பிய மொழியியலாளர் கருதினர். இக் கருத்தைப் பிரச்சாரமாக்கிவிட்டனர். இந்தியா வில் வேத இலக்கியம் ஆரியர்களது சிந்தனை, உணர்ச்சிகளின் வெளியீடு என்றும் அவர்கள் பழங்குடி மக்களை வென்று அடிமைப்படுத்தி, இத்துணைக்கண்டம் முழுவதும் பரவினர் என்று அவர்கள் நம்பினர். ஆரியர்கள் இனத்தூய்மை ஜாதி அமைப்பால் பாதுகாக்கப்பட்டதென்றும், ஆரியருக்கும் ஆரியரல்லாதாருக்குமிடையே இருந்த வேற்றுமைகள் நிலைத்திருந்தன என்றும் அவர்கள் வாதித்தனர். ஆரிய பரம்பரைத் தொடர்ச்சியைக் காப்பாற்றி வருகிறவர்கள் பிராமணர்கள் என்பது அவர்கள் கருத்து. ஆரிய ரல்லாதவர்கள் யார் யார் என்பதற்கும் பட்டியல் கள் தயாரிக்கப்பட்டது. ஐரோப்பாவில் அவர்கள்

யூதர்களும், ஸெமிடிக் மக்களும் ஆவார்கள். இந்தியாவில் அவர்கள் திராவிடர்கள், இனக்குழுப் பழங்குடி மக்கள் கீழ்சாதியார்கள் ஆகியோராவர். இவ்வாறு ஆரிய—திராவிட இரட்டைப்பிரிவுக் கருத்து உருவாக்கப்பட்டது. மொழியியலார் செய்த பெருந்தவறு மொழியையும் இனத்தையும் சமமாக்கிவிட்டது தான். இத்தவறை மாக்ஸ்முல்லர் பிற்காலத்தில் உணர்ந்தார். ஆனால் அதை அவர் வெளியிட்டுப் பிழையைத் திருத்துமுன்னர் 'ஆரிய இனம்' என்ற கருத்து அறிவாளிகளிடையே பரவி நிலைத்து விட்டது. ஐரோப்பிய 'தேசியம்' மொழியினடிப்படையில் வளர்ச்சி பெற்றதால் மொழியையே இனத்திற்கும் ஒரு மூலப்பகுதியாக்கி விட்டனர். இனத்திற்கும் மொழிக்கும் இடையேயுள்ள வேறுபாடு மாக்ஸ்முல்லர் காலத்தில் தெளிவாக வரையறுக்கப்படவில்லை. இணக்கமான மொழிகளின் அடிப்படையில் இனங்களைப் பிரிப்பதை நாம் ஏற்றுக்கொண்டால் கி. பி. 4000ல் வரலாறு எழுதப்போகிறவன் இப்படி எழுதுவான்; "இருபதாம் நூற்றுண்டின் மத்தியில் உலகில் ஆங்கிலம் பேசுகிற இடங்களில் எல்லாம் ஒரே இனத்தார் தான் குடியேறி இருந்தனர்."

இந்தியப் பழமையை இலட்சிய உருவமாக சித்தரிப்பதற்கு வேறோர் காரணமும் உண்டு. ஐரோப்பாவுக்கு வெளியே ஓர் 'பொன்னுலகை' (கற்பனையான இன்ப உலகு) காணும் முயற்சிக்கு பண்டைய இந்தியாவைப்பற்றிய மொழியியலாளர், தத்துவ அறிஞர்களது கற்பனைச் சித்திரம் ஏற்றதாயிருந்தது. 19ம் நூற்றுண்டின் நடுவே ஐரோப்பாவில் திகைப்பூட்டும் சமுதாய பொருளாதார மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன. தொழில் வளர்ச்சியின் செயல்பாட்டின் ஒப்புக்கொள்ளப்பட்ட மதிப்புகளைப் பற்றி ஐயங்கள் எழுந்தன. 'அந்நியமாதல்' என்ற நிலை மக்கள் உள்ளத்தில் தோன்றியது. பொருள்தேடுவது, போர் செய்வது என்றசெயல்களுக்கும், அதனடிப்படையான மதிப்புகளுக்கும் எதிர்ப்புத் தோன்றியது. இந்தியாவின் பண்டையப்பண்பாட்டை மிகவும் தாழ்ந்ததாகக் கருதியவர்கள் கிறிஸ்தவப் பாதிரிமாரும், ஆங்கில அதிகாரிகளும் ஆவர். கிறிஸ்தவமதத்தை இந்தியர்கள் தழுவினுல் அல்லாமல் அவர்களுக்கு உய்யும் வழி இல்லை என்பது கிறிஸ்தவப் பாதிரிமார்களின் கருத்து. இந்தியப்பண்பாட்டின் சில அம்சங்களை அவர்கள் புகழ்ந்தனர். எனினும் மொத்தத்தில் இந்தியப் பண்பாட்டில் தீய அம்சங்களே அதிகமென அவர்கள் எண்ணினர். 19-ம் நூற்றுண்டின் பயனியல் கொள்கையுடையவர்கள் பகுத்தறிவு வாதிகளாகத் தங்களை எண்ணிக்கொண்டார்கள். பகுத்தறிவுக்கு முரண்பட்ட தத்துவங்கள், இந்தியப் பண்பாட்டின் அம்சங்களாயிருப்பதால் தான் இந்தியா பின்னடைந்துள்ளதாக அவர்கள் கூறினர். தவிரவும் சட்டங்கள் இன்மை,தேக்கமுற்ற சமுதாயம், ஏதேச்சாதிகார அரசு, இவை யாவும் இந்தியாவின் தாழ்வு நிலைக்குக்காரணங்கள் என்று அவர்களுடைய பகுத்தறிவு வாதம் அவர்களுக்குப் போதித்தது. ஜேம்ஸ்மில் இக்கொள்கையின் மூலம் இந்தியப் பண்பாட்டைத் தாக்கினுர். அவர் சட்டங்களியற்றுவதன் மூலம் இந்தியாவைச் சீர்திருத்திவிடலாம் என்று கூறினுர். இக்கொள்கை பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு ஏற்றதாக இருந்தது.ஏனெனில் பிரிட்டிஷ் அதிகாரத்தைப் பாதுகாக்கும் வகையில் அவர்கள் சட்டமியற்றிக் கொள்ளலாம். "இந்து வரிவிதிப்பு முறை சுதந்திர வாணிபத்திற்கும், மூலதனத்தின் சுதந்திர இயக்கத்திற்கும் தடையாக இருக்கிறது" என்று மில் எழுதினுர். இந்தியாவில் பிரிட்டிஷாரின் பொருளாதாரக்கொள்கையை வகுத்தவர்களுக்கு இந்த வரையறுப்பு முறையும் சரியானதென்று தோன்றியது. கீழ்த்திசை ஏதேச்சாதிகாரம் பற்றிய அவருடைய கருத்துக்களை ஏகாதிபத்தியவாதிகள் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டனர். இதனுல் தான், இந்தியாவுக்குச் செல்லும் அதிகாரிகளைப் பயிற்றுவிக்கும் ஹெய்லிபரி கல்லூரியில் அவருடைய "பிரிட்டிஷ் இந்தியாவின் வரலாறு" என்ற நூல் பாடப்புத்தகமாக வைக்கப் பட்டுள்ளது.

ஐரோப்பியர்கள் ஆசியாவிற்கு வரத் தொடங்கிய காலத்திலிருந்தே 'கீழ்த்திசை ஏதேச்சாதிகார அரசு' என்ற கொள்கை ஆசியா முழுவதற்கும் பொருந்தும் என்று கூறினுர்கள். பாரசீகத்திலிருந்த அர்க்கிமினிட் பேரரசை கிரேக்கர்கள் இப்படித்தான் வருணித்தார்கள். பாரசீகப் பேரரசு பற்றியும், அவர்களது பெருஞ்

செல்வம் குறித்தும் எழுதிய ஐரோப்பியர்கள் பாரசீக ஆட்சிமுறையையும் அவ்வாறே வருணித்தார்கள். ரோமர்கள், பைஸான்டியர்கள், மத்தியகால ஐரோப்பியர்கள் எல்லோருமே ஆசியாவை ஏதேச்சாதிகாரத்தோடும், ஆடம்பரத்தோடும்தொடர்புபடுத்தியே சிந்தித்தார்கள். ஐரோப்பாவில் 18-ம் நூற்றுண்டில் அரசியல் சிந்தனைகள்மாறின. நிலத்தை தனிச்சொத்தாகக் கருதுதல், தனிமனித உரிமைகள், ஜனநாயகம் முதலிய புதிய சிந்தனைகள் எழுந்தன. இதே சமயம் "இந்தியாவில் தனிச் சொத்துடைமை இல்லை" என்ற செய்தியை இந்தியாவில் தங்கிச் சென்றவர்கள் பரப்பினுர்கள். இச்சூழ்நிலையில் "கீழ்த்திசை எதேச்சாதிகாரம்"பற்றிய விவாதங்கள் மீண்டும் துவங்கின. ஆனுல் இக்கருத்து தெளிவாக விளக்கப்படவில்லை. அதன் வரையறையும் தெளிவற்றதாகவே இருந்தது. கார்ல்மார்ச்ஸ் இதனை ஓர் அரசியல் பொருளாதாரக் கொள்கையாக வரையறுத்துக்கூறினுர். "அரசனுக்கு முற்றிலும் அடங்கிய இயக்கமற்ற கிராம சமுதாயங்கள் கொண்டதுதான்இந்தியா" என்று அவர் எழுதினுர். இக்கிராம சமுதாயங்களுக்குச் சில அரசியல் அதிகாரங்கள் உண்டென்று கூறி அதன் தீய அம்சங்களைக் குறைத்துக்கூறினர். பழமையான இனக்குழு சமுதாயங்களைப்பற்றி கற்பனைவயமான சிந்தனைகளோடு இந்திய கிராமங்களைப்பற்றி ஐரோப்பியர்கள் சிந்தித்தனர். இந்திய கிராம சமுதாயம், பரிணும வளர்ச்சியின் ஆரம்ப கட்டத்திலிருந்ததாக அவர்கள் கருதினுர்கள். ஆனுல் மார்க்ஸ் 'அரசியல் அதிகார உரிமை அல்லது கிராம சுயாட்சி' கிராமங்களுக்கு இருந்ததென்னும் பிறர் கருத்திலிருந்து மாறுபட்டு பொருளாதார அதிகார (autarchy) உரிமைகள் கிராமங்களுக்கு இருந்ததாகக்கூறி அரசியலில் இருந்து பொருளாதாரத்திற்கு அழுத்தத்தை மாற்றினுர்.

மார்க்ஸ் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் நலன்களை எதிர்த்தார். ஆயினும் அவர்கூட பிரிட்டிஷாரின் வருகையால் யதேச்சாதிகாரம் அழிக்கப்படும் என்று நம்பினுர். "......இங்கிலாந்து இந்தியாவில் ஓர் சமூகப் புரட்சிக்குக் காரணமாயிருக்கிறது. ஆனுல் அதன் நோக்கம் இழிவானது. அப்புரட்சியை நிறைவேற்றும் முறையும் முட்டாள் தனமானது. ஆனுல் அது முக்கியமானதன்று. ஆசியாவின் சமூகநிலையில் ஓர் அடிப்படையான புரட்சி ஏற்படாமல் மனித இனம் தனது விடுதலை இலட்சியத்தை நோக்கி முன்னேற முடியுமா? இங்கிலாந்து எந்த குற்றங்களுக்கும் பொறுப்பாக இருந்த போதிலும் வரலாற்றின் தன்னுணர்வில்லாத கருவியாகச் செயல்பட்டு ஓர் புரட்சியை ஏற்படுத்தியுள்ளது."

கீழ்த்திசை எதேச்சாதிகாரம் என்ற கொள்கையை இந்திய தேசீய வரலாற்றுசிரியர்கள் எதிர்க்கவில்லை. இது மிகைப்படுத்தப்பட்ட கருத்து ஆகையால் இது எதிர்ப்புக்குத் தகுதியுடையதன்று என அவர்கள் கருதியிருக்கலாம். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை இந்திய வரலாற்றுசிரியர்கள் எதிர்த்தார்கள். நவீன பொருளாதார வளர்ச்சியின்மைக்கும், விவசாயிகளின் வறுமைக்கும் அதுவே காரணம் என்று கூறித் தாக்குதல் தொடுத்தார்கள். தாதாபாய் நெளரோஜீயும், ரொமேஷ்சந்திர தத்தும் பிரிட்டிஷ் ஆட்சியின் பொருளாதாரக் கொள்கைகளை வன்மையாகக் கண்டித்தனர். ஆனுல் பண்பாட்டு, வரலாற்றியல் துறைகளில் இந்தியாவின் பண்டைக்காலத்தைப் போற்றி எழுதிய ஐரோப்பியர்களுக்கு இந்திய வரலாற்றுசிரியர்கள் துதிபாடினுர்கள். பண்டைய இந்தியப் பண்பாட்டைப் புகழ்ந்தெழுதிய ஐரோப்பிய அறிஞர்களின் கருத்துக்களை, நமதுவரலாற்றுசிரியர்கள் பண்டைக்கால இந்தியாவின் சித்திரமாக தேசீயவாதிகள் உருவாக்கிய சிந்தனைக் கட்டுக்கோப்பில் இணைத்துக் கொண்டார்கள்.

தேசீயவாதிகளில் சிலரது கற்பனையை ஆரிய இனம் பற்றிய எண்ணங்கள் தூண்டிவிட்டன. ஜாதி இந்துக்கள் பண்டைய ஆரியர்களுடைய பரம்பரையினரென்று கருதப்பட்டனர். அவர்களுடைய பண்பாடு உயர்ந்ததென்று பிரசாரம் செய்யப்பட்டது. இதன் விளைவாக இனவழியாகவும் சமய வழியாகவும் இந்தியா ஒற்றுமை அடைய வேண்டுமென்பது ஓர் லட்சியமாயிற்று. ஒப்பியல் மொழி ஆராய்ச்சிகள் சமஸ்கிருதத்திற்கும் கிரேக்கத்திற்கும் இடையேயிருந்த நெருங்கிய ஒற்றுமைகளை வெளிப்படுத்தியது. இந்தோ ஆரியர்கள் நாகரித்தையே முதன் முதலில் துவக்கியவர்கள் என்று அனுமானம் செய்யப்பட்டது. இதனுல் இந்தியாவிலுள்ள அனைத்தும் மிகவும் பழமையானதென்று நிருபிக்கும் தேவை ஏற்பட்டது. அது

மட்டுமல்லால் உலகத்திற்கே இந்தியாவி லிருந்துதான் பண்பாடு பரவியது என்று நிறுவ முயற்சிகள் நடந்தன. பண்பாடு மறுமலர்ச்சி சமய உணர்வோடு இணைந்து வளர்ச்சி பெற்றது. இந்துப் பண்பாட்டை மறுமலர்ச்சி பெறச் செய்வதன் மூலமே இந்தியா புதிய வளர்ச்சி, பெறமுடியுமென்று சிலர் நம்பினர். பங்கிம்சந்த்ர சட்டர்ஜியின் 'ஆனந்த மடம்' என்னும் நாவலில் ஒரு கதா பாத்திரத்தின் வாயிலாக ஆசிரியர் கூறுவதா வது: "பிரிட்டிஷ் ஆட்சி இந்தியாவுக்கு வந்தது விதிவசத்தால்தான். இந்து மதத்தின் பரிசுத்த மான சக்தி மீண்டும் உயிர் பெறத்தான் இந்த ஆட்சி இப்பொழுது நடைபெறுகிறது." அரவிந்தர் 'தேசீயம்' என்ற கருத்தை பின்வருமாறு வரையறுத்துக் கூறுகிறார். "......அது ஓர் அரசியல் திட்டமல்ல. கடவுளி டமிருந்து நமக்குக் கிடைத்த ஓர் தெய்விக மதமாகும். நீங்கள் ஓர் தேசிய வாதியாக இருக்க விரும்பினால், இத்தத் தெய்வீக மதத்தில் நீங்கள் சேரவிரும்பினால், நீங்கள் சமய உணர் வோடு செயல்புரிதல் வேண்டும். இந்தியா பரவிப் பெரிதாகும் என்று சொன்னால் அதன் பொருள் சனாதன தர்மம் இங்கு வளர்ந்து, உலக முழுவதும் பரவும் என்பதே."

'ஆரியர்'-கொள்கை, அதனைப் பின்பற்றிய வர்களுக்கு அனுகூலமாயிருந்தது. மேல்சாதி இந்துக்கள் பிரிட்டிஷ் ஆட்சியாளர்களோடு நாமும் ஒன்று என்ற எண்ணம் கொள்ள வசதி செய்தது. கேசவ்சந்திரஸென்,"ஆங்கிலேயர்கள் வருகையால் நாம் நீண்ட காலம் பிரிந்திருந்த நமது உறவினர்களை மீண்டும் சந்தித்தோம். பண்டைய ஆரியக் குடும்பத்தின் இரு பிரிவுகள் நெடுநாட்களுக்குப் பின்சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது" சாதிபற்றிய சில போலி விஞ்ஞானக் கருத்துக்களும் இக்கொள்கையிலி ருந்துபிறந்தன.

ஏகாதிபத்தியம் தான் ஆளும் நாட்டில் பிரிவினை சக்திகளைத் தூண்டிவிடுவதைக் காண்கிறோம். இதன் முடிவான விளைவு, இரண்டு மூன்று பிரிவினர் தங்களது பண்பாட்டுத் தனித் தன்மையை அழுத்தமாகக் கூறிப் பிரிவினை கோரி அரசியல் அதிகாரத்திற்காகப் போட்டியிடுவதாக இருக்கும். ஆசியா, ஆப்பி ரிக்கா, ஐரோப்பா ஆகிய நாடுகளில் இவ்வாறு நிகழ்ச்சிகள் நடைபெற்றதை நாமறிவோம். **பழமையை உயிர்ப்பிக்கும் போக்குகள் பிரி வினையை வளர்க்கும்.** ஏனெனில் அதிகாரப் போட்டியில் இறங்கிய தனித்தனிக் குழுக்கள் வேறுபண்பாட்டு அம்சங்களில் தங்கள்கொள்கை களுக்கு ஆதாரம் தேடும். தேசீயப் பண்பாடு என்ற கருத்து பலமான விவாதத்திற்குள்ளாகும். இந்தியாவில் இந்துக்களும், முஸ்லீம்களும் இரண்டு முரண்பட்ட பண்பாடுடையவர்கள் என இந்த விவாதத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் கூறு வார்கள். மில், இந்தியாவின் வரலாற்றுக் காலங்களை வகைப்படுத்திய முறை, அதாவது இந்துக் காலம், முஸ்லீம் காலம், பிரிட்டிஷ் காலம் என்ற கால வரையறைகள், இந்து முஸ்லீம் பூசலை வளர்க்க உதவியது; அககால அரசியல் சமயப்பிரிவு அரசியலாக மாறிற்று. இந்துக்களாக இருந்த தேசீயவாதிகள் வேத இலக்கியத்தையும், ஆரிய இனக்கொள்கையை யும் பிடித்துக் கொண்டு தங்களது தோற்றத்தை விளக்கினார்கள். முஸ்லீம்கள் பூர்வீக இஸ்லாம் சமயத்தால் தங்கள் தோற்றத்தை விளக்கினார் கள். முகம்மது இக்பால் எழுதினார்

"முஸ்லீம்களின் வரலாற்றிலிருந்து நான் ஒன்று கற்றுக் கொண்டேன். அவர்களின் வரலாற்றின் நெருக்கடியான கட்டங்களில் இஸ்லாம்தான் அவர்களைக் காப்பாற்றியிருக் கிறது. அவர்கள் இஸ்லாமைக் காப்பாற்றிய தில்லை. இஸ்லாமைப் பற்றிய அக்காட்சியில் லயித்து அதிலிருந்து நீங்கள் உணர்ச்சி பெறு வீர்களானால், அதன் கருத்துக்கள் உங்களைப் புத்துயிர்பெறச் செய்யும். சிதறிய உங்களுடைய சக்திகளை அது ஒன்று சேர்க்கும். நீங்கள் இழந்த நாணயத்தைத் திரும்பப் பெறுவீர்கள். அதன் மூலம் அழிவிலிருந்து காப்பாற்றப் படுவீர்கள்."

சீர்திருத்தம் விரும்புவோர், பழமையை உயிர்ப்பிக்க முயன்றவர்களின் அறைகூவல்களை விரும்பவில்லை. பழைமை அதன் பங்கை ஆற்றி விட்டது; அதனை முழுவதுமாக உயிர்ப்பிக்க முடியாது என்று அவர்கள் கருதினர். "பழமை உயிர்ப்பு" முயற்சிகளைக் கண்டித்து எழுதியவர்

களூர் ரானடே சிறந்தவர். அவர் எழுதியவை இவ்வகைக் கருத்துக்களுக்கு ஓர் சிறந்த உதாரணமாகும்.

"எதற்கு நாம் புத்துயிர் அளிப்பது? ......... அக்காலத்து மக்களும் தேவர்களும் உண்ணவும் குடிக்கவும் தகாதது எனத் தடுக்கப் பட்டன வற்றையெல்லாம் மிதமிஞ்சி உண்ணவும் குடிக்கவும் செய்தார்கள். புத்துயிர் வாதிகள் அவ்வாறு செய்யவேண்டும் எனத் தற்கால மக்களைக் கேட்டுக் கொள்ளுவார்களா? பழங்காலத்து பன்னிரண்டுவகை ஆண்மக்களையும் (சந்தானம்) எட்டுவகைத் திருமணங்களையும் இப்பொழுது உயிர்ப்பிப்பார்களா? அத்திருமணங்களில் சிறையெடுத்து மணம் புரிவதும், மணம் ஆன வளைக் கடத்திக்கொண்டு செல்லுவதும் பழங்காலத்தில் அனுமதிக்கப் பட்டவையாக இருந்தனவே. சகோதரர்களின் விதவைகளைப் புணர்ந்து கர்ப்பதானம் அளிக்கும் 'நியோகம்' என்னும் பண்டைய வழக்கத்தை புத்துயிர் வாதிகள் அனுமதிப்பார்களா? ரிஷிகள் ரிஷிகளான விருந்தினர்களை வரவேற்கும் பொழுது தமது மனைவியரை விருந்தினரோடு சயனிக்க அனுமதித்த வழக்கத்தைமீண்டும் உயிர்ப்பிக்க முடியுமா? ஆண்டு முழுவதும் விலங்குகளையும், மனிதர்களையும் பலியிட்டுப்புதைக்க வரிசையான கல்லறைக் குகைகள் அமைத்ததுபோல இன்று செய்யமுடியுமா?"

இதைவிடக் கடுமையான கண்டனத்தை, தற்கால மேல்தட்டினரை பண்டைக்காலம் பற்றிய கொள்கைகளின் மீது ஜோதிராவ்ஃபூலே தொடுத்தார். தற்காலத்து நடுத்தர வர்க்கத்தினரான பிராமணரும், வேறு உயர் சாதியினரும் தங்களை 'மேலோர்' என்று கருதிக்கொள்ளுகிறார்கள். இவர்களே சமுதாயத்தின் மேன்மையுடையவர்களாகக் காட்டிக் கொள்ளுகிறார்கள், அவர்கள் பழமையை இலட்சிய பூர்வமான கற்பனைச் சித்திரமாகக் ண்டு அதனை வரலாற்றுப் படிமமாகக் காட்டுகிறார்கள். அதனால் அவர்களுக்கு நற்பயன் உண்டு. சமுதாயத்தின் கீழ்நிலைப்பிரிவுகளில் உள்ளவர்களின் கண்ணோட்டத்தினின்றும் இது முற்றிலும் மாறுபடுகிறது. அவர் சமுதாய அமைப்பை வருணிக்கும்பொழுது சூத்திரன், ஆதிசூத்திரன் என்ற சொற்களைப் பயன்படுத்துகிறார். சமுதாய வாழ்க்கைக்கு முக்கியமான பாத்திரம் சூத்திரனுடையது, பிராமணனுடையதன்று என்று இச்சொற்களின் மூலம் அவர் குறிப்பிடுகிறார். இப்பிரிவினரின் கொள்கைகளில் பிராமணர் எதிர்ப்பே, மேலோர் எதிர்ப்புக்குச் சமமாகிவிடுகிறது. தற்கால மேலோர் எதிர்ப்பிலும் பிராமணர் எதிர்ப்பு அடங்கியுள்ளது. "ஆரியர் உயர்வு"க் கொள்கையை இவர்கள் எதிர்த்துத்தானே ஆக வேண்டும்? (ஏனெனில் 'மேலோர்'தங்களைஆரிய பரம்பரை என்று அழைத்துக்கொள்கிறார்களல்லவா?) எனவே ஆரியரும் அவர்களது வழித்தோன்றல்களான பிராமணரும் அந்நியர்கள் எனவும், இந்நாட்டு மக்களை அடிமைப் படுத்தியவர்கள் எனவும் அவர்கள் வாதித்தனர். பழைய வார்ப்பு அழிக்கப்படவில்லை. தலைகீழாக்கப்பட்டது. அவ்வளவுதான் இக்காலத்தில் ஆன்மீக நம்பிக்கையும் வளர்ச்சியடைந்தது. பலவாண்டுகளாகத் தற்காலக் கல்வி பரவியிருந்த போதிலும் ஆன்மீக வாதம் வலுக்குன்றாமலேயிருந்தது.பத்தொன்பதாவதுநூற்றாண்டின் முடிவில் இந்திய ஆன்மீக வாதம் ஓர் புனிதப்போரின் அம்சங்களைப் பெற்றுவிட்டது விவேகானந்தர் எழுதுகிறார்:

"......இதுதான் நமது இலட்சியம். அதனை நோக்கி முன்னேறத் தயாராக வேண்டும். இந்தியா உலகை வெல்ல வேண்டும். இந்தியாவே, எழுக. உன்னுடைய ஆன்மீக சக்தியால் உலகை வெல்வாயாக, நாம் வெளியே சென்று நமது ஆன்மீக சக்தியாலும், தத்துவத்தாலும் உலகை வெல்ல வேண்டும்"

பொருளாயதக் கொள்கைகள் (materialism) மறுக்கப்பட்டன. இதுவே இயந்திர எதிர்ப்பாகவும் வெளிப்பட்டது. தொழில் வளர்ச்சியின் ஆரம்பக் கட்டத்திலுள்ள சில சமுதாயங்களில் இத்தகைய சிந்தனைப் போக்குகள் தோன்றியதைக் காணலாம். இந்தியாவில் இயந்திரம், மேனாட்டு ஆதிக்கத்தோடு தொடர்புடையதாயிருந்தது சமுதாயத்தையும், கிராமீயப் பண்பாட்டையும் அடையாளம் தெரியாமல் மாற்றிவிடக் கூடிய சக்தி இயந்திரத்திற்கு உண்டு என்பதை நமது மேல் தட்டினர் கண்டார்கள். இயந்திரம் அக்கால பொருளாதார அமைப்பை

உடைத்து தொழில்வளர்ச்சியின் பிரச்சினைகளைத் தோற்று வித்தது. பழக்கமான உலகத்தை இழந்துவிட்ட தெரியாத ஓர் புதிய உலகத்தில் நுழையவிருப்பவர்களின் அச்சம் நமது மேல் தட்டினரில் ஒரு பகுதியினரைப் பற்றிக் கொண்டது. 19ம் நூற்றுண்டில் தேசீயவாதிகள் தொழில் வளர்ச்சிக்கு ஊக்கம் அளிக்க வேண்டுமென விரும்பினுர்கள். அதுவே எல்லா தீமைகளையும் தீர்க்கும் மருந்தெனவும் நம்பினுர்கள். ஆனுல் இருபதாம் நூற்றுண்டின் தேசீய வாதிகளில் சிலர், இயந்திர வளர்ச்சி கலப்பில்லாத தீமைதான் என்று எண்ணினுர்கள். சிலர் இருப்பதே போதும், இனி மாறுதல் வேண்டாம், என்றுர்கள். மகாத்மாகாந்தி இயந்திர வளர்ச்சி இந்தியாவில் இல்லாததைக்குறித்துப் பெருமைப் பட்டார்.

"......ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த கலப்பையை வைத்து நமது உழவன் உழுது கொண்டுதானே வருகிருன். நாம் பழங்காலத் திலிருந்த குடிசைகளைப்போன்ற உறைவிடங்களில்தான் வாழ்கிருேம். நமது சுதேசக்கல்வி பண்டையக் கல்வி முறையிலிருந்து மாறுபடவில்லை. இயந்திரங்களைச் செய்ய நம்முடைய முன்னேர்களால் முடியவில்லை என்றெண்ணுதீர்கள். இயந்திரங்களைப் பயன்படுத்தினுல் நாம் அவற்றின் அடிமைகளாகி விடுவோம். நமது ஒழுக்க நாளங்கள் அறுந்து போய்விடும்."

(காந்தி)

இவ்வாறு இயந்திரம் ஆன்மீக சமுதாயம் 'பொருள் விருப்புச் சமுதாயம்' என்ற இரண்டிற்கும் அடையாள பூர்வமான வேறுபாட்டுக்குக் காரணமாயிற்று. (இயந்திரம் வேண்டாம் என்னும் சமுதாயம் ஆன்மீக சமுதாயம். இயந்திரம் வேண்டும் என்னும் சமுதாயம் பொருள் விருப்புச் சமுதாயம்) (mateaialist society). இச் சமுதாயங்கள் நேர் முரணுனவையாக எண்ணப்பட்டது. தொழில் வளர்ச்சிக் காலத்துக்கு முந்திய இனக்குழு சமுதாயங்கள் ஆன்மீக சமுதாயங்களாகக் கருதப்பட்டன. இதுவே இந்தியாவின் தொழில் வளர்ச்சிக் காலத்து முன்புள்ள பழைமையை ஆன்மீக சமுதாயமாக எண்ணும் சிந்தனையை வளர்த்தது.

பழமையைப் பற்றிய இத்தகைய பொதுப் படிமம் உருவாக்கப்படுவதற்குப் பலவேறுபட்ட காரணங்கள் இருந்தன. இந்தியப் பண்பாடு பற்றி நல்ல வார்த்தைகள் சொன்னவர்கள் மீது இந்திய வரலாற்று ஆசிரியர்களுக்கு நன்றியுணர்வு இருந்தது. தற்கால இழிவுநிலைக்கு ஈடாக பழங்கால உயர்வைப் போற்றுவது அவர்களுக்கு மனநிறைவை அளித்தது. பழமைக்குப் புத்துயிரளிக்கும் சிந்தனைகள் தேசீய இயக்கச் சிந்தனைகளுக்கு சுய நம்பிக்கையையும் தீவிரச் செயலூக்கத்தையும் அளித்தது. தற்காலத்துக்கு சிறிது முந்தியகால வரலாற்று நூல்களில் இத்தகைய புத்துயிர்ப்புச் சிந்தனைகளையும், செயலூக்க உணர்ச்சிகளையும் காணலாம். 1930-40ல் சமய வாத அரசியலின் பாதிப்புக்கு உள்ளான எழுத்தாளர்கள் 'இந்துக் காலகட்டத்'தின் பெருமையைப் பறைசாற்றினுர்கள். பெருமை மிக்க காலம் என்று அவர்கள் கருதிய கடந்தகாலத்தை அவர்கள் 'இந்துக்காலம்' என்றழைத்தனர். அக்காலம் முஸ்லிம் காலத்தில் தாழ்ச்சியடைந்து விட்டதாகவும், முஸ்லிம்களின் வருகை முதல் இந்தியா அந்நியர் ஆதிக்கத்துக்குட்பட்டதாகவும் அவர்கள் கருதினுர்கள். முஸ்லிம் சமய வாதத்தால் பாதிக்கப் பட்டவர்கள் இந்திய வரலாறே கஜினிமுகம்மது இந்தியாவிற்கு வந்த பிறகுதான் தொடங்குகிறது என்று எண்ணினுர்கள். அவர்கள் முஸ்லிம் காலத்தை காப்பிரிகளை இஸ்லாம் வெற்றிகண்ட காலமாகப்போற்றினர். இக்காலத்தின் நிகழ்ச்சிகளையெல்லாம் இந்து முஸ்லிம் போராட்டங்களாக அவர்கள் விளக்கினர். இந்து—முஸ்லிம் தொடர்புகள் அனைத்திற்கும் சமய வேறுபாடுகளே அடிப்படையானவை என்று இந்து சமயப் பற்றுடையவர்களும் இஸ்லாம் சமயப்பற்றுடையவர்களும் நம்பி அவ்வாறே எழுதினர். சமயவாதங்களுக்கு வெளியே நின்ற மிகச்சில எழுத்தாளர்கள் சமயவாதக்கொள்கைகளை எதிர்க்க, மத்திய காலத்தில் இந்து முஸ்லிம் நேசஉறவுகள் இருந்ததாகக் கூறித் தற்காலத்திலும் இந்து முஸ்லிம் ஒற்றுமையின் தேவையை வலியுறுத்தினர். ஆனுல் அவர்கள் வரலாற்றில் சமய ஒற்றுமைக்கும், வேற்றுமைக்கும் உரியகாரணங்களை ஆராயவில்லை. அத்தகைய ஆராய்ச்சிகள் ஓர் பொருத்தமான வரலாற்று ஆய்வியல் முறையை உருவாக்கி, வலுப்படுத்தியிருக்கும்.

இம்முறை தற்காலத்தில் உருவாகியுள்ளது. அக்காலத்து வரலாற்றுசிரியர்கள் முன்பிருந்த பிரச்சினை: அவர்கள் காலத்தில் இந்தியாவின் தேக்கநிலைக்கும், பின்னடைவுக்கும் காரணங்களான வரலாற்று அம்சங்கள் எவை? இப்பிரச்சினையை சமயவாத வரலாற்றுசிரியர்கள் ஏறெடுத்தும் பார்க்கவில்லை.

பண்டைக் காலம் பொற்காலமாயிற்று. இந்திய நாகரிகத்தின் தொன்மை, காலத்தில் பின்னுக்குத் தள்ளப்பட்டது. வேத இலக்கியம் கி. பி. 4000க்கு முன் இயற்றப்பட்டது என்று காலவரையறை செய்தனர். கங்கைச் சமவெளி நிகழ்ச்சிகளைக் கொண்டு இந்தியத்துணைக் கண்டம் முழுவதற்கும் பொதுவான வரலாற்றுப் பொதுக் கொள்கைகள் அனுமானம் செய்யப் பட்டன. குறுகிய பிரதேச நோக்கு இந்தியாவின் ஒவ்வொரு பகுதியிலும் உண்டாவதற்கு மேற்கூறிய முயற்சியே காரணம். இந்தியாவைப் பற்றி விமர்சனக் கூற்றுகள் வெளிவந்தால், அவற்றிற்குப் பதிலாக பிரிட்டனில் காணப்படும் தற்கால ஜனநாயகக்கருத்துக்கள் இந்தியாவின் பழங்காலப் பண்பாட்டிலும், அரசியலில் காணப்படுவனவே என்று இந்து வரலாற்றுசிரியர்கள் கூறினர். இந்திய மன்னராட்சி அரசியல் அமைப்புக்குட்பட்ட மன்னராட்சியே (Constitutional monarchy) என்று, அவ்வாறு கூறுவது பெரிய காலப்பிழை என்பதையும் எண்ணுமல் இந்து வரலாற்றுசிரியர்கள் கூறினர். சமூக வரலாற்று ஆர்வத்தால், சாதி அமைப்பு நியாயம் என்று வாதிக்க அவர்கள் முன்வந்தனர். பிராமணர்கள் ஆரியப் பண்பாட்டின் வாரிசுரிமை உடையவர்கள் என்றும், ஆரியர் உதிரத்தில் உதித்தவர்கள் என்றும், மேற்குறிப்பிடட்ட ஆசிரியர்கள் எழுதினுர்கள்.

ராணுவ வலிமையைப் போற்றுகிற தீவிர தேசிய வாதமும், அகிம்சையே இந்தியாவின் மரபென்று போற்றும் அகிம்சா தேசியவாதமும் எதிர்பார்க்கக் கூடிய முரண்பாடுகளைத் தோற்றுவிக்கவில்லை. வரலாற்று நூல்களில் தீவிர தேசீய வாதம் வெளியிடப்பட்டது. ஒவ்வொரு வேளை அகிம்சைக் கருத்தும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. மௌரிய சக்கரவர்த்தி அசோகன் அவனது அகிம்சைக் கொள்கைக்காகவும், வன்முறை வெற்றியைத் துறந்ததற்காகவும் சில வரலாற்றுசிரியர்களால் போற்றப் பட்டான். இதே காரணங்களுக்காக அவனை தனது பேரரசின் தற்காப்பை பலப்படுத்தாமல் விட்டுவிட்டான் என்பதற்காக கண்டித்தவர்களும் உள்ளனர். வெற்றிபெற்ற மன்னர்கள் வரலாற்று வீரர்களாகப் புகழப்பட்டனர். காஞ்சிபுரம் வரை படையெடுத்துச் சென்ற சமுத்திரகுப்தனை வரலாற்றுசிரியர்கள் மிகைபடப் புகழ்ந்தார்கள். ஆனுல் பதினுென்ரும் நூற்றுண்டில் அவனதுபடைகள் சென்ற வழியே எதிர்த்திசையில் படையெடுத்துச் சென்று வடக்கே கங்கையாற்றின் கரைவரையில் சென்ற பதினுென்ரும் நூற்றுண்டில் வாழ்ந்த ராஜேந்திரனைப் பற்றி வரலாறு எழுதியவர்கள் குறிப்பிடவே காணேம். அகிம்சையைச் சிறிதும் மதிக்காத ரஜபுத்திரர்களின் வீரமரபு பெரிதும் புகழப்பட்டது. ரஜபுத்திரனுன ராணு பிரதாபனும் மராத்தியனுன சிவாஜியும் பொதுமக்களின் வீரவழிபாட்டிற்குரியவர்களாகச் சித்திரிக்கப்பட்டனர். இவ்வீரவழிபாட்டில் தேசீய உணர்ச்சியும், இந்து சமய உவப்பும் கலந்திருந்தன. நமது காலத்தில் காந்தி அகிம்சையை மேன்மையானஒழுக்கமெனக் கருதினுர் என்பதும் அதன்மீது அசையாத நம்பிக்கைக் கொண்டிருந்தார் என்பதும் உண்மையே. ஆனுல் அவருடைய சீடர்களில் மிகப்பலர் அதனை பிரிட்டிஷாரை எதிர்ப்பதற்கேற்ற போர் கருவியாகவே கருதினர்.

வரலாற்று எழுத்துக்களிலிருந்து பல கால்வாய்கள் பிரிந்தோடின. சமயக்காழ்ப்பை தொடர்ந்து வளர்க்கிற போக்கில் இந்து— முஸ்லிம் விளக்கம் கூறப்பட்டது. இதற்கு அடிப்படையான வரலாற்றுக் கருதுகோள்கள் ஒன்றுகவே இருந்தன. இதுவோர் வாய்க்கால். மற்றென்று பிரதேச வரலாறுகளை எழுதும் ஆர்வத்தால் தோன்றியது. பிரதேச வரலாற்றுச்சான்றுகளைச் சேகரித்து நடுவு நிலையான வரலாற்று நோக்கை உருவாக்குவதற்கு இம் முயற்சி அவசியமே. ஆனுல் பிரதேச வரலாற்றுசிரியர்கள், தம்முன்னிருந்த வார்ப்புகளில் சிந்தனையை இறுகவிட்டு, புதிய வரலாற்று நோக்கு எதனையும் உருவாக்கிக் கொள்ளாமல் பிரதேச உவப்பு வெறியில் வீழ்ந்துவிட்டார்கள்.

ஏகாதிபத்திய வரலாற்றாசிரியர்களின் கூற்றுக் களை எதிர்த்து எழுந்த கருத்துக்கள் கொண்ட நூல்கள் மற்றோர் வகையாகும். இவர்கள் இந்தியப் பழமையின் உண்மையையறிய முயன் றார்கள். நமது பண்பாடு எந்த அம்சங்களில் நல்லது அல்லது தீமையானது என்ற பட்டி மன்ற விவாதங்களில் இறங்காமல் அவர்கள் தப்பிவிட்டார்கள்.

இந்தியாவின் பின்தங்கிய நிலைக்குக் காரணங்கள் என்ன? இந்தியாவின் வருங்காலம் எப்பாதையில் செல்லும் என்ற பிரச்சனைகளைப் பற்றிய விவாதங்கள் மேற்கூறிய கருத்து வார்ப்புகளுக்குள்ளேயேதான் நடைபெறுகின் றன. அண்மையில் வெளிவந்த ஒரு நூலில், இப்பிரச்சனை பற்றிக் கூறப்பட்டிருக்கும் கருத்தாவது: "இந்துப் பண்பாடும் இந்து அமைப்பும் இந்தியாவின் குறைந்த வளர்ச்சி விகிதத்திற்குக் காரணங்களாகும்."

இது ஓர் அபூர்வமான கருத்தன்று. இந்திய சமுதாயவியல்பற்றி துவக்கத்தில் எழுதியவர் களது கருத்தும் இதுவேதான். இக்கருத்துக்கள் 19-ம் நூற்றாண்டின் இந்தியவியல் ஆராய்ச்சி களின் விளைவாக எழுந்த கருத்துக்கள் இவைதாம் முக்கியமான கருத்து வார்ப்புக்கள். உதாரணமாக, மாக்ஸ்வீபர் இந்திய சமயம், சமுதாயம் குறித்து எழுதியுள்ளார். இந்துக் களின் மறுவுலகச் சிந்தனை பற்றியும், சாதிச் சமுதாயத்தின் மாறாத் தன்மை பற்றியும் குறிப் பிட்டு இவையிரண்டும் பொருளாதார மாறுதல் களை அனுமதிக்காது என்ற முடிவுக்கு வருகிறார். நமது காலத்திலும் தற்கால ஆசியாவின் பொருளாதார வளர்ச்சிக் குறைவு பற்றி ஆராய்கிற குன்னார்மிர்டாலின், ஆசிய நாடகம் (Asian Drama) என்பது போன்ற நூல்களில் மேற் குறிப்பிட்ட கொள்கைகளையே, இந்திய சமுதா யத்தையும், சமூக மாறுதல்களையும் பற்றிய நவீன ஆராய்ச்சிகளைக் கருத்தில் கொள்ளா மலேயே, தமது ஆய்வு முறையில் பயன்படுத்து கிறார்கள். குறுகிய, பொருளாதாரக் கண்ணோட் டமுடைய வரலாற்றாசிரியர்கள், இந்தியாவின் வளர்ச்சியின்மைக்கு 'கீழ்த்திசை எதேச்சாதி காரமே' காரணம் என்று எழுதுகிறார்கள். 'உலகப் பற்றற்றவர்கள் இந்தியர்கள்' என்ற வார்ப்பைப் பயன்படுத்து கிறவர்கள், நாட்டின் பொருளாதார வளர்ச்சி தடைபட்டுப் போன தற்கு ஏகாதிபத்தியத்திற்கும் பங்கு உண்டு என்பதைக் காணவிடாமல் அதன் பங்கைக் குறைத்துக் கூறுபவர்களுக்கு உதவுகிறார்கள். இந்தியாவின் பொருளாதார வளர்ச்சிக்குறை விற்குரிய விளக்கங்களாக 'இந்துப் பண்பாடு' முதலிய வார்ப்புக்கள் காணப்படவில்லை. அக்கா ரணத்தை அறிய நாம் ஏகாதிபத்திய முற்கால இந்திய சமுதாயத்தையும், ஏகாதிபத்தியகால இந்திய சமுதாயத்தையும்பற்றி விரிவான விஞ் ஞான பூர்வமான ஆய்வுகள் நடத்தவேண்டும்.

பழமையைப்பற்றிய மதிப்பீடு ஒரு வரலாற்று மதிப்பு மட்டுமன்று. கடந்த சில நூற்றாண்டுகளாக நிலவிவரும் சில வார்ப்புகளை விமர்சித்து அவற்றினின்று விலகி வரவேண்டும். இவற்றுள் நான்கை நான் முன்னர் குறிப்பிட் டேன். அவையாவன: 1) ஆரிய இனக் கொள்கை. 2) மாறாத இந்திய சமுதாயம். 3) பொருளாதார மாறுதல்களுக்கு இடையூறாக இருக்கும் இந்தியர்களது மறுமையார்வம். 4) கீழ்த்திசை எதேச்சாதிகாரம். இவற்றை விமர்சனம் செய்யாமல் புதிய வரலாற்று நோக்கை உருவாக்க இயலாது. இவற்றை விமர்சிக்கும் பொழுதுதான் புதிய உட்தொடர்பு களும், புதிய இணைப்புகளும் நமக்குப் புலனாகி புதிய வரலாற்றுக் கண்ணோட்டத்தை உருவாக்க முடியும். புதிய சான்றுகள் கிடைக்கும்பொழுது பழைமையின் கருத்துப் படிமத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். புதிய சான்றுகளுக் கேற்ப கருத்துக்களை மாற்றிக் கொள்ளத் தடையாயிருப் பவை பழைய வார்ப்புக்களே.

வார்ப்புக்கள் எவ்வளவுக்கு புறவய உண்மை யின் படிமங்கள் என்றும், அண்மைக் கடந்த காலத்தின் தேவைகளின் பிரதி பலிப்புகளாக எவ்வளவுக்கு உள்ளனவென்றும் நாம் ஆராய் வதே வார்ப்புகளை விமர்சனம் செய்வதாகும். பழைய வார்ப்பைத் தலைகீழாக நிறுத்துவதோ, அல்லது பழைய வார்ப்புக்குப் பதிலாகப் புதிய வார்ப்பு ஒன்றை உருவாக்குவதோ புதிய நோக்க மாகாது. அண்மைக் காலச்சான்றுகளை தருக்க ரீதியாக பகுத்தாராய்வதும், பயன் படுத்தக் கூடிய இடங்களில் தற்கால ஆய்வுமுறை யியலைப் பயன்படுத்துவதும் தேவையானவை.

என்னுடைய அடுத்த இரண்டு கட்டுரைகளில் இந்தியப் பழமையின் சில அம்சங்களை, பழங்கால வரலாறுகளை ஆராய்கிற நவீனமுறை இயலைப்படுத்தி ஆராய முயலுவேன். தற்காலத்தில் நிலவும் வரலாற்றுக் கருத்து வார்ப்புகள் எந்த அளவுக்கு வரலாற்றுண்மைகளாக உள்ளன என்பதை மதிப்பிட இவ்வித ஆய்வு உதவும். இக்கட்டுரைகளில் இந்தியப் பழைமையை வரை யறுத்துக் கூறவோ, பழமையின் வடிவத்தைக் கருத்தால் நிருமாணம் செய்யவோ நான் முயலவில்லை. எவ்வித ஆய்வுகள் செய்யப்படவேண்டும் என்று சுட்டிக் காட்டுவதும், அவை நமது சமுதாயத்திற்கு எவ்வாறு பொருத்தமானது என்று சுட்டிக்கட்டுவதுமே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

தமிழாக்கம்; **நா. வா[illegible]னமாமலை,**

---

## இந்திய மொழிகளிடையே 'இலக்கிய சகோதரத்துவம்' வேண்டும்

குஜராதி சாகித்ய பரிஷத்தில்

**டாக்டர். கலைஞர்: மு. கருணாநிதியின், கருத்துரை.**

சென்னையில் நடைபெற்ற குஜராதி சாகித்ய பரிஷத்தின் 26-வது ஆண்டுவிழாவைத் துவக்கிவைத்து டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி பேசியதன் சுருக்கம் வருமாறு:

"ஒருவனது தாய்மொழிப்பற்று தேசீய ஒற்றுமைக்கு ஆற்றல்மிகு இயக்கு சக்தியாக இருக்கிறது. எனது தமிழ் அன்புதான் பிறமொழிகளின் மீது மரியாதை செலுத்தத் தூண்டுகிறது. நான் உணர்வுள்ள தமிழனாக இருந்தால்தான் நான் ஒரு முழுமையான இந்தியனாக இருக்கமுடியும்.

இந்திய மொழிகளிலுள்ள புகழ்மிக்க இலக்கிய மரபுகளை அறிந்துகொள்ளுவது தற்காலத்தில் மிகவும் அவசியமான தேவையாகும். சாகித்ய அகாதெமி போன்ற தேசீய அமைப்புக்கள் இத்துறையில் பெரும்பணி ஆற்றியுள்ளன என்றாலும் இன்னும் அதிகமான அளவில் இலக்கியப் படைப்பு மாற்றங்களை மேற்கொள்ள வேண்டியது அவசியம்.

குஜராதி, இந்தியாவின் சிறந்த மொழிகளுள் ஒன்று. மகாத்மாகாந்தி, காகாகலேல்கார் கே. எம். முன்ஷி போன்றவர்கள் இம்மொழியில் எழுதிய நூல்கள், இந்தியா முழுவதிலுமுள்ள இலக்கிய நேயர்களின் உள்ளத்தில் பாதிப்பு ஏற்படுத்தியுள்ளன.

பரஸ்பரப் பண்பாட்டுத் தொடர்புகளை வளர்க்க இடைவிடாத முயற்சிகள் மேற்கொள்ளப்படவேண்டும். இம்முயற்சிகளால் இலக்கிய சகோதரத்துவம் இந்தியாவில் தோன்றி வளரவேண்டும்."

[இக்கருத்துக்களை ஆராய்ச்சி வரவேற்கிறது. தமிழ் வளர்ச்சிக் கழகம், கலைஞர் வெளியிட்ட இலக்கிய சகோதரத்துவத்தை வளர்க்க ஏதாவது செய்யுமா? சாகித்ய அகாதெமியின் தமிழ்நாட்டுக்கிளை பிற இந்திய மொழி இலக்கியங்களை தமிழில் மொழிபெயர்க்கத் தூண்டி, தமிழக அரசு ஒரு திட்டம் தந்து அதற்குரிய செலவில் ஒரு பகுதியை அளிக்குமா? தமிழ்வளர்ச்சிக் கழகம், கலைஞர் கூறிய கருத்துக்களைச் செயல்படுத்த தமிழ்க்கவிஞர்கள் திருவள்ளுவர், இளங்கோ, கம்பன், பாரதி, பாரதிதாசன் முதலியவர்களின் நூல்களையும், தற்கால நாவலாசிரியர்கள், சிறுகதை எழுத்தாளர்களது நூல்களையும், குறைந்தபட்சம் இந்தி. வங்காளி, மகாராஷ்டிரம், குஜராத்தி, தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்க சாகித்ய அகாதெமியைத் தூண்டி, அதற்குரிய செலவில் ஒரு பகுதியை அளிக்க முன்வருமா?

கலைஞர் கூறிய இலக்கிய சகோதரத்துவத்தை வளர்க்க அரசின் உறுப்புக்களும், சாகித்ய அகாதெமியும், பல்கலைக்கழகங்களும், இலக்கியக்கழகங்களும் முழு முயற்சி செய்தல்வேண்டும்.

—ஆசிரியர்]

# காவிரிப்பூம் பட்டினத்தில் புதைபொருள் ஆராய்ச்சி.

புலவர். நா. தியாகராசன்.

### வரலாற்றில் புகார்

காவிரிப்பூம்பட்டினம் பழம் பெருமை வாய்ந்தது. புகார், பூம்புகார், மூதூர், பெருநகர், பட்டினம், காவிரிப்படப்பை நன்னகர், பூவிரிப்படப்பை நன்னகர், பூவிலி படப்பைப் புகார் காகந்தி, சம்பாபதி பட்டினம் என்றும் வழங்கப்பட்டு வந்துள்ளதை பட்டினப்பாலை, சிலப்பதிகாரம், மணிமேகலை, சங்கப்பாடல்கள் முதலிய பண்டைத்தமிழ் இலக்கியங்களால் நன்குணரலாம்.

கி. மு. நான்காம் நூற்றுண்டுக்கு முன்னேயே மக்களால் வழங்கி வந்ததாகக் கருதப்படும் புத்தஜாதகக் கதைகளில் குறிக்கப்பட்டுள்ள "கவேரபட்டினம்" என்பது காவிரிப் பூம்பட்டினத்தைக் குறிக்கிறது என்று அறிஞர்கள் முடிபு ஆகும். கி. பி. 81—96ல் பிளினி என்ற நிலநூல் ஆசிரியர் அளித்த குறிப்புகளைக் கொண்டு எழுதப்பெற்ற "பெரிபுளுஸ் மாரிஸ் எரித்திரியா" என்ற நூலில் கொற்கையை அடுத்த கடலைச்சார்ந்த "கடற்கரை நாடு" என ஒன்றும் "அர்கரு" என்ற உள்நாடும் இருப்பதாகக் கூறப்பட்டுள்ளதை முறையே புகாரையும், உறையூரையும் குறிக்கும் என்பது அறிஞர் முடிவு. அதன் பின்னர் அரை நூற்றுண்டு கழித்து "தாலமி" என்ற நிலநூல் ஆசிரியர் காவிரி கடலோடு கலக்கும் இடத்தில் இருக்கும் காவிரிப்பூம் பட்டினத்தை "கபேரிஸ்" என்று குறித்துள்ளார். கி. பி. முதல் நூற்றுண்டில் எழுதப்பட்ட "மிலிந்தா அரசனுடைய கேள்விகள்" என்ற புத்தநூலில் அக்கால கடற்கரைப் பட்டினங்களுள் சிறந்தனவற்றுள் ஒன்றுகக் "கோளப்பட்டினம்" என்ற ஒன்றைக் குறிப்பிடுகிறது. பாலி மொழியில் எழுதப்பெற்ற புத்த இலக்கியங்களில் குறிப்பிடப் பெற்றுள்ள "கவேரபட்டினமும்" "கோளப்பட்டணமும்" காவிரிப்பூம்பட்டினத்தையே குறிப்பனவாகும் என்பதெல்லாம் அறிஞர்கள் யாவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட செய்தியாகும். கி. பி. 4ஆம் நூற்றுண்டில் 'புத்ததத்தன்' என்ற பௌத்த ஆசிரியர் தம் நூலில் இந்நகரின் சிறப்பு குறித்து எழுதியுள்ளார். கி. பி. 7-ஆம் நூற்றுண்டில் திருநாவுக்கரசரும், ஞானசம்பந்தரும், கி. பி. 9-ஆம் நூற்றுண்டில் பட்டினத்து அடிகளும், இயற்பகை நாயனுரும் வாழ்ந்து இந்நகர் குறித்தும் பாடியுள்ள செய்தி எல்லாம் நாம் நன்கு அறிந்ததே. கி. பி. 10—ஆம் நூற்றுண்டு முதல் 12-ம் நூற்றுண்டு வரை அமைந்த பிற்காலசோழர் ஆட்சியிலும் இந்நகர் பேணப்பட்டு வந்துள்ளதை பண்டாரத்தார் தம் ஆய்வில் குறித்துள்ளார்.

இந்த வரலாற்றுச் சிறப்பு மிக்க நகரைப்பற்றி அண்மைக்காலம் வரை எந்த ஆய்வையும் மேற்கொள்ளவில்லை. 1960-ஆம், ஆண்டு தொடங்கி மூன்று ஆண்டு காலம் ஆய்வு செய்தனர். அதில் காவிரிப்பூம் பட்டினத்தின் பழமையை உறுதி படுத்தும் வகையில் அரிய சிலசான்றுகள் கிடைத்துள்ளன. அது குறித்து இந்தியத் தொல்பொருள் ஆய்வினர் ஆண்டறிக்கை வெளியிட்டுள்ளனர். பண்டைய இலக்கியங்களின் துணை கொண்டும், புதை பொருள் ஆய்வுகளின் துணைக்கொண்டும், புகாரைப்பற்றி அறிந்து கொள்ளுவோம்.

### புதைபொருள் சான்றுகள்

"கழிசூழ் படப்பை நன்னகர்" என்பதால் இந்த உப்பங்கழிகளின் வழியாக உள்நாட்டுப் பண்டங்களை ஓடங்களின் உதவியால் இடம் மாற்றித் கொண்டனர். காவிரியாறு அகலமும், ஆழமும் உடையதாக இருந்ததால் கலங்கள் தடையின்றி உள்நாடு வரை வர வாய்ப்பாக அமைத்திருந்தது.

ஓடங்களுக்கென அமைந்த இடங்களில் பொருள்களை ஏற்றவும் இறக்கவும் வசதியாகச் சிறிய (Ship yard) படகுத்துறைகளும் இருந்தது என்பது அண்மையில் புதைபொருள் ஆய்வில் கண்ட சான்று உறுதி அளிக்கிறது. கீழையூர் கிராமத்தில் மங்கைமடம் என்ற வயலில் இது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இது கடலுக்கு சுமார் 4 பர்லாங் தூரத்தில் உள்ளது குறிப்பிடத் தக்கது. இதன் அமைப்பு வியக்கத்தக்க முறையில் அமைந்துள்ளது. இத்துறை சுமார் 60 அடி நீளத்தில் 25 அடி அகலத்தில் அமைந்துள்ளது. செங்கற்களால் கட்டப்பட்டுள்ளது. இரண்டேகால் அடி நீளமும் ஒன்றரை அடி அகலமும் ஐந்து அங்குல கனமும் கொண்டதாகவும், சில ஒன்றரை அடி சதுர வடிவில் அமைந்த கற்களாகவும் உள்ளது. இதைக் கட்டுவதற்கு நல்ல ஒட்டுந்தன்மைவாய்ந்த களிமண்ணைச் சந்தனம்போல் குழைவாக அரைத்துக் கல்லைப் பொருத்தி இருக்கிறார்கள். இதன் இடையே இணையாக மரத்தால் ஆன கம்பங்கள் புதைக்கப்பட்டுள்ளது. இதைக் காணும்போது பட்டினப்பாலையில் உள்ள நான்கு அடிகள் நினைவுக்கு வருகிறது.

> வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி
> நெல்லொடு வந்த வல் வாய்ப் பஃறி
> பணைநிலைப் புரவியின் அணைமுதல் பிணிக்கும்
> கழிசூழ் படப்பை....

என்ற வரியில் உப்புவிற்ற நெல்லைக்கொண்டு வந்த படகுகளைப் பந்தியிலே நிரல்படக் குதிரைகளைப் பிணிக்குமாறு போலத் தறிகளிலே பிணித்துள்ள காட்சியைப் படம்பிடித்துக் காட்டுகிறார் உருத்திரங்கண்ணனார்.

வணிகர்கள் "மணிக்கிராமத்தார்" என்ற பெயரில் குழுவாக அமைந்து கடற்றுறைப்பட்டினங்களிலும் வெளிநாடுகளிலும் வாணிபம் நடத்தினர் எனக்கல்வெட்டு மூலம் அறிகிறோம். அவர்கள் (Merchants Guild) தம் குழுவிற்குரிய துறையை அமைத்துக் கொண்டதைத்தான் இன்று புதைபொருள் ஆய்வாளர் கண்டுபிடித்துள்ளனர். இதில் இருந்த மரத்துண்டை (Carbon date) ஆராய்ச்சி செய்ததில் அதன் காலம் கி.மு. 200ஆண்டுகள்[1] எனக் கனித்துள்ளார்கள். இதைச்சிறந்த சான்றாகக் கொள்கின்றனர் புதைபொருள் ஆய்வாளர். இந்தப் படகுத்துறை, இன்று சிற்றூராக உள்ள மணிக்கிராமத்திற்கு நேர் கிழக்கில் உள்ளது குறிப்பிடத்தக்கது ஆகும். கல்வெட்டில் "காவிரிப்பூம்பட்டினத்து மணிக்கிராமத்தார்"குழுவாக இருந்து வாணிபம் செய்த வரலாறு குறிப்பிடப்பட்டுள்ளது. இது கொண்டு நோக்கினால் இன்று "மணிக்கிராமம்" என்ற பெயரில் தனி ஊராக இருப்பது அன்னாளில் "காவிரிப்பூம்பட்டினத்து மணிக்கிராமத்தார்" வாழ்ந்த இடம் என்பது தெளிவாகிறது.

இதுபோலவே காவிரிப்பூம் பட்டினத்தில் பெருங் கலங்கள் தங்கும் துறைமுகத்தையும் சாத்தனார் குறிப்பிடுகிறார்.

> வெளில் இளக்கும் களிறு போல
> தீம் புகார்த் திரை முன்துறை
> தூங்குநாவாய் துவன்று இருக்கை
> மிசைக் கூம்பின் நசைக் கொடியும்

அசையாத கம்பத்தினை அசைக்கும் யானைபோல நின்று கொண்டிருக்கிற கலங்களைக் காண்கிறோம். அது அசைகின்ற அசைவிலே பாய் மரத்தின் மேலே உயர்த்தப்பட்ட கொடிகளின் அசைவையும் பார்க்கிறோம். முன்னர் படகு வரிசைக்கு குதிரை வரிசையை உவமையாகக் கொண்டவர், இங்கு பெரிய மரக்கலங்கள் நிறுத்தப் பட்டுள்ளதை யானை வரிசையோடு ஒப்பிட்டுக் காட்டுகிறார். கப்பல்துறை இருந்த இடம் இன்று கடலால் சூழப்பட்டுள்ளது.

> கடலே கால் தந்த கலன் எண்ணுவோர்
> கானற் புன்னைச் சினை நிலைக்குந்து
> கழியே சிறுவெள் உப்பின் கொள்ளைச் சாற்றி
> பெருங்கல் நல்நாட்டு உமண் ஒலிக்குந்து
> அன்ன நல்நாட்டும் பெருநம் யாமே
>
> -புறம். 386

கடற் பக்கத்தே காற்றின் வேகத்தால் திசை தப்பி வந்த கலன்களை எண்ணுவோர், கடற்கரையில் உள்ளபுன்னைமரக் கிளைகளைப் பிடித்துத் தொங்கித் தொங்கி நிற்பதால் அம்மரக் கிளைகள் அலைப்புண்டு கிடக்கின்றன. உப்பங்கழிகள், மலைநாட்டு வணிகர்கள் ஆண்டுப்போந்து வெள்ளை உப்பை ஏலமிட்டு விலைப்படுத்துவதால் ஆரவாரம் நிறைந்துள்ளது என்று, கடலிலே கலங்களையும், கழிகளிலே ஓடங்களையும் இருவேறு கோணத்தில் படம்பிடித்துக் காட்டுகிறார். இது பட்டினப்பாலை அடிகளுக்கும் பொருந்த அமைந்துள்ளதைக் கண்டும், மேற்காணும் சான்று வலியுறுதல் காண்க.

## கோயில்கள்—பள்ளிகள்

*பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்*
*அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்*
*நீலமேனி நெடியோன் கோயிலும்*
*மாலைவெண்குடை மன்னவன் கோயிலும்*
*-சிலப்.*

யாக்கையிற் பிறவாப் பெரியோன் கோயில், முருகவேள் கோயில், பலதேவன் கோயில், நெடிய மால் கோயில், வாசவன் கோயில் என பல கோயில்களை இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார்.

*நுதல் விழி நாட்டத்து இறையோன் முதலாகப்*
*பதிவாழ் சதுக்கத்துத் தெய்வமீறாக*
*-மணிமே.*

என மணிமேகலை ஆசிரியரும் பல கோயில்கள் புகாரில் இருந்ததாகக் குறிப்பிடுகிறார்.

*அறவோர் பள்ளியும் அறன் ஓம்படையும்*
*புறநிலைக் கோட்டத்துப் புண்ணிய தானமும்*
*-சிலப்.*

என்ற வரிகளில், அருகப்பள்ளி, புத்தர் பள்ளி, தருமம் போதிக்கும் இடம், புறம்பேயுள்ள ஸ்ரீ கோயில், முதலியவை இருந்தது என்பது புலனாகிறது.

*தவப்பள்ளி தாழ்காவின்*
*அவிர்சடை முனிவர் அங்கி வேட்கும்*

என்பது பட்டினப்பாலை. இவ்வடிகளுக்கு நச்சினார்க்கினியார் "தவஞ் செய்யும் அமண் பள்ளி பௌத்த பள்ளிகளையும்" — என்று விளக்கம் தந்துள்ளார். மணிமேகலையுள்ளும்

*பளிக்கறை மண்டபம் உண்டு அதனுள்ளது*
*தூநிற மாமணிச் சுடரொளி விரிந்த*
*தாமரைப் பீடிகை தான் உண்டு* மணி. 64-66
*மணியறைப் பீடிகை வலங் கொண்டு* 5-97
*ஆயிர ஆயிரத்து ஆழியங் திருந்தடி* 5-104
*ஆதி முதல்வன் அறவாழி ஆள்வோன்*
*பாத பீடிகை பணிந்தனள் ஏத்தி* 6-11-12.

என்று சாத்தனார் கூறிப்போந்ததை "மாணிக்கச் சோதி பரந்த பதும பீடம்" என்றும் "பளிக்கரையில் உள்ள பாத பீடம்" என்றும் "இவள் பாதத்தில் ஸகஸ்ராரச சக்கர ரேகை உண்டென்பார்" என்றும் குறிப்புரைகாரர் உரைத்துள்ளார்.

இவற்றையெல்லாம் நோக்கினால் புகாரில் பௌத்தமும் சமணமும் சிறப்புறத் திகழ்ந்து இருந்தன என்பது நன்கு விளங்குகிறது. இதை மனதில் கொண்டு புதைபொருள் ஆய்வாளர் கண்ட புத்தவிகாரத்தை ஆராய்வோம். புத்த விகாரம் பல்லவனீச்சரம் கோயிலுக்கு வடபுறத்தில் நகரத்தார் விடுதிக்கு கீழ்பக்கத்தில் தோண்டிக் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. இது சதுர வடிவில் அமைந்த பல அறைகளைக் கொண்டது. முன்புறம் தாழ்வாரம் காணப்படுகிறது. அங்கு 3 அங்குல உயரத்தில் **புத்தபகவானின் செப்புப்படிமம்** கிடைத்தது. இது தியானம் செய்யும் தோற்றத்தில் அமைந்துள்ளது. இங்கு மணிகளும் காசுகளும் கிடைத்தன. இந்த விகாரத்தின் தென்புறத்தில் ஒரு அறையில் வெண்ணிற சலவைக்கல் கிடைத்தது. அதில் புத்த பகவானின் பாதம் பொறிக்கப்பட்டுள்ளது.[2] தாமரை மலரும், பூரணகும்பமும், ஸ்வஸ்திக் அடையாளமும் பொறிக்கப்பட்டுள்ளது. இது நாகார்ச்சுன கொண்டாவில் கண்டெடுக்கப்பட்ட புத்த பாதத்துடன் பொருந்திய பழமையுடையது ஆகும். அங்கிருந்தே இக்கல் கொண்டு வரப்பட்டிருக்க வேண்டும் என்று ஆய்வாளர்கள் முடிவு செய்கிறார்கள். மற்றும் அங்கு அர்த்த சந்திர வடிவில் அமைந்த கருங்கல் அடிப்பீடமும் கிடைத்தது. அழகு மிகுந்த சிற்ப நுட்பம் செறிந்த துவாரபாலகரின் உருவம் கிடைத்தது. இது சுண்ணும்புக்கல்லால் செய்யப்பட்டது. தென்னகத்தில் முதல் முதலாக இங்கே தான் புத்த விகாரம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இதில் இருவேறு காலங்களில் கட்டப்பட்ட இரண்டு விதமான பாணியைக் காணலாம் என்றும், அதன் வழிப் பழங்காலத்தில் கட்டிய ஒன்றும்[3] பின்னர் அழிவின்மேல் மீண்டும் கட்டியது ஒன்றும் ஆக இருவேறு காலங்களில் கட்டப்பட்டு அழிந்துள்ளதை புதைபொருள் ஆய்வாளர் உறுதிப் படுத்துகின்றனர்.

கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் அசோக சக்கரவர்த்தியின் உறவினரான **மகிந்தன்** (மஹா இந்திரன் என்னும் பெயர் பாலியில் மகிந்தன் என வழங்கும்) என்பவர் இலங்கை செல்லுமுன் காவிரிப் பூம்பட்டினத்தில் தங்கி அங்கு ஏழு புத்த விகாரங்களைக் கட்டினார் என்றும், அதுவே இலக்கியத்தில் இந்திரன் கட்டியதாகக் கூறப்பட்டுள்ளது[4] என்றும் சரித்திர ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர்.

இந்த விகாரைகளின் தலைவராக அறவண அடிகள் என்னும் தேரர் இருந்தார் என்றும், மணிமேகலையும் பௌத்த துறவியாக இந்த விகாரையில்தான் தங்கி இருந்தாள் என்றும் சாத்தனுர் கூறுதல் உண்மையுடையதாகிறது.

கி. பி. நான்காம் நூற்றுண்டில் அச்சுதவிக் கந்தன் என்னும் களபர அரசனுல் ஆதரிக்கப் பட்டவரும் தமிழ்நாட்டுப் பௌத்தப் பெரியார் களில் பெயர் பெற்றவருமான புத்ததத்த தேரர் என்னும் பௌத்த ஆசிரியர் சோழ நாட்டையும் காவிரிப்பூம் பட்டினத்தையும் சிறப்பித்துக் கூறியிருக்கிருர்.

"காவிரிப்பூம்பட்டினம் செல்வத் தொகுதி யும் மக்கட் கூட்டமும் நெருங்கிய இடம் என்றும் அப்பட்டினத்தில் இவர் தங்கி இருந்த பௌத்தப்பள்ளி கணதாசர் என்பவரால் கட்டப் பட்டது என்றும், பள்ளிக்கட்டிடங்கள் பெரியன வாய் வெண்சுதை பூசப்பெற்றுக் கைலாயம் போல் வெண்ணிறமாக விளங்குகிறது என்றும் தாம் எழுதிய அபிதம்மாவதாரம் என்னும் பாலி நூலில் இவர் எழுதி இருக்கிருர்.

*"நரநாரி கணுகிண்ணே அஸங்கிண்ணே குலாருவே*
*பீதே ஸப்பங்க ஸம்பன்னே பஸன்னே ஸரிதோதகே*
*நானுரதனஸம்பன்னே விவிதாபன ஸங்கதே*
*காவேரிபட்டணே ரம்மேநானுராமோ பஸேஸோத*
*கேலாஸ ஸிகரரகார பாஸாத பதிமண்டிதே*
*காரிதே கணதாஸேன தஸ்ஸனீய மனேரமே*
*விஹாரே விவிதாகார சாருபாகார கோபுரே*
*தத்தா பாலின பஸ்ஸே மயா நிவஸதாஸதா*
*ரம்மஸல்லேக ஸாகல்ய ஸீலாதி குண ஸோபினு*
*அயம்ஸுமதினு யாசிதேன கதோகதோ."*

அன்றியும் புத்தவம்சம் என்னும் நூலுக்கு இவர் எழுதிய மதுராந்த விலாசினி என்னும் உரையின் இறுதியிலும் காவேரிப்பட்டினத்தில் கணதாசர் கட்டிய பௌத்த விகாரையைக் கீழ்வருமாறு குறிக்கிருர்.

*"காவிர ஜல ஸம்பாத பரிபூத மஹிதலே*
*காவேரி பட்டணே ரம்மே நானு நாரீநராகுலே*
*கரிதேகணதா ஸேன ஸணவாசேன ஸாதுனு*
*விஹாரே விவிதாகார சாருபாகார கோபுரே"*

இதை "பௌத்தமும் தமிழும்" என்ற நூலில் மயிலை சீனி வேங்கடசாமி குறித்துள்ளார். இவற்றை எல்லாம் மனதில் கொண்டு இன்று பல்லவனிச்சரத்துக்குப் பக்கத்தே புதைபொருள் ஆய்வாளர் கண்ட புத்த விகாரத்தை நோக்கி ஞல் பல உண்மைகள் விளக்கமாகிறது. வெண் சுதை சிற்பம் குறிப்பிடத்தக்கது ஆகும். அங்கே வண்ணம் பூசப்பட்ட உடைந்த உருவங்களின் பாகங்களும் ஆராய்ச்சிக்குரியது. இது கடலி லிருந்து மூன்ருவது மைலில் உள்ளது. இதன் தென்புறத்தே சுமார் இரண்டு பர்லாங்கில் காவிரி உள்ளது. காவிரியின் பக்கத்தே உள்ள வயலுக்கு உவவனம், பூவனம் என்றும் பெயர் வழக்கில் உள்ளது. இதை நோக்கின் மணி மேகலையில் குறித்தபடி உவவனம் என்னும் பூஞ்சோலையின் நடுவில் பளிங்கினுல் அமைக்கப் பட்ட சிறு கோயில் ஒன்றில் புத்தரது பாத பீடிகை இருந்ததும் குறிப்பிடத்தக்கது. அன்றி யும் இப்பட்டினத்தின் முதுகாட்டினை அடுத்து ஏனைய மதத்தோரால் கூறப்பட்ட "சுடுகாட்டுக் கோட்டம்" அல்லது பௌத்தர்களால் போற்றப் "சக்கரவாளக் கோட்டம்" என்னும் இடத்தில் சம்பாபதி என்னும் தெய்வம் கோயில் கொண்டி ருந்தது. இன்று சம்பாபதி கோயில் இப்போது கண்ட விகாரைக்கு தென்மேற்கில் 5 பர்லாங்கில் உள்ளது. இதன் வடக்கே சாய்க்காடு என்னும் பழைய கோயில் உள்ளது.

## மதகு

கரிகாலன் கரையெடுத்து முடித்தபின்பு காவிரியாற்றின் குறுக்கே அணை கட்டிப் பல கிளை வாய்க்கால்களையும் வெட்டி, நீர் தேக்க மதகுகளையும் அடைத்துத் தண்ணீரை வேளாண் மைக்குப் பயன் படுத்தினுன் என்றும், அதன் வழி சோழ நாடு சோறு மிக்கதாய், வளமுடைய நீர் நாடாயிற்று என்றும் அறியமுடிகிறது.

*பூவிரி புதுநீர்க் காவிரி புரக்கும்*
*தன்புனற் படப்பை எம்மூர் ஆக்கண்* ... 166
*காவிரி அணையும் தாழநீர் படப்பை*
*நெல்விளை கழனி அம்பர் கிழவோன்* ... 385

என்று புறநானூற்றுள் காவிரி அணைவதால் கழனியில் நெல் கொழிக்கின்ற காட்சியைக் காணமுடிகிறது. அன்றியும்

*உழவ ரோதை மதகோதை*
*உடைநீரோதை தன்பதங்கொள்*
*விழவரோதை சிறந்தார்ப்ப*
*நடந்தாய் வாழி காவேரி*

என இளங்கோவடிகளும் நேரில் கண்டு அனுப வித்துப்பாடிய உணர்ச்சியைநாமும் அனுபவிக்க

முடிகிறது. புதுப்புனல்கண்டு உழவர் ஆர்க்கும் ஓசையும் நீர் மதகுகளிலே அணைந்து செல்லுத லால் உண்டாகும் ஓசையும் கரைகளையும் வரப்பு களையும் உடைத்துப் பாய்கின்ற ஓசையையும், புதுப்புனலில் ஆடும் மக்களின் ஓசையும் சிறக்கக் காவிரிப்பெண் நடப்பதாகக் கூறுகிருர்.

காவிரியில் மதகுகள் பல இருந்ததை இளங்கோ வாக்கால் கண்டோம். அதற்குத் தகவே இன்று இத்தியத் தொல் பொருள் ஆய் வாளர் வாணகிரியில் திருமேனிப்பள்ளம் என்ற இடத்தில் நீர்ப்பாசனத்திற்குப் பயன்பட்ட மதகு ஒன்றைக் கண்டு பிடித்துள்ளனர்.5

இதன் அமைப்பு கண்டார் வியப்பெய்தும் வண்ணம் உள்ளது. இக்காலப் பொறியியலார் கண்டு வியந்தனர். தண்ணீர் வெளிச் செல்லும் வழி அழகுற வளைவாக அமைக்கப்பட்டும், வளைவிற்கு ஏற்ப கற்களை வளைவாக செய்தும் மதகினை அமைத்திருக்கின்றனர். சுண்ணும்புக் காரை கொண்டு கட்டப்பட்டுள்ளது. தண்ணீரின் வேகத்தைக் குறைக்கவும் மதகு சேதப்படாமல் இருக்கவும் படிப்படியாக அமைத்திருக்கிற கீழ் அமைப்பும் கொண்டுள்ளது. இது சோழ நாட்டின் இப்பகுதியின் விவசாய முன்னேற்றத் திற்குப் பயன்பட்டது என்பது நன்கு விளங்கு கிறது.

## வெள்ளையன் இருப்பு

பல்லவனிச்சரத்திற்கு வடகிழக்கிலும் தரும குளத்திற்கு வடபுறத்திலும் உள்ளது வெள்ளையன் இருப்பு என்னும் ஊர். இங்கே கிரேக்க மன்னன் அகஸ்டஸ் தலை பொறிக்கப் பட்ட செப்புக்காசு கிடைத்தது. உடைந்த ரோமானிய ஜாடிகளும் அவர்கள் பயன்படுத்திய பாத்திர ஓடுகளும் கிடைத்துள்ளன. அவை கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றுண்டைச் சார்ந்தது.

*யவனர் தந்த வினைமான் நன்கலம்-*
*அகம்147-9*

*பயன் அறவு அறியா யவனர் இருக்கையும்*
*சிலப்.5-10*

யவனர் என்று குறிக்கப்பட்டது, கிரேக்கரை என்றும் மற்றைய இலக்கியங்களின் வழியும் காண்கிறோம். அவர்கள் பயன்படுத்திய, அவர் கள் நாட்டில் செய்யப்பட்ட, பாத்திரங்கள், சிதைந்த வடிவில் புதைபொருள் ஆய்வில்கிடைத் துள்ளன. புகாரில் அவர்கள் சேர்ந்து வாழ்ந்த இடமாக இருக்கவேண்டும் என்று ஆய்வாளர் குறித்துள்ளார்கள். நிறம் நோக்கி வெள்ளையன் என்று கூறும் வழக்கினை நோக்கின், யவனர் களை வெள்ளையன் என்றும், அவர்கள் வாழ்ந்த இடத்தை வெள்ளையன் இருப்பு என்றும் வழங்கினர் என்பது புலப்படும்.

இதன் பக்கத்தே சித்தங்காத்திருப்பு என்ற ஊரில் ஒரு கோயில் இருக்கிறது. சித்தன் என்றும் சித்தபரமேட்டி என்றும் பாமரமக்கள் வழக்கில் உள்ளது. "சித்தன் பகவன் தரும முதல்வன்" என்று சிலப்பதிகாரத்துள் நாடுகாண் காதையில் அருகன் திருப்புகழாகக் கூறப்பட்டுள்ளது. இக்கோயிலை சென்ற ஆண்டில் திருத்திக் கட்டியுள்ளார்கள். இறைவன் அருகன் கருங்கல்லில் புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது.

## இலகொளிச் சிலாதலம்

காவிரிப்பூம் பட்டினத்தில் சமண சமயம் சிறப்புற வளர்ந்திருந்தது என்பது சிலப்பதிகாரத் தால் நன்கு விளங்குகிறது. கோவலனும் கண்ணகியும் மதுரைக்குப் புறப்பட்ட போது இல்லத்து நெடுவாயிலைக் கடந்து வெளிப் போந்து சாலையில் நடந்தார்கள். வழியில்"மணி வண்ணன் கோட்டத்தை வலஞ்செயாக் கழிந் தும், அந்தரசாரிகள் அறைந்தனர் சாற்றும் இந்திரன்விகாரம் ஏழுடன் போகியும், முடிவில் சாந்தி ஐந்தும் தம்முடன் கூடி தலைமயங்கிய வான் பெரு மன்றத்து உலக நோன்புகள் ஒருங் குடன் இட்ட **இலகொளிச் சிலாதலம்** தொழுது வலம் கொண்டும்" சென்றனர் என்று குறிக்கப் பட்டுள்ளது. பதிஞேருவரிகளில் இதன் சிறப்பை விளக்கியுள்ளார் இளங்கோவடிகள். இந்தஇடம் இன்று எங்குளது என்று ஆராயுங் கால், இன்றைய மேலையூரில், திருவெண்காடு செல்ல வடக்கில் ஒரு பாதையும், மற்றும் மேலையூரில் இலஞ்சியந்திடல் பக்கமாக வட-கிழக்கு மூலையில் செல்லும் ஒரு பாதையும், நேடுஞ்சாலையில் கிழக்கு மேற்காக நீண்ட பெரு வழியும், திருமஞ்சனவீதி என்ற பெயரில் செங் கழுநீர் ஓடை நோக்கி காவிரிக் கரை வரை செல்லும் தென்புறத்து ஒருபாதையும் ஆக ஐந்து பாதையாகக் கூடுகிற ஒரே இடம் இது ஒன்றே

யாகும். இதுபோல் தருமகுளத்தில் நான்கு சாலைகள் சேரும் இடம் ஒன்று உண்டு.

> மெய்வகை உணர்ந்த விழுமியோர் குழீஇய
> ஐவகை நின்ற அருக தானத்துச்
> சாந்தி ஐந்தும் தம்முடன் கூடி
> வந்து தலைமயங்கிய வான்பெரு மன்றத்து

என்ற சிலப்பதிகார அடிகளுக்குப் பொருந்த அமைந்துள்ளது. அன்றியும் அவ்விடத்து இரண்டு பெரும் கற்கள் நீண்ட உருவில் புதைக் கப்பட்டுள்ளது. அதில் குறிசுளும், சக்கரவடிவ மும் பொறிக்கப்பட்டுள்ளது. இது மிகப்பழமை யானது. இதை காவிரிப்பூம் பட்டினத்தின் எல்லைத் தெய்வம் என்று மக்கள் கருதுகின்றனர். இதன் பெருமையை எண்ண சிலப்பதிகாரத்தில்,

> பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழல்
> நீரணி விழவினும் நெடுந்தேர் விழவினும்
> சாரணர் வரூஉந் தகுதியுண் டாமென
> உலக நோன்பிகள் ஒருங்குடன் இட்ட
> இலகொளிச் சிலாதலம் தொழுது வலங்கொண்டு.

கோவலனும் கண்ணகியும் சென்றதை இளங்கோ வடிகள் வாக்கால் கேட்கின்ற போது அந்த "ஒளிகாலும் கற்பீடம்" இதுவேயாகும் என்று உறுதியாகக் கூறமுடிகிறது. மரங்கள்அடர்ந்த சோலையாகவும் உள்ளது குறிப்பிடத் தக்கது. "ஸ்ரீ கோயிலில் பஞ்சபரமேட்டிகள் நிலைபெற்ற ஐந்து சாந்தியுங்கூடிவந்து, தலைமயங்கியிருக் கின்ற மிகப்பெரிய மன்றிற் பூவையுடைய பிண் டியினது அழகுகிளரும் நிழற்கண்ணே விழஅய ஞதிகளிலும் விழவுகளிலும் ஆகாயசாரிகள் வரத்தகுமென்று சாவகரெல்லாம் கூடியிடப் பட்ட விளங்காநின்ற ஒளியையுடைய சிலாவட் டத்தை இவர்கள் தொழுது வலங்கொண்டென்க" என்று கூறுவர் அடியார்க்கு நல்லார். (சிலப். அடியார் உரை. பக். 268, உ. வெ. சா. பதிப்பு)

"இலகொளிச்சிலாதலம்" வரிக்குத் தரும் விளக்கத்தை நோக்க இவ்விரண்டு கற்கள் அதன் உண்மையை விளக்கும் வகையில் சான்று பகர்வனவாகும். இதுபோன்ற சிலாதலத்தின் வருணனை ஒன்று, பிராகிருத மொழியிலே எழுதப்பெற்ற ஜைனர்களுடைய சமய நூலான ஔபபாதிக சூத்திரத்திலும் காணப்படுகிறது. பூர்ணபத்திரன் (புண்ணபத்த) என்ற யக்ஷனு டைய (சேஇய) சைத்திய ஆலயத்தின் வருண னையாகும்." ஆலயத்தில் மேடைகள் கட்டப் பட்டிருந்தது. பக்தியுடன் சாணமெழுக்கிட்டு உலர்ந்து அழகுடன் விளங்கியது—ஐந்து விரல் களோடு கூடிய கையின் உருவம் இருந்தது. பூஜா கலசங்கள் நிறைந்திருந்தன.——அந்த ஆலயத்தைச் சுற்றிச்சிறிது தூரத்திற்கு உபவனம் இருந்தது. அசோக மரத்தின் அடியிலே மரத்தையொட்டி விசாலமான புடவி சிலாதலம் ஒன்று இருந்தது...... அதன் நீளம் அகலம் உயரம் ஆகியவை முறைப்படி அமைந்து கருமை நிறம் வாய்ந்து...கனமாக வும் வழவழப்பாகவும்,முகம் பார்க்கும் கண்ணுடி போலவும் எட்டு மூலை கொண்டதாகவும், உருவங்கள் வரையப்பட்டு எழில் வாய்ந்து விளங்கியது" என்று விரிவாக விளக்கப் பட்டுள்ளது.[7] பள்ளன்கோயில் செப்பேட்டுச் சாசனத்தில்[8] ஐம்பதாவது வரியில் வரும் "பீடிலிகையும்" என்ற வரிக்கு விளக்கமாக டி. என். சுப்பிரமணியன் அவர்கள் தம் நூலில் விளக்கமாகக் குறித்துள்ளார். புடவி சிலாதலம் என்ற ஜைனர்களுடைய சமய நூலில் குறிக்கப் பட்டுள்ளதற்கும் சிலப்பதிகாரத்தில் மேலே கண்ட சிலாதலத்திற்கும் உள்ள ஒற்றுமை கண்டு உண்மை தெளியலாம்.

இதற்குக் கிழக்கே ஏழாவது பர்லாங்கில் புத்தவிகாரம் இருப்பதை புதைபொருள் ஆய்வாளர் கண்டுபிடித்தபின் இக்கொள்கை வலுவுள்ளதாகிறது. விகாரைக்கு கிழக்கே அடுத்த இரண்டு பர்லாங்கில் ராஜநாராயணப் பெருமாள் கோயில் இருக்கிறது. இதை மணி வண்ணன் கோட்டமாகக் கொண்டு நோக்கின் இளங்கோ கூற்றுப்படி அடுத்து கோவலன் கண்ணகி இல்லம் இருந்திருக்கவேண்டும் என்பது தெளிவாகிறது. இல்லம் விட்டுப் புறப் பட்டவர்கள், மணிவண்ணன் கோட்டத்தை வலஞ்செயாக்கழிந்தும், இந்திரனுல் நிருமித் தனவாகிய ஏழு அரங்காகிய விகாரையைக் கடந்து போகி; இலகொளிச்சிலாதலம் தொழுது வலம் கொண்டு உலக இடை கழியை ஒருங் குடன் நீங்கிச் சென்றனர் என்பது தெளிவாகக் காணக்கிடக்கிறது. அடுத்து;

> "பல்மலர் அடுக்கிய நல்மரப் பந்தர்
> இலவந்திகையின் எயிற்புறம் போகி
> தாழ்பொழில் உடுத்த தன்பதப் பெருவழிக்
> காவிரிவாயில் கடைமுகங் கழிந்து"

குடதிசைகொண்டு கொழும்புனல் காவிரியின் வடபெருங்கோட்டு மலர்ப்பொழிலினுள் நுழைந்து மேற்கே சென்றதாக இளங்கோ வடிகள் கூறியுள்ளார். இவற்றைக்கொண்டு காணின் கழாஅர்த்துறை அன்னுளைய நீராடு துறை என்றும், அதுவே காவிரிவாயில் என்றும் அதன் வடபால் அமைந்த இலேயமடம் என்னும் ஊரே இலவந்திகை என்றும் தெளிவாக விளங் கும். இதுவே மணிமேகலேயுள்ளும், "இலவந் திகையின் எயிற்புறம் போகின், உலக மன்னவ னுழையோ ராங்குளர்" என்று கூறுவதும் காண்க.

## பேசும் பெருமாள் சாத்தனுர்கோயில்

மணிக்கிராமத்தில் பேசும் பெருமாளுக்கு ஒரு சிறு கோயில் உள்ளது. இதில் உள்ள தெய்வ வடிவம், நீண்ட கருங்கல்லில் புடைப்புச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. இது பேசும் இயல்புடையது என்று மக்கள் இன்றும் கூறுகின்றனர். மரத்தடியில் இருந்த கோயிலே இப்போது கற்கோயிலாக கட்டியுள்ளனர். இது சிலப்பதிகாரத்தில் குறிக்கப்படும் மணி வண்ணன் கோயிலாக இருத்தல் கூடுமா என்று ஆராய்தல் வேண்டும்.

## ஐயனுர்கோயில்—நெடுங்கல் நின்ற மன்றம்

வெள்ளேயன் இருப்புக்கும் கடைக்காட்டிற் கும் இடையே உள்ள கோயிலே செருவெட்டி ஐயனுர் என்று மக்கள் வழங்கி வருகின்றனர். இங்கு எந்த உருவிலும் தெய்வம் இல்லே. இரு செங்கற்கள் நடப்பட்டுள்ளன. இது மிகவும் அச்சம் விளேவிக்கும் வகையில் செயல்படுகிறது, என்று மக்கள் நம்புகின்றனர். எனவே தீமை செய்தவர்களேத் தண்டிக்க இங்கு சீட்டு எழுதி கட்டுகிருர்கள். பொய்யாக எழுதிக் கட்டினுல் அவர் துன்புறுவர் என்றும் மக்கள் அனுபவத் தில் கண்ட செய்தியையும் கூறுகின்றனர். இங்கு கொடிய நாகமும் மனிதர்களே ஒன்றும் செய்வதில்லேயாம். இங்கு இயல்பாகவே கோழி கள் வளர்கின்றன. இரவில் பூவரசு மரப்பொந் தில் தங்குகின்றன. பகை விலங்குகளால் இவற்றிற்குத் துன்பம் ஏற்படுவதில்லே. இவற்றை மனதில் கொண்டு நோக்கின்,

> வஞ்சம் உண்டு மயல்பகை உற்ருேர்
> நஞ்சம் உண்டு நடுங்குதுயர் உற்ருேர்
> அழல்வாய் நாகத்து ஆர்எயிறு அழுந்தினர்
> கழல்கண் கூளிக்கடுநவைப் பட்டோர்
> சுழல வந்து தொழத்துயர் நீங்கும்
> நிழல்கால் நெடுங்கல் நின்ற மன்றமும்,
> சிலப். 5-122-27

என்ற சிலப்பதிகாரத்தில் குறிக்கப்படும் இடமாக இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

## இலஞ்சியங்குளம்—இலஞ்சி மன்றம்

இங்குள்ள திடலுக்குப் பெயராக இலஞ் சியந்திடல் என்றும், ஒரு குளத்திற்குப் பெயராக இலஞ்சியங்குளம் என்றும் வழங்கி வருகிறது. இது சாய்க் காட்டிற்கு வடபுறத்தில் உள்ளது.

> கூனும் குறளும் ஊமும் செவிடும்
> அழுகு மெய்யாளரும் முழுகினர் ஆடி
> பழுது இல்காட்சி நல்நிறம் பெற்று
> வலஞ்செயாக் கழியும் இலஞ்சிமன்றமும்
> சிலப். 5-118-21

என்று சிலப்பதிகாரத்தில் குறித்த இலஞ்சி மன்றம் இருந்த இடமாக எண்ணத் தோன்று கிறது. நோயாளர் பழுதில்லாத தோற்றத்தை யுடைய நல்ல நிறம் பெறுகையினுலே தன்னே வலஞ் செய்து தொழுது ஆடி நீங்கும் பொய் கையையுடைய மன்றம் என்பதாலும், இன்றும் இலஞ் சியங்குளம் என்று வழங்கிவருவதாலும் இலஞ்சி மன்றம் இருந்த இடம் இதுவேயாம் என்று தெளிவாகிறது காண்க.

## சம்பாபதி கோயில்

மணிமேகலேயில் சிறப்பாகப் பாராட்டப் பட்டுள்ள சம்பாபதி கோயில் இன்றும் இங்கு இருந்து வருவது குறிப்பிடத் தக்கது. இது சாய்க்காட்டிற்குத் தென்புறத்தில் உள்ளது. இதற்கு, இவ்வூர் மக்கள் அண்மைக் காலம் வரையில் மிகச் சிறப்பாக விழாவெடுத்து வந்தனர். புகாரின் காவல் தெய்வம் என்றும், இதை வணங்குவதால் நாடு செழிப்பும் நலமும் உடையதாகும் என்றும், மக்கள் கருதி வழிபடு கின்றனர். இதன் தென்பால் ஒருபர்லாங்கில் காவிரி ஓடுகிறது. இதனேச் சூழ அமைந்த வயல்களுக்கு பூவனம், உவவனம் என்ற பெயர் கள் வழக்கில் உள்ளது. இங்கு இடுகாடும் உள்ளது. கோயில் பக்கத்தே மிகப் பெரிய,

பழமையான ஆலமரம் உள்ளது. சுண்ணும்புக் காரையால் செய்யப்பட்ட இரு பூத வடிவங்கள் ஆண் பெண்ணுக அமைக்கப் பட்டுள்ளன. இது போல் கோயில் உள்ளேயும் இரு உருவங்கள் ஆண் பெண் வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. சென்ற ஆண்டு இதைபுதைபொருள் ஆய்வாளர் அகழ்ந்து பார்த்தனர். செங்கல்லால் கட்டப் பட்ட கோயில் சிதைந்த வடிவில் உள்ளது. இக்கோயிலும் இருவேறு காலங்களில் கட்டப் பட்டுள்ளதாக காணப்படுகிறது.

### சாய்க்காடு

சாய்க்காடு—சாயாவனம் என்று இன்றும் மக்களால் வழங்கப்பட்டு வருவது குறிப்பிடத் தக்கது.

*செங்நெலஞ் செறுவின் அன்னங் துஞ்சும்*
*பூக்கெழு படப்பைச் சாய்க்காட்டன்ன*
நற்றிணை 73

*நெடுங்கதிர் கழனித் தன்சாய்க் கானம்*
அகம் 220

எனச்சங்கப்பாடல்களில் குறிக்கப்பெற்றுள்ளது. "செந்நெற் கதிர்களை உடைய வயல்களில் அன்னப்பறவை துஞ்சா நிற்கும் பொலிவுபெற்று விளங்கிய கொல்லைகளையுடைய திருச்சாய்க் கானம்" — என்றும் "நீண்ட கதிர்களுடைய — வயல்களையுடைய தண்ணிய சாய்க்கானம்" என்னும் பொருள்படக் குறிக்கப் பெற்றுள்ளது. திருஞானசம்பந்தர் தம் தேவாரத்தில் சாய்க் காடு, புகார் நகரத்தின் ஒரு பகுதி என்பதனை,

*தண்புகார்ச் சாய்க்காட்டெங் தலைவன்,*
*காவிரிப்பூம்பட்டினத்துச் சாய்க்காட்டெம்*
பரமேட்டி

எனவும் குறிப்பிட்டுள்ளார்.

மற்றும்

*பாரார்க்கும் பயில்புகாரிற் பல்லவனீச்சரம்*
*பாரார்க்கின்ற பட்டினத்துப் பல்லவனீச்சரமே*

என்னும் திருப்பாடல் தொடர்களால் இவ்வூர் புகார் நகர எல்லையுள் அமைந்திருந்தது என்பதும் தெளிவாகிறது. பிற்காலச் சோழர்கள் கல்வெட்டிலும் சாய்க்காடு "புகார் நகரத்துச் சாயை", எனவும் குறிக்கப்பட்டுள்ளது. (விக்கிரம சோழனின் ஐந்தாம் ஆட்சியாண்டில் செய்யுள் வடிவில் பொறிக்கப்பட்டுள்ளது கி.பி.1118-1135)

### காசுகளும் மணிகளும்.

புதைபொருள் ஆய்வில் பூம்புகாரைச்சுற்றி ஐந்து மைல் அளவில் கிடைத்துள்ள செப்புக் காசுகளும், பல்வகை வண்ண மணிகளும் பழங் காலத்து கறுப்பு-சிகப்பு ஓடுகளும் பழமையை உணர்த்தப் போதியனவாகும். இவை கி. மு. முதல் நூற்றுண்டு முதல், கி. பி. முதல் நூற்றுண்டுவரை உள்ள கால அளவில் கிடைத் துள்ள சான்றுகளாகும். புலியும் யானையும் பொறிக்கப்பட்ட, சதுர வடிவுடைய செப்பு நாணயங்கள் கி. மு. முதல் நூற்றுண்டு என்றும் கரிகாலன் காலத்திய நாணயம் என்றும் புதை பொருள் ஆராய்ச்சி மெய்ப்பித்துள்ளது. இத் துடன் "பஞ்ச்மார்க்" செய்யப்பெற்ற காசுகளும் கிடைத்துள்ளன. வாலைத்தூக்கியுள்ள நிலையில் புலியின் உருவமும், சில காசுகளில் புலிவடி வோடு நட்சத்திர வடிவமும் பொறிக்கப் பட்டுள்ளது.பல்வேறு அளவில் காசுகள் கிடைத் துள்ளன. பல நிற மணிகளும் கார்நீலியன் வகை மணிகளும் நிறையக் கிடைத்துள்ளன. முதுமக்கள் தாழிகள் புதைவிடங்களும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. புத்த விகாரத்தில் ஒரு பக்கத்தில் புதைகுழியில் மண்டையோடு ஒன்றும் கிடைத்தது. அது ஆராய்ச்சியில் உள்ளது.

உறைக்கிணற்றுப் புறச்சேரி என்று பட்டினப்பாலையில் குறிக்கப்பட்டுள்ளது. இங்கு பல இடங்களில் உறைக்கிணறுகள் கிடைத்துள் ளன. இன்றும் மக்கள் அதையே கிணருகத் தோண்டி வைத்துக்கொண்டு பயன்படுத்து கின்றனர். அழகிய வேலைப்பாடு கொண்டது. கடற்கரை ஓரம் பரதவ மக்கள் பயன்படுத்து கின்றனர். மழைக்காலங்களில் கற்குவியல்கள் உள்ள இடத்திற்கு சென்ருல் காசுகளும் மணி களும் கிடைக்கும். இதனுல் புகார் வரலாற்றில் எவ்வளவோ காணவேண்டியுள்ளது.

முடிவாக ஒன்று சொல்லலாம். புகாரைக் கடல் கொண்டது எந்த அளவு மெய்மை யுடையது என்பது ஆராய்ச்சிக்குரியது. யான் கண்ட சான்று கொண்டு புகார் கடலால் அழிந்தது ஒரு சிறு பகுதிதான் என்றும், பெரும் பகுதி இன்று பூமியில் அழிந்துள்ளது என்றும் சான்றுகாட்ட முடியும். பாண்டியர் படையெடுப் பாலும்,[9] மக்கள் கவனக்குறைவாலும் அழிந்ததே

மிகுதி. பிற்காலச் சோழர்கள் 12-ம் நூற்றுண்டு வரை இங்கு தொடர்பு கொண்டிருந்தனர். கடல் கோளில் புகாரின் கடற்றுறைப்பட்டினம் மேடிட்டு துறைமுகப்பகுதி அழிந்துவிட்டதால் இதனைச் செப்பம் செய்யமுடியாத நிலையில் விடுத்தனர் என்றே கொள்ளவேண்டும்.

இதுவரைஆராய்ந்தவரை புகாரின்பழமையும், இலக்கியங்களில் குறிக்கப்பெறும் சான்றுகள் வலுவடைந்தும், காணப்படுகிறது. புதைபொருள் ஆய்வு மிகக்குறைந்த இடத்தில்தான் நிகழ்த்தப்பெற்றுள்ளது. இன்னும் ஆராய்ந்து காணவேண்டிய இடம் நிறைய உண்டு. அங்கெல்லாம் அகழ்வு வேலை தொடங்கப்பெறின், பயன் உண்டாகும் என்பது உறுதி. வாணகிரி கிராமம் மிகவும் சிறந்த இடம். இங்குதான் நிறைய காசுகளும் மணிகளும் கிடைக்கின்றன. மணிக்கிராமமும் இதற்கு இணையானதே; இங்கு மக்கள் தங்க நாணயம் எடுத்து விற்றுள்ளதாகவும் கூறுகிறுர்கள். மேலும் புதைபொருள் வேலை தொடர்ந்து நடைபெற்ருல் அரிய செய்திகள் வெளிப்படும் என்பது உறுதி.

## மேற்கோள்கள்


1. Indian Archaeology A Review 1962—63 Page No 13. Wparf and remains of wooden poles.

2. Indian Archaeology A Review 1964—65 Page No. 24. Buddha Pada and Buddhist Vihara.

3. *முதன் முதல் கட்டிய விகாரை கி. மு. 300ஐ சார்ந்தது என்பதற்கு உரிய சான்றுகள் கிடைத்தது குறிப்பிடத்தக்கது. கி. மு. 2 அல்லது 1 ஆம் நூற்றுண்டில் நிறுவப்பட்ட "பரோத்" கல்வெட்டுக்களில் காகண்டியில் உள்ளசொர்ணம் பெண் துறவியின் மானியத்தைப் பதிவு செய்துள்ளது. "காகந்தி பிட்சுணி" என்பதாலும் புகாருக்கு காகந்தி என்ற பெயர் இருந்ததும் குறிபிடத்தக்கது. அத்துறவி இங்கிருந்து சென்ற துறவி என்பதும் அக்காலத்தே புகாரில் விகாரம் இருந்தது என்பதும் தெளிவாகிறது. (1800 ஆண்டுக்கு முற்பட்ட தமிழகம் பக்: 47)*

4. *மயிலை. சீனி. வேங்கடசாமி.'பௌத்தமும் தமிழும்' பக். 25; 40, டி. வி. சதாசிவபண்டாரத்தார். 'காவிரிப்பூம்பட்டினம்.' பக்கம். 50-51.*

5. Indian Archaeology. A Review 1963—64 Page No. 20. Reservoir.

6. *அகஸ்டஸ் ஆட்சிக் காலத்திலிருந்து ஜீனோ ஆட்சிக் காலம் வரையுள்ள (கி. மு. 27 முதல் கி. பி. 491 வரை) உரோம நாணயங்கள் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலும் புதையுண்டு கண்டெடுக்கப் பட்டுள்ளன. (வி. கனகசபைப்பிள்ளை. '1800 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்.' பக்கம் 73. கழகவெளியீடு அப்பாத்துரை மொழிபெயர்ப்பு)*

7. *"பல்லவன் செப்பேடுகள் முப்பது" பக். 23-24 விளக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. "யக்ஷர்" என்ற தலைப்பில் ஆனந்த குமாரசாமி ஆங்கிலத்தில் எழுதிய நூலின் முதல் பாகத்தில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ள ஆங்கில மொழி பெயர்ப்பின் தமிழாக்கம் தரப்பட்டுள்ளது.*

8. Pallan kovil Jaina Copper-plate grant of Early Pallava period, by T. N. Subramaniam. Printed from Transactions of the Archaeslogical Society of South India. 1958—'59. Page. 67—68.

9. *"காவிரிப்பூம்பட்டினம்" - தி. வை. சதாசிவ பண்டாரத்தார். பக்கம் 6-7. கி. பி: 1216-1238. மாறவர்மன் சுந்தரபாண்டியன் படையெடுப்பு- பாண்டியர் வரலாறு- பக்கம் 116. பண்டாரத்தார்.*

*103ம்-பக்கம், இரண்டாவது பத்தி, 9-வது வரி: புத்தவிகாரம் உள்ள இடத்தில் முன்னர் நகரத்தார் விடுதி கட்டிய போது பெரிய புத்தர்சிலை (தங்கத்தால் ஆனது) ஒன்று கிடைத்ததாகவும் அதை விற்றே கட்டிடம் கட்டினுர்கள் என்றும் வயதுமுதிர்ந்த பெரியவர்ஒருவர்கூறக்கேட்டேன். மேலையூரில் 1927ல் கண்டெடுக்கப்பட்டு சென்னை மியூசியத்தில் உள்ளது. "மைத்ரேயி" என்ற புத்த உருவம். இதை "மேலையூர் மைத்ரேயி" என்று குறித்துள்ளனர். தங்கமுலாம் பூசப்பெற்றது. கி. பி. 9 என்று டி. என். ராமச்சந்திரனும், கி. பி. 8 ஆம் நூற்றுண்டு என்று பி. ஆர். சீனுவாசனும். கருதுகிறுர்கள்*

Story of Buddism with special reference to South India. By A. Aiyappan & P. R. Srinivasan, Madras museum. Page 79-80.

# மானிடவியல்

# கடன் கோட்டு மக்கம். வட மலபாரின் நாட்டு நடனம்.

கே. கே. என். குருப்.

வட மலபாரின் நிலப்பகுதிக்கு கொளத்த நாடு என்றுபெயர். இது பரம்பரையான நாட்டுப் பண்பாட்டிற்கும் கலைகளுக்கும் பெயர் பெற்றது. 'தெய்யாட்டம்' (தேவராட்டம்) என்ற ஆட்டம் இங்கே ஆடப்படுகிறது. சங்ககாலத்துச் சடங்கு மரபுகளை இவ்வாட்டம் தன்வயப்படுத்தியுள்ளது. கூளி, வீரன், பிராம்மணன், பறையன் முதலிய கதை மாந்தர்களின் ஆட்டங்களைக் குறித்து சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் எழுதியுள்ளார். இவ்வாடல்களை அவர் கோலம்[1] என்ற பெயரால் அழைக்கிறார். நாட்டுப் பண்பாட்டுச் சடங்காகக் 'கோலம்' என்பது இலங்கையிலும் வழங்கிவருகிறது.[2]

தெய்யம் ஆடல் அல்லது கோலம் என்பது அணியும் அழகும் நிறைந்தது. சாதாரண மக்களின் தெய்வ நம்பிக்கையின் வெளிப்பாடாக விளங்குகிறது. கடன்கோட்டுத் தெய்வத்தின் பெயர் மக்கம். மக்கம் என்ற பெயரில் ஓர் ஆட்டம் இருக்கிறது. இவ்வாடல் நாயர் குலத்தைச் சேர்ந்த ஓர் கற்புடைப் பெண்ணின் நினைவைப் போற்ற எழுந்தது. ஒரு சோக நிகழ்ச்சியின் பாத்திரமாக இருந்து, பிற்காலத்தில் மக்களால் தெய்வமாக வணங்கப்பட்டவள் இவள். இந்த நாட்டுத் தெய்வத்தின் வரலாற்றையும் ஆட்ட முறைகளையும், அவைபற்றிய நம்பிக்கைகளையும் இக்கட்டுரையில் விளக்குவேன்.

## இடம்

கொளத்தநாட்டுப் பகுதியில் பகவதிக்கு 'மக்கத்தில் போத்தி' என்ற பெயர் வழங்கி வருகிறது. இத்தெய்வம் அப்பகுதியில் மிகவும் பிரபலமானது, இதற்கென நடைபெறும் விழாவிற்கு 'தெய்யம்' என்பதே பெயர். வீடுகள் இல்லாத திறந்தவெளியில் தெய்யம் நடைபெறும். ஏனெனில் இவ்விழாவை ஓர் வீட்டில் நடத்தினுல் அவ்வீடு அழிந்துபோகும் என்று மக்கள் நம்புகிறுர்கள். குத்துப்பரம்பா, செம்பிலோடு, மாவிலாயி, பிலத்தாரா, குன்ஹிமங்கலம் முதலிய ஊர்களில் 'மக்கம் தெய்யம்' என்ற கிராம தேவதை வழிபடப்படுகிறது. பிள்ளைப் பேற்றை விரும்புகிறவர்கள் தெய்ய ஆடலை நடத்துவார்கள்.

கண்ணனூருக்கு அருகிலுள்ள வெம்பிலோடு என்ற ஊரிலுள்ள 'சாலையில் புதிய வீட்டில்' என்ற கட்டிடத்தில் இத்தெய்யத்தின் 'ஸ்தானம்' அல்லது கோயில் இருக்கிறது. மலையாள சகாப்தம் கும்ப மாதம் 13, 14ந் தேதிகளில் இத்தெய்வத்திற்குக் கொடை நடைபெறும். இவ்வீட்டில் குடியிருப்பவர்கள் கொடை நாட்களின் போது வீட்டைக் காலிசெய்து விடுவார்கள். (காலிவீடுமைதானம் போலாகி விடுகிறதாம்)

## ஆட்டக்காரர்களும் சடங்குகளும்

இத்தெய்யத்தை வண்ணுர்கள் ஆடுகிறுர்கள். இவ்வாட்டத்தில் 'மக்கம்-திரா' என்றும் 'மக்கம் தெய்வம்' என்றும் இருவகைகள் உள்ளன. முதல் வகை ஆட்டம் கண்ணனூரின் தெற்கிலும், இரண்டாவது வகை ஆட்டம் கண்ணனூரின் வடக்கிலும் ஆடப்படுகிறது. அடிப்படையில் இவையிரண்டிற்கும் வேறுபாடு இல்லை. மக்கத்தோடு சேர்த்து அதன் குழந்தைகளான சாத்து, சீரு என்ற தெய்வங்களுக்கும் எடலாபுரம் சாமுண்டி, மயிலான் என்ற தேவதைகளுக்கும்

தெய்யம் எடுக்கிறார்கள். ஆனால் 'ஒத்தக்கோலம்' என்ற விழாவில் மக்கம் தெய்வத்திற்கு மட்டுமே ஆட்டம் நடைபெறும்.

மக்கம் தெய்யத்தின் முடி தென்னோலையின் குருத்தால் பின்னப்படும். இதற்குக் 'குருத் தோலா' என்று பெயர். முடியில் 16 திரிகளும் 6 பந்தங்களும் எரியும். செக்கிமாலைகளால் முடி அலங்காரம் செய்யப்படும். தெய்வத்தின் இடுப்பில் இருந்து ஒரு வாள் தொங்கும். இதற்குச் 'சேதகம்' என்று பெயர். முகம் மஞ்சள், சிவப்பு நிறங்களால் தீற்றப்பட்டிருக்கும், ஆட்டக்காரன் மார்பில் மரத்தால் செய்யப் பட்ட முலைகளைக் கட்டிவிடுவார்கள். ஒவ்வொரு கையிலும் 6 வளைகளும் ஒரு சூடகமும் அவன் அணிந்துகொள்வான். இடுப்பில் அவன் 'வட்டோடா' என்ற ஒட்டியாணம் போன்ற தோர் கலனை அணிந்து கொள்ளுவான்.

மக்கத்தின் மகனான சாத்துவின் உருவம் கடிவனூர் வீரனின் உருவம்போல் தோற்றத்தி லும், அணிகளிலும் இருக்கும். மக்கத்தின் மகளான சீருவை, தாயின் உருவம் போலவே செய்து தாயைப்போலவே அணி செய்வார்கள். ஆனால் முடியிலுள்ள திரிகள், பந்தங்களின் எண்ணிக்கை தாயின் முடியிலுள்ளதை விடக் குறைவாக இருக்கும். சீருவின் முடியில் 6 திரி களும், 4 பந்தங்களும் இருக்கும்.

எடலாபுரம் சாமுண்டி அல்லது பகவதியின் உருவத்தில் மரமுகமூடி முகத்தை மூடியிருக்கும். அம்முகமூடியில் சப்த மாதாக்களின் உருவங்கள் செதுக்கப்பட்டிருக்கும். மக்கத்தின் வட்டமுடி போன்று இதன் முடியிராது. தென்னோலையால் செய்யப்பட்ட கூம்பு வடிவமான முடியை சாமுண்டிக்கு அணிவார்கள். சாமுண்டிக்குப் பந்தங்கள் இல்லை. கையில் ஒரு வாள் இருக்கும்.

மயிலானுக்கு பலநிற ஆடைகளோ, குறிப் பிட்ட அணியோ இல்லை. இனக்குழு மனிதனைப் போல இவனுக்கு ஒரு தடியைக் கையில் கொடுத்திருப்பார்கள். பெண் தெய் வங்களுக்குரிய ஆட்டத்திற்கு 'தோட்டம்' அல்லது 'இளங்கோலம்' அல்லது 'வெள்ளாட்டம்' என்று பெயர். இது மாலையில் தொடங்கும். முடியை அப்பொழுது ஆட்டக்காரன் அணிந்து கொள்ள மாட்டான். ஆனால் 'சுற்றுக்கட்டு' என்ற ஓர் பட்டை இடுப்பைச் சுற்றி அவன் கட்டிக் கொள்ளுவான். ஆரம்பத்தில் பகவதிக்கு தோத்திரப்பாடல்கள் ஜபிப்பார்கள். ஆட்டக் காரன் ஆவேசம்கொண்டு ஆடுவான். கொட்டு முழக்கிற்கேற்ப அவன் ஆடுவான். கொட்டு தவிர சிங்கிகளும், குழலும், ஓபோவும் முழங்கும். நள்ளிரவில் ஆட்டம் முடிவடையும். இதன் பிறகு அவன் முடியணிந்து காலைவரை ஆடுவான்.

கள்ளும், பழங்களும், இளநீரும் தெய்வத் திற்குப் படைக்கப்படும். மக்கம் தெய்யமாக ஆடுபவன் சேவல்களை அறுத்து இரத்தத்தைத் தரையில் தெளிப்பான்.

## கதை

மக்கத்தின் சோகமுடிவுதான் இத்தெய்வத் தின் கதையாகும். குன்னிமங்கலம் என்ற ஊரி லிருந்த கடங்கோட்டுக் குடும்பத்தைச் சேர்ந்த ஓர் நாயர் பெண்ணின் வாழ்க்கை வரலாறே அக்கதை. பன்னிரண்டு சகோதரர்களுக்கு ஒரே தங்கை மக்கம். எல்லா சகோதரர்களும் அவளை நேசித்தனர். தம் கணவர்கள் சகோதரியை நேசிப்பது அவர்களுடைய மனைவியருக்குப் பிடிக்கவில்லை. சகோதர வாஞ்சையைக் கெடுத்து வெறுப்பாக மாற்ற அவர்கள் சமயம் பார்த்திருந்தார்கள். கோலாத்திரி மன்னனின் வீரர்களாக இச்சகோதரர்கள் பணிபுரிந்து வந்தனர். அவர்கள் வீட்டிலிருப்பதில்லை. ஒரு நாள் எம்மன் என்னும் வாணியன் வந்தான். மக்கம் வீட்டிற்கு விலக்கமாயிருந்ததால் வெளியே வராமல் அவனை வீட்டினுள் வந்து எண்ணெய்க் குடத்தை வைத்துவிட்டுப் போகச் சொன்னாள். அவன் வீட்டினுள் ஒரு அறை யினுள் வைத்துவிட்டுப் போனான்.

மக்கத்தின் நாத்திமார்கள் இதைப் பார்த் தார்கள். தம் கணவர்களின் சகோதர வாஞ் சையை அழிக்க இதுவோர் சாக்காகும் எனக் கருதினர். சகோதரர்கள், போர் முடிந்து வீடு வந்தனர். மன்னனால் அச்சன்மார் என்ற பட்டம் பெற்று புகழோடு ஊர் திரும்பினர். தங்களது ஒரே தங்கையைப்பற்றி தம்மனைவிமார்

கூறிய பழியைக் கேட்டனர். அவள் கற்பிழந்தவள் என்றும், அதுவும் விலக்குக் காலத்தில் வாணியனோடு தொடர்பு கொண்டவள் என்றும் தம் மனைவியர் கூறியதைக் கேட்டு வெகுண்டனர். சகோதர பாசம் மறைந்து வெறுப்பு மேலிட்டது.

தமது குலப்பெருமையை நிலைநாட்ட இந்த அவமானத்தைப் போக்க வேண்டுமென முடிவு செய்தனர். தூரத்தில் உள்ள ஒரு கோயிலில் கூத்துப் பார்க்கப் போக அவளையும் அவள் குழந்தையையும் அழைத்தனர். மக்கம் திடீரென்று அவர்கள் கோயிலுக்குப்போக அழைத்ததைக் கண்டு சந்தேகப்பட்டாள். தான் ஒரு குற்றமும் செய்யவில்லை என்று மன்றாடினாள். குன்னிமங்கலத்தில் உள்ள எல்லட்டாத்து பகவதியை வணங்கினாள். அவள் சகோதரர்களோடு கொளத்துவாயிலைத் தாண்டி, பலியப்பட்டம் ஆற்றையும் கடந்தாள். களரிவட்டுக் கல்லில் அவள் முப்பத்தைந்து பரதேவதைகளை வணங்கினாள். தெற்கு நோக்கிவந்து செம்பிலோட்டிலுள்ள சாலைவாயிலை அடைந்தார்கள். மக்கம் களைத்துப் போய் தனது சகோதரர்களைப் பார்த்துக் குழந்தைகளைத் தூக்கிக் கொள்ளச் சொன்னாள். அவர்கள் அவளையே குழந்தைகளை இடுப்பில் வைத்துக்கொள்ளச் சொன்னார்கள்.

சாலைவாயிலில் ஒரு பெரியவீட்டைக் கண்டு மக்கம், உள்ளேபோய் தண்ணீர் கேட்டாள். வீட்டில் இருந்தவர்களிடம் தான்கடன்கோட்டுக் குடும்பத்தைச் சேர்ந்தவள் என்று சொன்னாள். அவர்கள் பால் கொடுத்துக் குடிக்கச் சொன்னார்கள். அவள் மனம் குளிர்ந்து அவர்களுக்குத் தனது நகைகளை அளித்தாள். திரும்பிவந்தால் இவ்வீட்டிற்குவந்து பால்குடிப்பதாக வாக்களித்தாள். சகோதரர்களும் மக்கமும் மேலும் பயணத்தைத் தொடர்ந்தார்கள். காயலோடு என்னும் இடத்திற்கு வந்தார்கள். இங்கு ஆள் நடமாட்டம் இல்லை. ஒரு முஸ்லிம் பள்ளியும் ஒரு கிணறும் அங்கிருந்தன.

மக்கம் நீர் குடிக்கக் கிணற்றுப் பக்கம் போனாள். இவ்விடத்தில் தான் அவளைக்கொலை செய்ய வேண்டும் என்று சகோதரர்கள் தீர்மானித்தார்கள். அவள் நீர் இறைத்துத் தனது குழந்தைகளுக்குக் குடிக்கக் கொடுத்தாள். ஒரு சகோதரன் அவளை நெருங்கி, "பட்டப்பகலில் ஒரு நட்சத்திரம் தெரிகிறதே, பார்த்தாயா"? என்றான். அவள் தலைநிமிர்ந்து வானத்தைப் பார்த்தாள். ஒருவன் வாளை உருவினான், "ஐயோ குழந்தைகளைக் கொல்லாதே" என்று அவள் கதறினாள். ஒருவன் அவளை வெட்டினான். குழந்தைகளின் தலைகளையும் அரிந்து, அவளுடலையும், அவற்றின் உடல்களையும் கிணற்றுள் தள்ளினார்கள். எடலாத்து பகவதியும், மக்கத்தின் ஆன்மாவும் கொட்டியூர் சிவனிடம் சென்றார்கள். சிவன் அவளுக்குப் பகவதி என்று பெயர் கொடுத்து, பிள்ளையில்லாதவர்களுக்கு பிள்ளைவரமளிக்கும் ஆற்றலையும் அருளினார்.

மக்கம் பகவதி சாலையில் புதிய வீட்டினுக்குப்போய் தனக்குக் கோயில் கட்டும்படி ஆணையிட்டாள். கதையின் பின்னுரை கொலை செய்துவிட்டுத் திரும்பிய சகோதரர்கள் பரஸ்பரம் வெட்டிக்கொன்றுகொண்ட நிகழ்ச்சியைக் கூறுகிறது. குன்னிமங்கலத்திற்குத் திரும்பிய சகோதரர்கள் ஒரு அரச மரத்தடியில் உட்கார்ந்து இளைப்பாறினார்கள்.ஒரு சகோதரன் 'அரசமரம் மாதிரிச் செழித்திருந்த தங்கள் குடும்பத்திற்கு கெட்டகாலம் வந்துவிட்டதே' என்று சொல்லி வருந்தினான். ஒவ்வொரு சகோதரனும் அதற்குத்தன்னைத் தவிர பிறர் தான் காரணம் என்று குற்றம் சாட்டினான். தங்கையையும் குழந்தைகளையும் கொன்றதற்கும் அவ்வாறே குற்றம் சாட்டிக்கொண்டு சண்டையிட்டு ஒருவரையொருவர் கொன்று கொண்டார்கள். அரசமரத்தடியிலேயே அவர்கள் மாண்டார்கள்.

### உட்பொருள் விளக்கம்

கற்புடைய மகளிரை வழிபாடு செய்தல் மிகப் பழமையான மரபாகும். கற்புடை மகளிர் தெய்வங்களாகப் போற்றப்பட்டனர். சங்க நூல்களில் கற்புடை மகளிருக்காகச் 'மாசதிக் கற்கள்' நடப்பட்டன என்ற குறிப்புகள் உள்ளன.[3] ஆணும் பெண்ணும் சேர்ந்து ஆடும் துணங்கை என்னும் வழக்கம் இருந்தது. இக்கூத்தை நடுகற்களைச் சுற்றி ஆடுவார்கள். 1500 ஆண்டு பண்பாட்டு முறையைப் பின்பற்றி எழுந்ததே மக்கம் தெய்யத்தின் வழிபாடும்; ஆட்டமும், நடுகல் வழிபாட்டுக்குப் பதில்

அவர்களைத் தெய்வமாக்கி, தெய்ய ஆட்டங்களை ஆடி வழிபடுவது பிற்காலத்தில் தோன்றியது.

'கிளிப்பாட்டு' என்ற வகைப் பாடல்களில் இக்கதைப் பாடப்படுகிறது. இவை நாட்டுப் பாடல்கள். கேரள நாட்டுப் பண்பாட்டியல் ஆராய்ச்சியாளர் டாக்டர் செலநாட்டு அச்சுத மேனன், மக்கத்தைக் கேரளத்துக் கண்ணகி என்று குறிப்பிட்டுள்ளார். மேலும், "மலையாள மொழியில் ஓர் இளங்கோவடிகள் பிறந்திருந்தால், அவர் மக்கம் சாவு பற்றியதோர் காவியத்தைப் பாடியிருப்பார்" என்று கூறுகிறார்.

'மக்கம்' கதை பெண்வழி உரிமைக் கூட்டு குடும்பத்தின் தெளிவான சித்திரத்தை அளிக்கிறது. சகோதரர்கள், சகோதரியையும், அவளுடைய குழந்தைகளையும் நேசிப்பதைப்பார்த்து மனைவிமார் பொறாமை கொள்ளுகிறார்கள். பரம்பரையாக தனதுகணவன் குடும்பத்தை விட கேரளத்தில் பெண்கள்தான் பிறந்த குடும்பத்தை நம்பியேஅந்தஸ்தோடு வாழமுடியும். தனிஉணர்வுகளை விடக் குடும்ப கௌரவம் சகோதரர்களால் மதிக்கப்படுகிறது. தங்கள் காலக்கற்பு பற்றியும், குடும்ப மதிப்பு பற்றியும் நிலவியிருந்த சமூகக் கருத்துக்கள், ஒழுக்க மதிப்புகளுக்கு இச்சகோதரர்கள் உட்பட்டவர்களே. தங்கள் மனைவியரின் கொடுஞ்சதிக்கு, இவர்கள் சமூகக் கருத்துக்களுக்குப் பணிந்து உடன்பட்டார்கள். ஓர்சிறிய கிராமத்தில் நடைபெற்ற இந்நிகழ்ச்சி இன்றும்நாட்டுப்பண்பாட்டு வழிவழிப் பரப்புதல் மூலம் நாடுமுழுவதும் பிரபலமடைந்துவிட்டது.

### அடிக்குறிப்புக்கள்

1. பார்ரோவும் எமனேவும், D. E. D. *1885* கொல்லம்
2. எம். டி. ராகவன். இலங்கை வரலாறு, சமுதாயம் பண்பாடுகளில் இந்தியா. *(புதிய டில்லி 1964)* பக்கம் *129.*
3. பொருள் *60*
4. டாக்டர் சி. அச்சுதமேனன். பிரதட்சிணம் பக். *23*

---

# சோவியத் ஆராச்சிக் கழகங்களில் தமிழ்-திராவிட மொழிகளில் ஆய்வுகள்.

நா. வானமாமலை

சோவியத் ஆராய்ச்சியாளர்கள் திராவிட மொழிகளை—முக்கியமாகத் தமிழ்மொழியை—நவீன மொழியியல் ஆய்வு முறைகளைக் கையாண்டு ஆராய்ந்து வருகிறார்கள். சோவியத் விஞ்ஞானக் கழகத்தின் இந்தியவியல் பிரிவில் கடந்த 10-15 ஆண்டுகளில், பல இந்திய மொழிகளின் இலக்கணம், மொழியியல், மொழி வரலாறு, ஒப்பியல் மொழி ஆராய்ச்சி முதலிய துறைகளில் ஆய்வுகள் நடத்தி வருகிறார்கள். பல ஆய்வுக்கட்டுரைகளை வெளியிட்டுள்ளார்கள். அம்மொழிகள், அஸ்ஸாமீஸ், ஒரியா, பஞ்சாபி, லஹ்ண்டா, சிந்தி, நேபாலி, மராதி. காஷ்மீரி, தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், சந்தாலி, நெவாரி முதலியனவாகும். இவ்வாராய்ச்சிகள் 1) ஆசிய மக்கள் பண்பாட்டு ஆராய்ச்சிக் கழகத்தின் இந்தியப் பிரிவு 2) மாஸ்கோ பல்கலைக் கழகத்தின் கீழ்த்திசை மொழிகள் பிரிவு 3) சோவியத் அயல்நாட்டு அமைச்சரகத்தின் அயல் மொழிகள் பிரிவு 4) லெனின் கிராடுப் பல்கலைக் கழகத்தின் கீழ்த்திசை மொழிகள் பிரிவு. 5) தாஷ்கெண்ட் பல்கலைக் கழகத்தின் கீழ்த்திசை மொழிகள் பிரிவு—முதலிய நிறுவனங்களின் ஆதரவில் நடைபெறுகின்றன.

இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர் திராவிட மொழிகளைப் பற்றிய ஆய்வுகள் பல சோவியத் கல்வி நிறுவனங்களில் அதிகமாயிற்று. திராவிட மொழிகளின் இலக்கிய வழக்கிலும், பேச்சு வழக்கிலும் சோவியத் ஆய்வாளர்கள் கவனம் செலுத்துகிறார்கள். 1958-59ல் சோவியத் மொழி இயலாளர் ஆந்த்ரனுவ் பேச்சுத் தமிழைக்கற்றுக்கொண்டு ஆராய்வதற்காகச் சென்னைக்கு வந்தார்.

கிரீர்ஸன், கோனுவ் என்ற மேல்நாட்டு ஆய்வாளர்கள், பேச்சுத் தமிழ் கொச்சையான பல வட்டார வழக்குகளின் தொகுப்பு என்றும் பண்டையத்தமிழ் என்ற செந்தமிழே விஞ்ஞானத்தையும், பண்பாட்டையும் வெளியிட வல்ல மொழியென்றும் எழுதினார்கள். அவர்களுடைய கூற்றை ஆதாரமற்றதென ஆந்த்ரனுவ் மறுத்தார். தமிழ் வட்டார வழக்குகளை ஒன்றுபடுத்தி, தற்காலத்தில் எல்லா வகையான சிந்தனை வெளியீடுகளுக்கும் ஒரு தேசியத் தமிழ் மொழியைப் பேச்சு வழக்கில் தமிழர்கள் உருவாக்கி வருவதை ஆந்த்ரனுவ் நிருபித்தார். தற்காலத் தமிழின் இலக்கண உருவங்கள், பண்டைத் தமிழ் இலக்கியங்களின் இலக்கண உருவங்களோடு ஒத்திருக்கவில்லை யென்பதால் தற்கால வழக்கு பண்பட்டதன்று, கொச்சையானது, கீழ்த்தரமானது என்று கூறவியலாது என்று ஆந்த்ரனுவ் கூறினார். இன்று படித்த பண்பாடுடைய தமிழர்கள் பேச்சு வழக்கிலேயே தங்கள் சிந்தனைகளை எல்லாத் துறைகளிலும் வெளியிட்டு வருகிறார்கள். புறநானூற்றுத் தமிழில் சினிமாவிலோ, நாடகத்திலோ, நாவல்களிலோ உரையாடல்களை எழுத முடியாது. பண்டையத் தமிழில் தற்கால அறிவியல் பற்றியோ, அரசியல் பற்றியோ பேசமுடியாது. ஆயினும் தமிழர்கள் தற்கால விஞ்ஞான, அரசியல், சமூக வளர்ச்சி பற்றி பேச்சுத்தமிழில் தான் பேசுகிறார்கள். பண்டைத் தமிழ் சொல் வழக்கும், இலக்கண வழக்கும் தமிழர்களது தற்காலப் பேச்சுக்களிலிருந்து மறைந்து வருகிறது. பண்பாட்டு வளர்ச்சியும், ஒற்றுமையும், வட்டார வழக்குகளின் வித்தியாசங்களைக் குறைத்து வருகிறது. சில இலக்கணமாறுதல்களோடு, தமிழ்நாடு முழுவதற்கும் பொதுவான

ஒரு பொதுப் பேச்சுத்தமிழ் உருவாகிவருகிறது. தமது ஆய்வுகள் மூலம் ஆந்த்ரனுவ் இதனை வலியுறுத்தினர்,

திராவிட மொழிகளில் பல ஆய்வாளர்கள் தமிழுக்கே முக்கியமான கவனம் செலுத்துகிருர்கள். கிளாஸாவ் திருக்குறள், புறநானூறு இரண்டு நூல்களையும், வருணிப்புப் பகுத்தாய்வு (Descriptive analysis) செய்தார். இதனை அவர் கமில் சுவலபிலோடு கூட்டாகச்செய்தார். தமிழ் மொழியின் வரலாற்று இலக்கணம் எழுதத் திட்டமிட்டு கமில் சுவலபில்லும், ஆந்த்ரனுவும் அதனைச் செய்து முடித்தார்கள். அதற்குமுன் தமிழ் வரலாற்று இலக்கணம் பற்றிப் பல கட்டுரைகளை ஆந்த்ரனுவ் எழுதினர். கால விகுதிகள் பற்றி ஆந்த்ரனுவ் ஆராய்ந்தார். அவற்றில் நிகழ்காலம் பற்றிய அவருடைய ஆய்வுகள் முக்கியமானவை.

தமிழில் பயன்பாடுபற்றிய சொற்பாகுபாட்டை (Parts of speech) ருதின் ஆராய்ந்தார். அவற்றைப்பல சிக்கலான தேர்வுத் தகுதிகளை அடிப்படையாகக் கொண்டு பாகுபடுத்த வேண்டும் என்று எழுதினர். சொல்லமைப்பு, சொற்களின் இணைப்பு, சொற்பொருள் இவை யாவையும் கவனித்துச் சொற்களின் பயன்பாட்டைப் பாகுபாடு செய்தல் வேண்டுமெனக் கூறினர்.

ஆந்த்ரனுவ் தற்காலத் தமிழ் மொழியின் இலக்கணம் ஒன்றை எழுதி வெளியிட்டுள்ளார். இதற்காக அவர் காலவாரியாக இலக்கியங்களிலுள்ள மொழிஅமைப்பை ஆராய்ந்து, தற்காலப் பேச்சு வழக்கோடு ஒப்பிட்டு தற்கால மொழி இயல் விதிகளுக்கேற்ப தமிழ் இலக்கணம் எழுதியுள்ளார்.

தமிழ் மொழியோடு ஒப்பிட்டு கன்னடம், தெலுங்கு, மலையாளம், பிராஹுயி முதலிய மொழிகளும் ஆராயப் படுகின்றன. சிறப்பான சில அம்சங்களும், மொழிவரலாறும் ஆராயப் பட்டுள்ளன. தெலுங்கு இலக்கியமொழியில் நூல்வழக்கையும், (கிரந்திக) பேச்சுவழக்கையும் தற்காலத்தில் நாவல் ஆசிரியர்கள் எப்படித் தொடர்பு படுத்துகிருர்கள் என்பதை பெத்ருனிச் சேவா ஆராய்ந்துள்ளார். தெலுங்கு மொழியில் கூட்டுவினைச் சொற்களின் அமைப்பு பற்றி ட்ஷெனிட், குராவ்என்ற ஆய்வாளர் ஆராய்ந்து கட்டுரைகள் எழுதியுள்ளார். டாஷ்டகோ என்னும் ஆய்வாளர் கன்னட மொழியில் தன்மை, படர்க்கை வினைமுற்றுக்களின் அமைப்பு பற்றி ஆராய்ந்துள்ளார்.

பத்தொன்பது திராவிட மொழிகளின் மொழியியலை ஒப்பிட்டு ஆராய்ந்து 'திராவிட மொழிகள்' என்ற ஓர் ஆய்வு நூலை ஆந்த்ரனுவ் வெளியிட்டார். அம்மொழிகளாவன: தமிழ், மலையாளம், கோத்தா, தோடா, கன்னடம், கொடகு, துளு, தெலுங்கு, கொலாகி, நய்கி, பார்ஜி, கடபா, கொண்டி, கொண்டா, குயி, குவி, குருஹ், மால்டோ, பிராஹுயி. இதற்கு முன் இவ்வளவு விரிவான ஒப்பியல் ஆராய்ச்சியை மேனுட்டார் எவரும் மேற்கொண்டதில்லை. திராவிட மொழிகளின் பொது ஒற்றுமைகளையும், திராவிட முற்காலப் பொது மொழி ஒன்றின் சிதைவின் விளைவாக திராவிட மொழிகள் பல தோன்றிய வரலாற்றையும் ஆந்த்ரனுவ் வெளிப் படுத்தியுள்ளார்.

திராவிட மொழிகளுக்கும், இந்தோ-ஐரோப்பிய மொழிகள், துருக்கியமொழிகள், யூரலிக் மொழிகள் ஆகிய மொழிக் குடும்பங்களுக்கும் இடையே உள்ள தொடர்புகளையும், ஒற்றுமை—வேற்றுமைகளையும், சோவியத் திராவிட இயலார் ஆராய்ந்துள்ளனர். வோரேபியேவ், டெஸியடாவ்ஸ்கி என்ற ஆய்வாளர்கள் இந்திய ஆரிய மொழிகளுக்கும், திராவிட மொழிகளுக்கும் இடையே உள்ள தொடர்புகளை ஆராய்ந்துள்ளார். திராவிட மொழிகளுக்கும் துருக்கிய மொழிகளுக்கும் இடையேயுள்ள வகை-ஒற்றுமைகளை கீரின்பர்க் என்ற அமெரிக்க ஆய்வாளர் ஆராய்ந்தார். அவருடைய ஆராய்ச்சிகளை விமர்சித்து கிளாஸாவ் ஒரு புதிய கொள்கையை உருவாக்கினர். தமக்குமுன் பல ஆய்வாளர்கள் செய்துள்ள ஆராய்ச்சி முடிவுகளை ஆராய்ந்து இலியிச் ஸ்விடிச் என்ற சோவியத் ஆய்வாளர் ஒரு கொள்கையை உருவாக்கியுள்ளார். உலகின் முக்கிய மொழிக் குடும்பங்களின் மொழிகளிலுள்ள அகராதிகளில் காணப்படும் சொற்பொருள் ஒற்றுமைகளை ஆராய்ந்து அவர் திராவிட, இந்தோ ஐரோப்பிய, யூரலிக், கார்த்வெல், செமிடிக் மொழிகள் 'நாஸ்டிராடிக் மொழிக் குடும்பம்' என்ற பொதுமொழிக் குடும்பத்தைச்

சேர்ந்த சிறுகுடும்பங்கள் என்ற கருத்தை வெளியிட்டார். ஆந்திரனுவ், திராவிட, இந்தோ ஆரிய மொழிகளை ஒப்பிட்டும், திராவிட, யூரா லிக் மொழிகளை ஒப்பிட்டும், இம்மொழிகளின் ஒற்றுமைக் கூறுகளுக்கு வரலாற்றுப் போக்கான வளர்ச்சிகளும் தொடர்புகளுமே காரணம் என்று வலியுறுத்தினுர். பேச்சுக்கு வெளியீட்டுப் பயன்பாடே முக்கியமாதலால், ஒற்றுமைகள் தோன்றி, படிப்படியாக வலுவுறவோ, வலுக் குறையவோ செய்யும் என்று ஆந்திரனுவ் கருதினுர்.

தற்காலத்தில் லெனின்கிராடிலுள்ள மொழியியலார், கணிதவியலார், வரலாற்றியலார் ஆகிய துறைகளின் ஆய்வாளர்கள் சிந்து சமவெளி அடையாளங்களை ஆராய்ந்து வருகிறுர்கள். இது திராவிட மொழியியலோடு தொடர்புடையது. அடையாளங்களையும், எழுத்துக்களையும் எலெக்ட்ரானிக் கம்ப்யூட்டர் மூலம் ஆராய்ந்து, வகை இயலில் இம்மொழி திராவிட மொழிகளின் குடும்பத்தோடு ஒற்றுமையுடைய தென் லெனின்கிராடு ஆய்வாளர்கள் கருதுகிறுர்கள்.

அண்மையில் சோவியத் ஆய்வாளர் வேறு பல இந்திய மொழிகளையும், திபெத்திய, பர்மிய, மான்க்மெர் மொழிகளையும் ஆராய்கிறுர்கள். தென்கிழக்காசிய மொழிகள் பலவற்றை லெக்காம்ஸேவ் ஆராய்கிறுர். முண்டா மொழிகள் பலவற்றை அவர் ஆராய்ந்துள்ளார். சந்தாலி மொழியின் சொற்ருெடர் இலக்கண விதிகளை ஆராய்ந்து அவற்றின் தனித்தன்மையைப் புலப்படுத்தியுள்ளார். இவர் முண்டா, சந்தாலி மொழிகளைப்பற்றிய ஆராய்ச்சியின் சுருக்கங்களைப் புலப்படுத்தியுள்ளார். திபேத்திய பர்மிய மொழிகளின் தொடர்புகளை கொரலேவ் ஆராய்கிறுர். இவ்விரண்டு மொழிகளோடும் தொடர்புடைய பலமொழிகளை அவர் கற்றுவருகிறுர். இவற்ருேடு தொடர்புடைய பல இந்தியமொழிகள் உள்ளன. அவற்றுள் ஒன்று அஸ்ஸாமிய மொழி.

வருங்காலத்தில் இந்திய மொழிகளைப்பற்றி ஆய்வுகள் சோவியத் பல்கலைக் கழகங்களில் பெரிதும் விரிவடையும் என்று எதிர்பார்க்கலாம்.

நாமும் நமது பல்கலைக் கழகங்களில் ரஷிய மொழியையும், சோவியத் நாட்டில் வழங்கும் மொழிகளையும் கற்றுத்தரவேண்டும்.

## ஆதாரங்கள்


1 Soviet Studies of India-Soviet booklets 1969.

2 Fifty years of Soviet Indology-Academy of Sciences. Inst. of Peoples of Asia-Moscow.

3 Souvenir of the Indo-Soviet cultural Society, Madras State Branch.

4 M. S. Andronov-Introduction of Dravidian languages,

5 M. S. Andronov-A descriptive grammar of literary and spoken Tamil.

6 Special materials supplied by the Information Department of U, S. S. R. Consulate General in Madras.

7 Studies in Indian literature- E. P. Chelyshev.

8 On the Translation of Indian literature in U. S. S. R. E. P. Chelyshev.

9 Studies in Indian languages M.S. Andronov

# மாஸ்கோவில் திருக்குறள்.

டாக்டர். தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்.

பல்கலைக்கழக நிதிக்குழுவின் சார்பில் நான் ஓர் பண்பாட்டுக் குழுவின் உறுப்பினனாக சோவியத் யூனியனுக்குச் சென்றேன். அங்கு ஓர் வாடகைக்காரில் ஏறினேன். எனது நண்பர்களுக்காகச் சிறிதுநேரம் காரிலேயே காத்திருந்தேன். கார் டிரைவர் எனது கரிய நிறத்தைக் கவனித்தார். சோவியத் மக்கள் நிறமுடையவர்களிடம் இயல்பாகவே அதிக அன்பு காட்டுகிறார்கள். அதிகக் கருப்பாக இருப்பவர்களிடமும் அதிக அன்பு காட்டுகிறார்கள். எங்கள் டிரைவர் நான் ஆப்பிரிக்க வாசியென்று எண்ணியிருக்க வேண்டும். நான் இந்தியன் என்று கூறியதும் அவரது முகம் மலர்ந்தது. அவர் காந்தியும்,நேருவும் பிறந்த நாடு என்று ஞாபகப் படுத்தி கொண்டிருக்க வேண்டும். இருப்பினும் அவருடைய ஆர்வம் திருப்தியடையவில்லை. அவருக்கு இந்தியாவைப் பற்றித் தெரியும். எனவே என்னிடம் பல கேள்விகள் கேட்டார். அவருக்குத் தெரியாது என்றெண்ணி நான் தமிழ்நாடு இந்தியாவின் தென்பகுதியில்உள்ளது என்று சொன்னேன். அவருடைய சந்தோஷம் அதிகமாயிற்று. தெரிந்த விஷயத்தை மேலும் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் கேள்விகள் கேட்டார். குறள் உலகத்தின் பைபிள் என்று, நான் பெருமைப் படுவதுண்டு. அவர் "திருவள்ளுவரையும் குறளையும் பற்றித் தெரியுமா?" என்று என்னைக் கேட்டார். நான் தமிழ்ப் பேராசிரியர் என்பது அவருக்குத் தெரியாது. அது ஒரு சிறப்பான நூலென்றும், வீட்டு விஷயங்களிலிருந்து, சர்வதேசிய விஷயங்கள் வரை, இன்று நம்மை நோக்கியுள்ள பிரச்சனைகளையெல்லாம் பற்றிக் கூறுகிறதென்றும் அவர் விளக்கினார். யாரோ சொல்லி இவற்றையெல்லாம் அவர் கூறவில்லை. தானே தினம் இரண்டு குறள்களைப் படிப்பதாகச் சொன்னார். இந்த நிகழ்ச்சியை என்னால் மறக்கவே முடியாது. சொற்ப சம்பளம் பெறுகிற கீழ்நிலை ஊழியரான அவருடைய அறிவைக் கண்டு, அவருடைய நாட்டின் பெருமையை நான் உணர்ந்து கொண்டேன். இந்நிகழ்ச்சிக்குப் பின் இந்தியாவில் அதிலும் குறிப்பாகத் தமிழ் நாட்டில் படித்தவர்களில் கூட எத்தனைபேர் குறளைப் படித்திருப்பார்கள் அல்லது கேள்விப் பட்டிருப்பார்கள் என்று சிந்திக்காமல் இருக்க முடியவில்லை. மாஸ்கோவில் வாழும் பூர்ணம் சோமசுந்தரம், மாஸ்கோவில் உள்ள ஒரு அகெடமெஷியன் (ஒரு ஆய்வுப்பேராசிரியர்) தினந்தோறும் ஒரு குறட்பாவைப் படித்துச் சிந்திப்பதாகவும், அது எப்படி உலகில் வாழும் ஒவ்வொரு மனிதனுக்காகவும் எழுதப்பட்டிருக்கிறது என்று வியந்து கூறியதாகவும் சொன்னார்.

புகழ்பெற்ற அகெதெமிஷியனிலிருந்து, கார் டிரைவர் வரை அந்நாட்டில் குறளைப் படிக்கிறார்கள். அறிவுலகம் பரந்து, ஒழுக்கத்தின்பால் ஈடுபாடுகொண்டு, ஒரு சிறந்த நூலாசிரியரோடு நேரடித் தொடர்பு கொண்டு ஒரு வளமிக்க ஆன்மீக வாழ்க்கையை உருவாக்கிக் கொள்ள வேண்டுமென்ற ஆர்வமே அவர்களைப் பிறநாட்டு நல்லாசிரியர் நூல்களைக் கற்றறியத் தூண்டுகிறது. உலகப் பண்பாட்டின் சிறந்த அம்சங்களையெல்லாம் பலநாட்டு அறிஞர்களது நூல்களைக் கற்று அவர்கள் அறிந்து கொள்ளுகிறார்கள். தற்காலப் போரிடும் உலகில், உலகப் பேரறிஞர்களது சிறந்த நூல்களைக் கற்று, அவர்களது மனிதநேசத்தை தம்வயப் படுத்திக் கொள்ளுவதில் எவ்வளவு உயர்ந்த மனநிலையை இம்மக்கள் அடைகிறார்கள் என்று நினைத்துப் பார்த்தேன். "எளிய வாழ்க்கை, உயர்ந்த சிந்தனை" என்ற ஆங்கிலப் பழமொழிக்கேற்ப இவர்கள் வாழ்கிறார்கள் என்று எனக்குத் தோன்றியது. பரந்த அடிப்படையில் உருவான உள்ளப் பண்பாடு இவர்களிடம் உள்ளது. மற்ற நிலைகள் எப்படியிருப்பினும் இது ஒன்றே அவர்களுக்குச் சிறப்பையளிக்கவில்லையா?

இப்பொழுது பெர்ட்ராண்டு ரஸ்ஸல் கூறியதை நான் நினைத்துக்கொண்டேன்.அவர் சோவியத் ரஷ்யாவிற்குச் சென்று திரும்பியதும் தத்துவஞானி காண்டின் (Kant) நூல்களை 10

லட்சம் பிரதிகள் அச்சிட்டு விற்றுவிடுகிற ஒரு அரசும், மக்களும் ஏதோ ஓர் அற்புதமான உயிர்த்துடிப்புடையவர்களாகவே இருத்தல் வேண்டும் என்று கூறினர். ஏனெனில் அவர்கள் போற்றுகிற மார்க்ஸ், லெனின் இவர்களுடைய தத்துவத்திற்கு கான்டின் தத்துவம் நேர் முரணுனது. இதுவே அந்நாட்டு மக்களின் பரந்த பண்பாட்டிற்குச் சான்ருக விளங்குகிறது.

இதை மனதில் கொண்டே நான்,தமிழர்கள் எளிதில் புரிந்துகொள்ளக்கூடிய சில பண்பாட்டுக் கூறுகளைக் கண்டறிய தேடிக்கொண்டிருந்தேன். எனவே லட்சக்கணக்கில் உலகில் சிறந்த ஆசிரியர்களது நூல்கள் வெளியிடப்படுவதையோ,அவையனைத்தும் சிலவாரங்களில் விற்றுப்போய்விடுவதையோ, நான் முக்கியப் படுத்திச் சொல்ல விரும்பவில்லை. டிக்கன்ஸின் நாவல்கள் லட்சக்கணக்கில் விற்கப்பட்டன என்று நான் கேள்விப்பட்டேன். இன்றும் பலர் புத்தகம் வாங்க விரும்புகிருர்கள். ஆனுல் புத்தகங்கள் கிடைக்கவில்லை. டிக்கன்ஸின் நாவல்களில் தற்காலத்தைக் குறித்த சிந்தனைகள் ஏவையும் இல்லையெனினும் அவருடைய நகைச்சுவை, பாத்திரப்படைப்பின் கலைத்திறன் ஆகியவை என்றும் அழியாமல் ஆர்வமூட்டுகிற தன்மையுடையன, என்று சோவியத் வாசகர்கள் கருதுகின்றனர். பிக்விக், மிக்காபர் ஆகிய பாத்திரங்களைப்பற்றி ரஷ்யர்கள் விவாதிக்கிருர்கள். நம்நாட்டில் ஆங்கிலம் படித்தவர்களுக்கு இத்தகைய இலக்கிய அறிவும் விமர்சனத் தகுதியும் இருக்கின்றனவா?“யாதும் ஊரே, யாவரும் கேளிர்” என்ற உயர்ந்த நெறியைப் போற்றிய பண்டைப்புலவர் வழித்தோன்றல்களான நம்முடைய இன்றையக் கல்வி முறையில் என்ன குறைபாடு இருக்கிறதென்று நாம் கண்டறிய வேண்டும். இதுபோகட்டும் சோவியத் நகரங்களின் பூங்காக்களில் புத்தக அலமாரிகள் உள்ளன. அங்கு புதிய புதிய புத்தகங்கள் விலைக்குக் கிடைக்கும். விலையும் குறைவு. தொழிலாளிகள் அப்புத்தகங்களை வாங்குகிருர்கள். தமிழ்ப்புத்தகங்களைப் பற்றிச் சொல்ல வேண்டும். கல்கியின் நாவல் ஒன்று 50,000 பிரதிகள் சில வாரங்களில் செலவாயிற்று என்று கேள்விப்பட்டேன். இதனை சொற்ப எழுத்தறிவுடையவனும் படித்துவிடலாம். இந்தப்புத்தகத்தைப் போலவே எளிதில் விளங்காத குறளின் மொழிபெயர்ப்பும் ஆயிரக்கணக்கில் சில வாரங்களில் விற்றுபோய்விட்டதாம். இந்தப் புத்தகங்களையெல்லாம் ருதின், ஆந்த்ரனுவ் போன்ற தமிழ் ஆராய்ச்சியாளர்கள் மட்டுமா வாங்குகிருர்கள்?அல்லது மிகவும் படித்தவர்கள் மட்டுமா வாங்குகிருர்கள்? இல்லை. எங்களுடைய கார் டிரைவர் குறளை வாங்கிப்படித்திருக்கிருர். அவர் ரஷ்ய மொழிபெயர்பைத்தான் படித்திருப்பார். அம்மொழிபெயர்ப்பைப்பற்றி சோவியத் தமிழ்ப் பேராசிரியர்களுக்கு அவ்வளவாகத் திருப்தி இல்லை. சீக்கிரத்தில் இன்னும் ஓர் புதிய செய்யுள் வடிவிலான மொழிபெயர்ப்பை வெளியிடப்போகிருர்கள். தமிழ்நாட்டில் இத்தனை பிரதிகள் குறளை வெளியிட்டால், சில வாரங்களில் விற்றுப்போகுமா? பல வருஷங்களிலாவது இவ்வளவு எண்ணிக்கையில் குறளை விற்றுவிடமுடியுமா? என்று நீங்கள் சிந்தித்துப்பார்க்க வேண்டும்.

தமிழர்கள் தமிழ்ப் பண்பாடு பற்றியும், தமிழ்மொழியைப் பற்றியும் பெருமை கொண்டிருப்பது நியாயமே. பிறமொழிகளைப் பற்றியும், பண்பாடுகளைப் பற்றியும் நமக்குத் தெரியுமா என்பதை யோசித்துப் பார்க்க வேண்டாம். தமிழை மட்டுமே எடுத்துக் கொள்ளுவோம். சோவியத் மக்களையும், சோவியத் அரசையும் போல நாம் பண்பாட்டை வளர்க்கிறேமா? நாம் இன்னும் வெகுதூரம் முயன்று உயர வேண்டியுள்ளது. நாம் திருப்தியடைந்துவிடக் காரணமில்லை. உலகநாடுகள் நம்மைப் பொருளாதார முற்றுகைக்கு உள்ளாக்கிய போது நமக்கு சோவியத் நாடு அளித்த வியத்தகு உதவியை மட்டுமின்றி அவர்கள் நமக்களிக்கும் பண்பாட்டு உதவி பற்றியும் நாம் அவர்களோடு செய்துகொண்ட சமாதான ஒத்துழைப்பு ஒப்பந்தம் நமக்கு நினைவூட்டுமாக.

---

# Excavations at Pumpuhar.

Dr. K. V. Raman

Kaveripumpattinam or Pumpuhar, the celebrated port city of the Early Cholas, is now an insignificant fisherman's hamlet on the eastern coast of Tamilnad, where the River Kaveri joins the sea. Its flourishing commerce, its well-planned lay-out, beautiful mansions, the harbour area, the religious centres etc., are all eulogised in early Tamil works like the **Silappadikaram** the **Manimekhalai** and the **Pattinappalai**. The latter work gives graphic descriptions of the gay inhabitants of the area and their noble traits; the foreign merchants like the Yavanas (Greeco-Romans), who lived there for trade purposes; the artisans from places like Avanti and Ujjaini in upper India etc. The presence of temples for Siva, Vishnu, Balarama, Muruga as well as the Jain and Buddhist monasteries is attested by the works. According to the **Manimekhalai**, Goddess Champapati was the guardian deity of the city and indeed of the Jambudvipa as a whole (Jambudvia-Kavardhaivam). She was venerated by all the people, as She was the "Grand old Lady" or Thonmudatti, as the epic mentions. There is now an old and dilapidated brick temple at Kaveripumpattinam dedicated to Champapati. The foreign notices on Kaveripumpattinam are illuminating. There is reference in the **Periplus** to the two capitals of the Cholas in the region inland called Argaru (Uraiyur), and 'the coast country which lies on a bay', the latter obviously referring to the port city or the Pattinam. Ptolemy is more specific and he refers to the city as the 'Kaberis Emporion,'.

The early Prakrit literature of the Buddhists make references to the city. **The Question of King Milinda** a work of the beginning of the Christian era, refers to this city as Kolapattana, one of the best known ports of the times. In the Buddhist Jataka story, a certain Akitti is said to have settled down in one of the gardens near kaveripumpattinam.

But this great city, according to the **Manimekhalai**, was destroyed by the sea during the time of the Chola King Ilam Killi. The epic says that the Chola king had lost his son and, in his great grief, he forgot to celebrate the annual Indra festival. This enraged Goddess Manimekhalai who cursed the city to be swallowed. (**Ani Nagar Tannai Alaikadal Kolga**). Though this reference is only to a supernatural incident, it may be taken as an echo of some actual sea-erosion or a high tidal-wave that lashed a part of the city. But apparently, the entire city was not lost. It was still in a good state even in the 5th Century A. D., when Buddhadatta, the great Buddhist scholar and poet, stayed in a **Vihara** and wrote his Prakrit work, the **Abhidammavatara**. This work described the city thus: "Kaveripattinam is inhabited by men and women of noble descent. The city is complete in all aspects and presented a beautiful ap-

earance. There are many bazaars selling various goods like the precious gems. The city is full of lofty and palatial mansions, beautiful with entrance-towers".

In the 7th Century A. D., Sayavanam and Pallavaneswaram, two suburbs of Kaveripumpattinam, were sung by the Tevaram hymners, Appar and Sambandar. They refer to the places as "Kaveripattinathu Pallavanes-waram" and "Puhar-Sayakkade", clearly making reference to the parent town Puhar. Inscriptions of the 11th and 12th Centuries A. D. found in the temples at Sayavanam, mention the latter place as a part of Kaveripattinam in Nangur Nadu, a subdivision of Rajadhirajavalanadu (261 to 273 of 1911).

**Archaeological Evidence**: The explorations and excavations, conducted by the Archaeological Survey of India since 1962, have clearly established that, inspite of the constant duel between the land and the sea, the ancient city had not been fully engulfed and atleast a few portions of it are still lying buried. Surface exploration on the beach revealed the vestiges of ancient habitations like the ring-wells, pottery, bricks-bats and beads, strewn about the place. The ring-wells were covered by sand Habitation sites, going back to the time when the city was as the zenith of its glory, have been plotted at places like Vanagiri, Neidavasal and Kilaiyur. Square copper coins, bearing the royal crest of the Cholas, viz, the tiger on one side and the elephant on the other, black and-red-potsherds and the beads of semi-precious stones were found on the surface at the sites. Rouletted pottery of both grey and black fabric were also found. A Roman coin was found in the site called Vellaiyan Iruppu. Several beautiful terracotta figurines were found at places like Melapperumpallam, all showing that these places were once the centres of early culture and activities.

Detailed excavations done at three places resulted in the discovery of three monuments of outstanding importance in the history of Tamilnad. They are a brick-built wharf at Kilaiyur, a water-reservoir and a Buddhist monastery.

The wharf was found in a low-lying area and it was built of large-sized bricks (24 x 16 inches) and it was lined with sturdy wooden-poles for anchoring the boats "Pattinappalai" described such wharves where the boats were moored to wooden poles for loading and unloading purposes, like a row of horses kept in a stable. Small boats used to ply in the back-waters of Kaveripumpattinam, carrying salt to the interior places in exchange for paddy. Radio-carbon analysis of the wooden-specimens has given its date as the third century B C.

Another important and elegant structure unearthed was a water-reservoir at Vanagiri. Situated about a mile away from the sea' it was made of an earthern bund with a facade built of bricks. It was beautifully designed with two graceful curves to receive the water and let-into a pond. Probably a small channel from the river Kaveri or one of its numerous offshoots served as the feeding-channel. The paved inlet channel was covered by a corbelled arch.

But perhaps the most significant dis-

covery was that of a Buddhist monastery in the Melaiyur portion of Kaveripumpattinam. An entire wing of a Vihara, consisting of seven rooms, each about 8 feet square, was used for the residence of the Buddhist monks. Adjacent to this was another ornamental structure, perhaps a part of mandapa. The building walls, were decorated with beautiful stucco figures and paintings. On such exquisite, stucco-head, full of artistic grace, was found in the excavations. A fine copper image of the Buddha in dhyana pose was found in one of the rooms. A large lime-stone slab, bearing thesacred feet of the Buddha (Buddha-pada) and other auspicious symbols like the Purnaghata, Swastika etc. is strikingly reminiscent of similar ones found at the famous Buddhist centres of Andhra like Amaravati and Nagarjunakonda with which Kaveripumpattinam was undoubtedly in live contact.

The excavations so far done have clearly established that the sea-erosion had not done full damage to the ancient city and a few portions atleast lie buried in land. As has been observed by Sri K. R. Srinivasan, the two main difficulties that face the excavator in this area are extensive cultivatien and the present-day habitation. These two obstacles are quite formidable and the future excavations depend on finding a successful solution to these problems.

---


**Statement – Form IV**

The following is a Statement of ownership and other particulars about "Aaraaichi" magazine as required under rule 8 of the Registration of News papers (Central) Rules 1956.

| | |
|---|---|
| Title of News paper | ... Aaraaichi |
| Language | ... Tamil and English |
| Periodicity | ... Quarterly |
| Publisher's Name | ... N. Vanamamalai |
| Nationality | ... Indian |
| Address | ... 258. Tiruchendur Road, Palayamcottai, Tirunelveli–2. |
| Place of Publication | -do |
| Printer's Name | ... S Justin Nesamoni C M. S Press. Palayamcottai |
| Nationality | ... Indian |
| Address | ... C. M. S. Press, Tiruchendur Road, Palayamcottai. |
| Editor's Name | ... N. Vanamamalai |
| Nationality | ... Indian |
| Address | ... 258, Tiruchendur Road, Palayamcotta. Tirunelveli–2i |
| Owner's Name | ... N. Vanamamalai. |

I, N. Vanamamalai hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief

1–5–72 }
Palayamcottai }

(Sd) *N. Vanamamalai.*

